

ஸ்ரீ:



ஸ்ரீமதே [illegible] மஹாதேசிகாய நம:

ஸ்ரீமதே நிகமாந்தமஹாதேசிகாய நம:

ராமாநுஜதயாபாத்ரம் ஜ்ஞாநவைராக்யபூஷணம் ।
ஸ்ரீமத்வேங்கடநாதார்யம் வந்தே வேதாந்ததேசிகம் ॥
லக்ஷ்மீநாதஸமாரம்பாம் நாதயாமுநமத்யமாம் ।
அஸ்மதாசார்யபர்யந்தாம் வந்தே குருபரம்பராம் ॥

யோ நித்யமச்யுதபதாம்புஜயுக்மருக்மவ்யாமோஹதஸ் ததிதராணி த்ருணாய மேநே । அஸ்மத்குரோர்பகவதோஸ்ய தயைகஸிந்தோ: ராமாநுஜஸ்ய சரணௌ சரணம் ப்ரபத்யே ॥

மாதா பிதா யுவதயஸ் தநயா விபூதி: ஸர்வம் யதேவ நியமேந மதந்வயாநாம் । ஆத்யஸ்ய ந: குலபதேர் வகுளாபிராமம் ஸ்ரீமத் ததங்க்ரியுகளம் ப்ரணமாமி மூர்த்நா ॥

பூதம் ஸரஶ்ச மஹதாஹ்வய பட்டநாத ஸ்ரீபக்திஸார குலசேகர யோகிவாஹாந் । பக்தாங்க்ரிரேணு பரகால யதீந்த்ரமிஶ்ராந் ஸ்ரீமத்பராங்குஶமுநிம் ப்ரணதோஸ்மி நித்யம் ॥

---

பிள்ளைலோகஞ்சீயரருளிச்செய்த,

முதற்றிருவந்தாதித் தனியன் வ்யாக்யாநம்.

அவதாரிகை:— (கைதைசேரித்யாதி) இவ்வாழ்வார் "கூஜதி ஶ்ரவணே நாம தேந தத்ராக்ஷிதாஹரி:। துலாக்ருகாஞ்சி விக்யாதா பாஞ்சஜந்யவிவர்த்தநீ" என்னும்படியான காஞ்சீபுரியில் புஷ்கரிணியில் புஷ்பத்திலே விஷ்வக்ஸேநாத்

திலே ஆவிர்பவித்து திவ்யப்ரபந்தமுகேந லோகத்தில் அஜ்ஞாநாந்தகாரத்தைப்போக்கி வாழ்வித்தபடியைச் சொல்லுகிறது- இதில்.

முதலியாண்டானருளிச்செய்த தனியன்.

கைதைசேர்பூம்பொழில்சூழ் கச்சிநகர்வந்துதித்த* பொய்கைப்பிரான்கவிஞர்போரேறு* வையத்தடியவர்கள்வாழவருந்தமிழ் நூற்றந்தாதி* படிவிளங்கச்செய்தான் பரிந்து.

வ்யா— (கைதைசேர்பூம்பொழில்சூழ் கச்சிநகர்வந்துதித்த பொய்கைப்பிரான்) இத்தால் இவர் ஜந்மவைபவஞ்சொல்லுகிறது. கைதை- கேதகை, தாழை. 'கைதவேலிமங்கை' என்றும் 'கொக்கலர்தடந்தாழைவேலி' என்றும் சொல்லுமாப்போலே அதுதான் நீர்நிலங்களிலேயாய்த்து நிற்பது. 'தாழைதண்ணாம்பல் தடம்பெரும்பொய்கைவாய்' என்னும்படி அம்பூந்தேனிளஞ்சோலைசூழ்ந்த கச்சிவெஃகாவில் பொய்கையிலே எம்பெருமான்பொன்வயிற்றிற் பூவைபோன்ற பொற்றாமரைப்பூவிலே ஐப்பசியில் திருவோணநாளாய்த்து இவரவதரித்தது. பத்மஜனான பூவனைப்போலேயாய்த்துப் பொய்கையாரான இவர்பிறப்பும். 'வந்துதித்த' என்கையாலே ஸூர்யோதயம்போலேயாய்த்து இவருதயமும். 'வருத்தும்புறவிருள்மாய்த்த பொய்கைப்பிரான்' என்னக்கடவதிறே. பொய்கையிலே ப்ரகாசிக்கையாலே அதுவே நிரூபகமாயிருக்கை, அதுதான் ஸாரஸ்வதி ப்ரவாஹிநியாய்ப்ரவஹித்தஸ்தலமாய்த்து; தத்தீரமான பொய்கையென்கை. (பொய்கைப்பிரான்) மருபூமியில் பொய்கைபோலேஎல்லார்க்குமுபகாரகராயிருக்கை. தீர்த்தகராய்த்திரியுமவரிறே. கவிஞர்போரேறாவது:— கவிச்ரேஷ்டரென்றபடி. முதலாழ்வார்கள் மூவரிலும் முதலானவராகையாலே 'ஆதிகவி' என்னும்படியான அதிசயத்தையுடையராயிருப்பர். படைத்தான் கவியாலும், பரகாலஸூக்தியாலும் 'செஞ்சொற்கவிகாள்' என்றும் 'செந்தமிழ்பாடுவார்' என்றும் கொண்டாடப்படுமவருமாய் நாட்டிற் கவிகளுக்கும் விலக்ஷணகவியாயிருப்பர். 'இதுபொய்கை

யார்வாக்கினிற்கண்டுகொள்க' என்றிறே தமிழ்கூறுவது. அந்த வேற்றமெல்லாவற்றையும்பற்ற 'கவிஞர்போரேறு' என்கிறது. ஸர்வவிஷயவைலக்ஷண்யத்தையுடையவர் வைஷ்ணவர்கள் வாழும்படி ஸ்நேஹத்தாலே விலக்ஷணப்ரபந்தநிர்மாணம் பண்ணினபடி சொல்லுகிறது (வையத்தடியவர்கள்வாழ வருந்தமிழ் நூற்றந்தாதி படிவிளங்கச்செய்தான் பரிந்து) என்று வையத்தடியவர்களாகிறார்- ஸம்ஸாரரான ஸ்ரீவைஷ்ணவர்கள், அவர்கட்கேயிறே வாழவேண்டுவது. வானத்தணியமரர்க்கு வாழ்வு நித்யமாயிறேயிருக்கிறது; இத்தாலே இவர்கள் வாழ்கையாவது- சேஷத்வவிபவத்தை ஸ்வாநுஸந்தாநத்தாலே யுண்டாக்குமதான ப்ரபந்தமென்கை. 'நின்தாளிணைக்கீழ்வாழ்ச்சி' என்னக்கடவதிறே. இவ்வநுஸந்தாநமே வாழ்வாகவுமாம் அருந்தமிழ் நூற்றந்தாதியாவது— ஸ்வநிர்ணயத்தில்வந்தால் அரிதாய், தமிழானப்ரகாரத்தாலே ஸுலபமாய், அதுதான் நூறுபாட்டாய், அந்தாதியாயிருக்கை. உடையவர் நூற்றந்தாதிக்கேற்றம் எட்டுப்பாட்டாயிருக்கும். (அருந்தமிழ்நூற்றந்தாதி) அதுதான் வெளிறாயிருக்கை யன்றிக்கே அரிதாய், ஸம்ஸ்க்ருதமாயிருக்கையன்றிக்கே ஸுஸம்ஸ்க்ருதமான த்ராவிடமாய், ஆயிரம்ஐந்நூறாயிருக்கையன்றிக்கே நூறாயிருக்கை. அன்றிக்கே வையத்தடியவர்கள்வாழ வரும் தமிழ்நூற்றந்தாதி என்றுஆகவுமாம். அப்போது வையத்தடியவர்கள் வாழவருமதான தமிழ்நூற்றந்தாதி என்று நிர்வஹிக்கக்கடவது. நூற்றந்தாதிபடிவிளங்கச்செய்கையாவது— 'வையம்தகளியா' என்றுதொடங்கி ஓரடியைமுடிவாகவருளிச்செய்த திவ்யப்ரபந்ததீபத்தாலே ஸர்வதேசமெங்கும் நிர்மலமாம்படி நிர்மித்தாரென்கை. வருத்தும்புறவிருள்மாற்ற வெம்பொய்கைப்பிரான் மறையின் கருத்தின் பொருளையும் செந்தமிழ்தன்னையுங்கூட்டி ஒன்றத்திரித்தன்றெரித்த திருவிளக்காகையாலே படியிலே. ஸந்நிதியிலே, ப்ரகாசிக்கும்படி செய்தருளினாரென்றாகவுமாம். அன்றிக்கே 'படி' என்று உபமாநமாய் த்ராவிடவேதத்துக்குப்படி சந்தமாயிருக்

கும்படி செய்தருளினரென்னவுமாம். விளக்கம்- ப்ரகாசம், 'படி' என்று விக்ரஹமாய் 'திருக்கண்டேன் பொன்மேனிகண்டேன்' என்னும்படி கண்டறியும்படி செய்தாரென்றாகவுமாம் புரிவுடனே செய்கையாவது— சேர்ந்தவிஷய ஸ்நேஹத்தாலே யென்னுதல் பரவிஷயஸ்நேஹத்தாலே யென்னுதல் 'செய்யசுடராழியானடிக்கே சூட்டினேன்சொன்மாலை' என்றாரிறே. ஸ்நேஹத்தாலேயிறே விளக்கெரிவது. இத்தால் அவர் திவ்யப்ரபந்தத்தால்வந்த உபகாரமளவுஞ்சொல்லி யீடுபட்டதாய்த்து.

தனியன்வ்யாக்கியானம்முற்றிற்று.

ஸ்ரீ.

ஸ்ரீமதேராமாநுஜாயநம:.

இயற்பா

# முதற்றிருவந்தாதி.

அப்பிள்ளையுரையின் அவதாரிகை.

ஸ்ரீய:பதியாய் ஸ்வாபாவிகஸமஸ்தகல்யாணகுணாத்மகனான ஸர்வேஶ்வரன் நித்யவிபூதியிலே நித்யாஸங்குசிதஜ்ஞாநரான நித்யஸூரிகளை நித்யகைங்கர்யங்கொண்டு நித்யாநந்தியாயிருக்கச்செய்தேயும் அவர்களைப்போலே கைங்கர்யநிரதராய் வாழுகைக்கு இட்டுப்பிறந்துவைத்து அதுக்ககலாய் அவித்யாகர்மவாஸநாருசி ப்ரக்ருதி பரவசராய்ப் பரிப்ரமிக்கிற ஸம்ஸாரிசேதநரைத் திருத்திப் புண்ணிக்கொள்ளுகைக்காக, இவர்கள் அழிந்துகிடக்கிற ஸமயத்திலே ஸ்வாஶ்ரயணோபகரணமான கரணகளேபரங்களைத் தன்கருணையாலே கொடுத்தருளி அவற்றைக்கொண்டு வழிதப்பியாதே நல்வழிநடக்கைக்குடலாக ஶாஸ்த்ராதிஶாஸ்த்ரங்களைப் ப்ரவர்த்திப்பிக்க, அவற்றை திரஸ்கரித்து ஸ்வைரம் ஸஞ்சரி

க்கிரஹசெய்யிலே ஸாக்ஷாத்ரூபேண வந்தவதரித்தரு
ளி உபதேசாநுஷ்டாநங்களாலும் ரூபௌதார்ய ஸு
சேஷ்டிதங்களாலும் வசீகரித்து இவர்களைத் திருத்தப்பார்த்தவி
டத்தில் அவற்றுக்கு வசப்படாதபடி இதரவிஷயங்களிலே மம
ண்டி இவர்கள் நஷ்டகல்பராய்ப் போக்கக்கண்டபடியாலே ஆழ்
வார்களைக்கொண்டு இவர்களைச் சேர்த்துக்கொள்வானாக, ஆமு
தல்வரான முதலாழ்வார்களை ஸஜ்ஞாநாவதரிப்பித்தருளினான்.
இவர்களாகிறார்- ஸர்வேச்வராகஸ்மிக கடாக்ஷவிசேஷ லப்தமான
ஜ்ஞாநவைராக்யங்களைக் குறைவறவுடையராய் நித்யஸூரிகளை
ப்போலே பிறப்பேபிடித்து ஸர்வேச்வராநுபவத்திலே பழுத்து ஸம்
ஸாரயாத்ரையிற் கண்ணற்று 'இன்கவிபாடும் பரமகவிகள்'
என்றும் 'செந்தமிழ்பாடுவார்' என்றும் நாவீறுடைய பெருமா
ளும் நாலுகவிப்பெருமாளுங் கொண்டாடும்படியான வேண்ட
ப்பாடுடையராய் பரத்வாதிகளைந்தையும் ஒருக்காலேகண்டும
ண்டி அநுபவிக்கும் சதிரையுடையராயிருக்கச்செய்தே ஆ
றுபெருக்கெடுத்து எங்குமொத்துப்போகாநிற்கநீர்க்கு நோக்கு
ஓரிடத்திலேயாயிருக்குமாப்போலெ திருவுலகளந்தருளினவிட
த்திலும் திருமலையிலும் கால்தாழ்ந்து அநுபவித்துப்போரு
மவர்களாய் அறிவுண்டாயிருக்க ஸர்வவிஷயத்தைக் காற்க
டைக்கொண்டு இதரவிஷயங்களிலே மண்டித்திரிகிற ஸம்ஸா
ரிகளோட்டை ஸஹவாஸம் அஸஹ்யமாய் அவர்கள்வஸிக்
கிற நாட்டைவிட்டு அறிவுக்குஅடைவில்லாத ச்வாபதங்கள்வ
ஸிக்கிற காட்டைவிரும்பி அவ்விடத்திலும் யத்ரஸாயங்க்ரு
ஹராய் ஒருவரையொருவர் அறியாதபடி மறைந்து வஸித்
தார் சில தேஹாவசேஷர்களாய்த்து, இப்படிவஸிக்கிற இவர்
கள்மூவரும் யாத்ருச்சிகமாக ஒருநாள் திருக்கோவலூர்ப்ரதேச
த்திலே வந்துஸங்கதராக அவ்வளவிலே பெருமழையும் பெ
ருங்காற்றும் ப்ரவ்ருத்தமாக அதைக்கண்டு மழைக்குஒதுங்கி
ஓரிடைகழியிலே ஒருவர்புக்குக்கிடக்க; மற்றையவர்வந்து 'திறக்
கவேணும்? என்ன; ஒருவர்கிடக்க இடம்போரு மத்தனையென்ன;

'ஒருவர்கிடந்தவிடம் இருவர்க்கு இருக்கலாங்காணும் திறவும்?' என்ன; 'ஒருவர்மூச்சுஒருவர் பொருதஸம்ஸாரத்திலே இப்டிசொன்ன இவர் கேவலரல்லர்' என்றுதிறக்க அவரும்புகுந்து இவ்விருவருமாக இருக்கிறவளவிலே மற்றையவரும்வந்து திறக்கச்சொல்ல; 'எங்களிருவர்க்கும் இருக்கவிடம் போருமத்தனை' என்ன 'இருவரிருந்தவிடம் மூவர்க்குநிற்கலாம் திறவும்' என்ன இவரும்கேவலரல்லர் என்றுதிறக்க; இவர்கள்மூவரும்கூடி நிற்கச்செய்தே ஸர்வேஶ்வரன் தானும்பிராட்டியுமாகவந்து தனித்தனியேஇவர்களைப் பின்பற்றித்திரிந்த நெஞ்சாறல்தீர இவர்கள் மூவர்க்கும் நடுவேபுக்குநெருக்க நம்மூவரையுமொழிய வேறுபுக்கு நெருக்குகிறவர்கள்யார்? என்று விளக்கேற்றிப்பார்க்கவேணும் என்ன; அவர்களிலேயொருவரான பொய்கையார் லீலாவிபூதியில் கார்யகாரணரூபமான ஸமஸ்தவஸ்துக்களும் பகவததீநமாயிருக்கிறபடியை பரபக்திரூபாபந்நஜ்ஞாநத்தாலே தர்ஶித்து அத்தை ஒருவிளக்காகரூபித்துக்கொண்டு அநுபவபரீவாஹரூபமாக வையந்தகளி யருளிச்செய்தார். அநந்தரம் ஸ்ரீபூதத்தார் வையந்தகளிகேட்கையாலே அந்த பரபக்திரூபாபந்நஜ்ஞாநம்முற்றி பகவத்தத்வத்தை விஶதமாக தர்ஶிக்கைக்கு உபகரணமான பரஜ்ஞாநமாகிற உஜ்ஜ்வலதீபத்தை யேற்றுகிறவழியாலே அன்பேதகளியருளிச்செய்தார். அநந்தரம் மூன்றுமாழ்வார்- அவனை யநுபவிக்கப்பெறில் தரித்தும் பெறாவிடில் மூச்சடங்கும்படியான பரமபக்தியையுடையராய்க்கொண்டு அவன்படிகளைக் கட்டடங்கக்கண்டு மண்டியநுபவிக்கிறவழியாலே திருக்கண்டேனருளிச்செய்தார்.

ஜ்ஞாநபக்திஸாக்ஷாத்காரங்கள் மூன்றும் ப்ரபந்தத்ரயத்துக்கும் தாத்பர்யமாக ஆசார்யர்களருளிச்செய்திருக்க, விரோதமாக விங்ஙனே சொல்லலாமோ? வென்னில்; அதுக்குக்குறையில்லை. அங்கு ஜ்ஞாநமென்கிறது- பரபக்திரூபாபந்நஜ்ஞாநத்தை, பக்தியென்கிறது- பரஜ்ஞாநதஶாபந்நமான ப்ரேமத்தை, ஸாக்ஷாத்காரமென்கிறது- பரஜ்ஞாந விபாகரூ

வேயான வாஸக்தியை, கர்ப்பதோஷாநாஸமாக ஞாநகி த்து அது ஸ்ரோதாவாஸநாஷ்வரமாவளுமாய் முற்றி சுந் தரம் 'ஓர்ஷய்' என்னும்படி ஸாக்ஷாத்காரரூபமாய் சுந் தரம் விஷயவைலக்ஷண்யத்தை சுவகாஹித்து பக்திரூபா வளுமாய், பின்னை வாஸக்யாதிகளாக வரிவக்குமாம். ஸர் ஜாணிகர்படியில் இவர்களுக்குமுதலிலே சுவயமில்லையிறே. கர் ஞாநர்நாரு ஸீவேதயான பக்தியினுடைய ஸ்தானத்திலே ஸ மவகல்யாஸம்நின்று சுநதரம்விளைந்த வாஸக்தியாய்த்து இவரது, என்றிறே ஸ்ரயசோவாயர்ரான ஆழ்வாருக்கு ஆசா யர்களருளிச்செய்வது; அது அல்லாத ஆழ்வார்களுக்கும் ஒக் குமிறே. அல்லாதபோது ஆழ்வார்களெல்லாரும் ஸகவ்யக்தி களென்னப்போகாதே; ஆகையால் விரோயமில்லை.

வாஸக்யாதிகள்மூன்றும் ஒரொருவர்க்கே குறைவறவுண் டாயிருக்கச்செய்தேயும் ஒரொருத்தர்க்கு ஒவ்வொன்றிலே ஊ ற்றமாயிருக்கும். ஸமவகல்யாணகுணாதிகளெல்லாம் எல்லார்க்கும் சுநுஸாவ்யமாகாநிற்கச்செய்தே ஒரொன்றில் ஒவ்வொருத்தர் க்கு ஊற்றம்சொல்லுகிறுப்போலே சுநுஸவாஹிநிவேஸரூ வேயான வாஸக்யாஷ்வவேஷகளிலும் தனித்தனியே ஊற் றஞ்சொல்லக் குறைவில்லை. கதர்வேஸமுண்டாயிருந்ததேயா கிலும் ஒருவனுக்கே கர்மத்தாலே பிறக்கக்கடவ வாஸக்யாஷ்வ ஸாத்யமும் தளமாக ஸ்ரவமய்த்யமும் சுவதரிக்கையாலே சுஸர்க்ருபைப்பார்த்தால் ஸகவ்யவமயமாய்த் தலைக்கட்டக்கட வது. வரவேர்த்தர ஶீராமவேஸகளுக்கு கதர்வேஸமுண் டாயிருக்கச்செய்தே வெஷாவேஷ்கவ்யவமய வ்யாவ்யாநரூ வமாகையாலே ஸ்ரவமயெக்யம் கொள்ளுகிறுப்போல் இங் கும் ஸ்ரவமயெக்யம் கொள்ளத் தட்டில்லை.

முதற்பாட்டு.

விசித்ரகாயர்மான ஜகத்துக்குக் காரணமாம்போது விசித்ரஜ்ஞாநஸக்தியுக்தனைப் ஸம்வஜ்ஞாதி ஶிவ்யாயயாள ன ஸவேஸ்வரனே காரணமாகவேணும் என்னும் சுநுஸாநத்

மூ— வையந்தகளியாவார்கடலேநெய்யாக* வெய்யகதிரோன்விளக்காக* செய்யசுடராழியானடிக்கே சூட்டினேன்சொல்மாலை* இடராழிநீங்குகவேயென்று.

---

தாலே ஜகத்காரணவஸ்துவை நிர்ணயியா நின்றுகொண்டு ஸர்வஶேஷியான ஸர்வேஶ்வரன்திருவடிகளிலே ஸ்வரூபாநுரூபமான வாசிககைங்கர்யம் பண்ணப்பெற்றேனென்று க்ருதார்த்தராகிறார்.

'காரியவாநுமேயாவிஷ்க்ருதி:' என்கிறபடியே ஸர்வஜ்ஞஸர்வஶக்த்யாயத்தமான காரியத்தைப்படைத்தான, (வையம்) ப்ருதிவியானது, மேல்நெய்யும்திரியுமாக ரக்ஷிக்கப்படுகிற வஸ்துக்களுக்காதாரமான, (தகளியா) தகளியாகவும், (வார்) அந்தப்ருதிவியைச்சுற்றுஞ்சூழ்ந்து ஆவரணமாய், 'தேநவ்ருதீ ஸமந்தாதாஜலதோ:' என்கிறபடியே ஸர்வேஶ்வராஜ்ஞயாலே கரையை அதிக்ரமியாமல் அதுக்குள்ளே யடங்கிக்கிடக்கிற, (கடல்) கடலின்நீரான அம்பஸ்ஸானது, மேல்ஏற்றப்போகிற விளக்கை உத்தேதாதாரம் ஒளிவிட்டுக்கிளரப்பண்ணும், (நெய்யாக) நெய்யாகவும், கிரணஸேவேந ஶோஷிக்கப்பட்ட ஜலத்தாலே அபிவ்ருத்தமாய், (வெய்ய) உத்தாபகமான, (கதிரோன்) கிரணங்களையுடையனாய், 'ஸ்ரீஶோதசதிவாகர:' என்கிறபடியே ஸர்வேஶ்வராஜ்ஞைக்குநடுங்கி முப்பதுவட்டம் உதிப்பதும் அஸ்தமிப்பதுமாய்த் திரியக்கடவ ஸூர்யன், (விளக்காக) அந்தகாரநாஶகமான விளக்காகவும், இருளன்னமாமேனிக்கு விளக்கேற்றினாப்போலே பகைத்தொடையாக, (செய்ய) சிவந்த, (சுடர்) ஒளியையுடைய, (ஆழியான்) திருவாழியாழ்வானை நிரூபகமாகவுடைய ஸர்வேஶ்வரனுடைய, (அடிக்கே) திருவடிகளிலே, (இடராழி) நித்யகைங்கர்யம் பண்ணப்பெறாதவென்னுடைய ஸம்ஸாரஸாகரமானது, (நீங்குகவென்று) விட்டுநீங்கும்படியாக, தக்ஷணவேஷ்டிதங்களை உள்ளீடாகவைத்துத் தொடுத்த நிரதிஶயபோக்யமான, (சொல்மாலை) ஶப்தஸந்தர்பங்களை, (சூட்டினேன்) அவற்றுக்கு அலங்காரமாம்படி

௨- ஸாக்ஷாத்கரிக்கப் பெற்றேன்.

இவ்விஷயத்தை யறியப்பெறுமல் சுகதுக்கராய் நோவுப்படுகிற ஸம்ஸாரிகளுக்கு பரவஸ்து ஸர்வப்ரகாசகமான இப்ப்ரபந்தப்ரகாசத்தாலே ஜ்ஞாநமான ஸம்ஸாரநாசம் பிறக்கவேணுமென்று 'சொன்மாலைசூட்டினேன்' என்றுமாம். இப்படி விசித்ரப்ரபஞ்ச நிர்மாணசமர்த்தமான ஜ்ஞாநசக்த்யாதிகுண விசிஷ்டத்ர்யாதிகங்களும் ஸம்பந்தாதிகாரியானுள் ஸர்வேஶ்வரனே ஜகத்காரணம் என்னும் சுருதிவாக்யத்தாலே காரணவஸ்துவை நிர்ணயித்தாராய்த்து. 'ஶாஸ்த்ரயோநித்வாத்' என்று சூத்ரகாரர் உபதேசித்திருக்கச்செய்தே இவர் சுருதிவாக்யத்தாலே காரணவஸ்துவை நிர்ணயம்பண்ணுவானேனென்னில்? 'பூர்வாபராபாதிதவேதஶாஸ்த்ராவிரோதிநா। யஸ்தர்க்கேணாநுஸந்தத்தே ஸ தர்மம் வேத நேதர:' என்று வேதஶாஸ்த்ரங்களோடு விருத்தமான தர்க்கத்தையழித்து அவ்விருத்தமானதர்க்கத்தை ஸ்வீகரிக்கையாலே இங்கும் அப்படி விரோதப்ரஸங்கம்சொல்ல இடமில்லை. 'ந்யாயாநுக்ருஹீதஸ்ய வாக்யஸ்யார்த்தநிர்ணாயகத்வாத்' என்றிறே ஸ்ரீபாஷ்யகாரரருளிச்செய்தது. ப்ரத்யக்ஷாதிகளாலே லீலாவிபூதியை உபலக்ஷிக்கிறது. 'சுடராழி' என்று நித்யவிபூதிக்கு உபலக்ஷணம். 'அடிக்கே' என்று திவ்யமங்களவிக்ரஹத்துக்கு உபலக்ஷணம். இப்படி ஸ்வபக்ஷத்தைஸிக்ஷிக்கவே 'ஸவிஶேஷவஸ்துவேதகம்' என்றும் 'நிர்விஶேஷவஸ்துவேதகம்' என்றும் 'விஶேஷணாம்ஶவிஶிஷ்டவஸ்துவேதகம்' என்றுஞ்சொல்லப்படுகிற பரபக்ஷங்கள் நிராகரிக்கப்பட்டனங்கள். (௧)

இரண்டாம்பாட்டு.

அ—இப்படி சுருதிப்ரமாணங்கொண்டு வருத்தத்துடனே அவனுடையபரத்வம் அறுதியிடவேணுமோ? அவன் விபூதிவிஷயமாகப்பண்ணியருளின உமிழ்ந்தவையங்கே திவ்யசேஷ்டிதங்களோரொன்றே அவனுடைய பரத்வத்தைத் அறுதியிட்டுத் தாராதோ? வென்கிறார்—

மூ— என்று கடல்கடைந்ததெவ்வுலகம்நீரேற்றது * ஒன்று மதனையுணரேன்நான் * அன்றதடைத்துடைத்துக்கண்படுத்த வாழி * இதுநீபடைத்திடந்துண்டுமிழ்ந்தபார். (உ)

உ- தன்னையுபாஸிக்கதேவர்கள் அபேக்ஷிதஞ் செய்கைக்காக 'அண்ணல்செய்தலைகடல்கடைந்து' என்னும்படி தன்னுடைய ஸௌலப்யந்தோற்ற, (கடல்கடைந்தது) கடல்கடைந்தருளிற்று, (என்று) எத்தனைநாளுண்டு என்றும், ஸங்க்யாதீதமான காலமாகப் போருமதிசயமான வியாபாரத்தை ஸ்ரவணம்பண்ணி வஸ்துக்களெல்லாம் ஐந்த்ரமாக்கும்படி ஸ்வாமியாய்க்கொண்டு, (நீரேற்றது) மஹாபலிபக்கலிலே நீரேற்றளந்துகொண்டது, எ- எந்த, (உலகம்) லோகமென்றும், அவ்வோசெயல்களிலே குமிழ்நீருண்ணக்கடவதான, (அதனை) அந்த திவ்யசேஷ்டிதத்தை, (ஒன்றும்) ஏகதேசமும், (நான்) யான், (உணரேன்) அநுஸந்திக்க மாட்டுகிறிலேன், (அன்று) ராவணன் திருவினைப்பிரித்தவன்று, 'ஸீதாபஹாரவைஸ்வரூப்யமஹோதாதீ' என்கிறபடியே தந்த்ரவொழுங்காக தஜ்ஜாதீயமான ஸமுத்ரத்தை- (அடைத்து) மலைகளாலேயடைத்து, (உடைத்து) அங்குள்ளவர்கள் இங்குவந்து நலியாதபடி யந்த்ரகோடியாலே யுடைத்து, எழுப்பிக்காயம்கொள்ளலாம்படி- (கண்படுத்த) கண்வளர்ந்த, (ஆழி) கடலாகும், (அது) அந்தக்கடல், (நீ) ரக்ஷ்யவர்க்கரக்ஷணத்திலே நித்யதீக்ஷிதனுயிருக்கிற நீ, (படைத்து) அழிந்தவன்று ஸ்ருஷ்டித்து, (இடந்து) சுவாஹாரவராஹாவதாரத்திலே இடந்தெடுத்து, (உண்டு) மேல்வருபிரளயத்தில் அழியாதபடி திருவயிற்றிலேவைத்து, (உமிழ்ந்த) வெளிநாடுகாணப்புறப்படவிட்டு, இப்படிஉன்கையிலே பரத்திபட்ட பன்னிரண்டும் பட்டுக்கிடக்கிற, (பார்) ஜமியாக்கும், (இது) இந்தஜமி.

'கண்டவாற்றால் தனதேயுலகென்நின்றான்' என்கிறபடியே இவ்வோதிய சேஷ்டிதங்கள்தானே அவனே ஸர்வாயிகனென்னுமிடத்தைக காட்டுகிறதில்லையோ? என்கை 'என்று' என்கை

மூ— பாரா ளவு மோரடிவைத் தோரடியும் பாருடுத்த* நீர ளவுஞ்செல்லநிமிர்ந்ததே* சூருருவின்பேயளவுகண்டபெருமான் அறிகிலேன்* நீயளவுகண்டநெறி. (௩)

உ- யாலே திரையும் நுரையும் இப்போதும் மாறிற்றில்லையென்கை. 'எவ்வுலகம்' என்கையாலே அளந்தஅடிச்சுவடு இப்போதும் அப்படியே எடுக்கலாயிருக்கை. (உ)

மூன்றும்பாட்டு.

அ— 'எவ்வுலகம்நீரேற்றது' என்றுசொன்ன திருவுலகளந்தருளின திவ்யசேஷ்டிதத்திலே திருவுள்ளஞ்சென்று அத்தை அநுஸந்திக்கப்புக்கவிடத்தில் நிலைகொள்ளமாட்டாமல் அதிலேகிடந்தலைகிறார்.

(ஓரடி) அதிஶோபமான அழகையுடைய ஒருதிருவடியை, 'படிக்களவாகநிமிர்த்த' என்கிறபடியே (பாரளவும்) ஸமஸ்தபூமியுள்ளவளவேநிற்கும்படி, (வைத்து) குசைதாங்கிவைத்து, (ஓரடியும்) அத்தோடு தாரதம்யமில்லாம்பண்ணலாம்படியான மேலேயெடுத்த மற்றொருதிருவடியும், (பார்) அண்டகடாஹத்தை (உடுத்த) ஆழ்ந்த, (நீரளவும்செல்ல) ஆவரணஜலத்தளவும்செல்ல (நிமிர்ந்தது) வளர்ந்ததிறே, தன்வடிவைமறைத்து, (சூர்உருவின்) தெய்வநங்கையான யஶோதை வடிவுகொண்டுவந்து, (பேய்) பூதனையை, அவள்நினைவு அவளோடேபோம்படி, (அளவுகண்ட) அளவிட்டுமுடித்தசெயலாலே (பெருமான்) ஜகத்துக்குஶேஷியானவுன்னை நோக்கித்தந்தவனே, (நீ) நீ, (அளவுகண்ட) அளந்துகொண்ட, (நெறி) வழியை, (அறிகிலேன்) நான்இன்னபடியென்று அறியமாட்டுகிறிலேன்.

இச்செயலை அநுஸந்தித்தால் அதிலே ஆழங்காற்படுமதொழிய அளவிட்டு அநுஸந்திக்கமாட்டுகிறிலேனென்று கருத்து. 'சூருமணங்குந்தெய்வப் பெண்பெயர்' என்கிறபடியே திவ்யாகாரையான பேயென்றபடி. "பேயளவுகண்ட" என்றவித்தால் ஸூயத்தத்தாலே அவனையறியப்புகில் பூதனைபட்டது படுவரென்றுகருத்து. 'அறிகிலேன்நீயளவுகண்டநெறி' என்கிறது

மூ— நெறி வாசல்தானேயாய் நின்றனை* ஐய்ந்து பொறிவா சற்போர்க்கதவஞ்சாத்தி*- அறிவானும் ஆலமரநீழலறம்நால்வர்க் கன்றுரைத்த*ஆலமமர்கண்டத்தரன். (ச)

நீ என்கிறத்தில் நினைக்கிறசாமர்த்யம் என்னவென்று அறிகிறிலே னென்றுமாம். (௫)

நாலாம்பாட்டு.

அ—அவனருளடியாகவந்ததெளிவால் குறைவற்றநானுமுட்பட நீஞ்சிக்கரையேறமாட்டாமல் கிடந்தலையாகிற்க ஸ்யதந்த்ரவே வந்த ஜ்ஞாநஶக்திகளைப் போரப்பொலியநினைத்து ஒருவனையறிய ஒருப்படுவதே! என்னமதிகேடனோ! என்று ருத்ரனைக்ஷேபி க்கிறார்-

(ஆலமரநீழல்) வடவ்ருக்ஷச்சாயையிலே, (அறம்) ஸமவஸ்த ஸசாஸ்த்ரயண ரூபமானயர்த்தத்தை, (நால்வர்க்கு) ஸநக ஸநந்த ஸநத்குமார ஸநத்ஸுஜாதர்களாகிற நாலுஶிஷ்யர்களுக்கும், (அன்று) ஸமவவிஷயத்தில் உவ்வக்குழிபிட இழிந்தவன்று, (உரைத்த) ஸமவவிஷயத்தை மறுபாடுருவும்படி உபதேசித்துச் சொல்லவல்ல பேரளவுடையார் பண்ணக்கடவ உபதேசத்தை ப்புண்ணி சூவாயம்வசம் நிவர்த்திக்தோம் என்றிருக்கும் பெரிசறிவாளனாய் க்ஷீராப்திமதநஸமயிற்பிறந்த (ஆலம்) ‘ஹாலாஹலம்’ என்கிறவிஷத்தை, (அமர்) நாராயணனுடைய ஆஜ்ஞையா லே கழுத்திலேயடக்கி, (கண்டத்து) காலகண்டனென்று விரு துபிடித்துத்திரியும் பெருமிடுக்கனாய், (அரன்) ஸம்ஹாரத்திலே ஶக்தியுக்தனாக ஸஹிதனாயிருக்கிற ருத்ரன், (ஐந்து) ஶ்ரோ த்ராதிரூபமாண ஐந்துவகைப்பட்டிருப்பதாய், விஷயங்களா கிற வரைநாற்றத்தைக்காட்டித் தன்னுடன்சேர்ந்தாரை முடிக் கும்- (பொறி) யந்த்ரகல்பமான, (வாசல்) இந்த்ரியத்வாரங்க ளில், (போர்) அடைக்கப்புக்கவர்கள் வேகத்திலே அறைந்து போருகிற, (கதவம்) கதவை, (சாத்தி) வருத்தத்தோடேயடை த்து, (நெறி) உபாயமும், (வாசல்) தத்ஸாத்யமானவாசலெ ல்லாம், (தானேயாய்) ஸ்வதந்த்ரஸாத்யனான தானேயாய்க்கொண்டு

மூ— அரன்நாரணன்நாமம் ஆன்விடைபுள்ளூர்தி*உரைநூல் மறை உறையுங்கோயில்*வரைநீர் கருமமழிப்பளிப்பு

(நின்றானை) நின்றஸர்வேஶ்வரனை, (அறிவானும்) ஸ்வயந்ஸித்தமான தன் ஜ்ஞாநஶக்த்யாதிகளைக்கொண்டு அறிவதாக இருக்கிறானும்.

என்ன ஸுஜ்ஞனோவென்று ஶஹிக்கிறார் 'நெறிவாசல்' என்று ஸ்வபாவாநுஸ்வபாவமான உபாயமென்னவுமாம். (௪)

அஞ்சாம்பாட்டு.

அ— நாட்டங்க ணுத்ரனேஸர்வலோகாயிகன் என்று அறுதியிட்டு அவன்காற்கீழ்த்தலை மடுத்துப்போற்றுவது புகழுவதாயன்றோ போருகிறது நீர் அவனை க்ஷேபிக்கக்கடவீரோ? என்ன; ருத்ரனுடைய ஸுநீஶ்வரத்வமும் எம்பெருமானுடைய ஸர்வேஶ்வரத்வமும் தத்தத்வாஹநாதி ஸ்வபாவங்கள்கொண்டே அறுதியிடலாமென்கிறார்.

பிணஞ்சுடு தடிபோலே கண்டதடைய அழிக்கையேதொழிலாகவுடையவனென்னுமிடத்தைத் தெரிவிக்கிற- (அரன்) ஹரனென்று, (நாமம்) ஒருவனுக்குப்பேர், ஸகலவஸ்துக்களையும் உள்ளும்புறம்புமொக்க வ்யாபித்து ஸத்தையை நோக்குமென்று அறிவிக்கிற- (நாரணன்) நாராயணனென்று, (நாமம்) ஒருவனுக்குப்பேர், (ஆன்விடை) அழிவுகேட்டுக்கு நிதர்ஶநமாகச்சொல்லப்படும் ரிஷபமே, (ஊர்தி) ஒருவனுக்கு வாஹநம், (புள்) 'த்ரயீமய:' என்றுசொல்லப்படுகிற வேதாத்மாவான பெரியதிருவடி, (ஊர்தி) ஒருவனுக்குவாஹநம், (உரை) ஒருவனைச்சொல்லும்ப்ரமாணம், (நூல்) வேதவிருத்தார்த்தத்தைச்சொல்லும் பாஹ்யவிஷயமான ஶாஸ்த்ரம், (உரை) ஒருவனைச்சொல்லும்ப்ரமாணம், (மறை) நித்யநிர்தோஷமாய் ஸபாஹ்யவிஷயமாய் யதாவஸ்திதவாதியாய் ஸ்வதஃப்ரமாணமான வேதம், (உறையுங்கோயில்) ஒருவன் நித்யவாஸம்பண்ணும் ஸ்தாநம், (வரை) கடிநஹ்ருதயனான தன்படிக்குச்சேர்ந்த கைலாஸம், (உறையுங்கோயில்) ஒருவனுகந்துவஸிக்கும் ஸ்தாநம், (நீர்)

மூ— கைய துவேல்நேமி* உருவமெரிகார் மேனியொன்று. (ரு)
ஒன்றுமறந்தறியேனோதநீர் வண்ணனைநான்*

தண்ணளிபண்ணிரக்ஷிக்கும் தன்படிக்குச்சேர்ந்த க்ஷீராணவம் (கருமம்) ஒருவன்செய்யும்தொழில், (அழிப்பு) கண்டதெல்லா வற்றையும் கன்னற்று அழிக்கை, (கருமம்) ஒருவன்செய்யும் தொழில். (அளிப்பு) ஸகலவஸ்துக்களையும் தண்ணளிபண்ணி ரக்ஷிக்கை, (கையது) ஒருவன்கையிலேயேற்குமாயுதம், (வேல்) கொலைக்குவரிகமான மூவிலைவேல், (கையது) ஒரு + ம் (நேமி) ரக்ஷணத்துக்குப் வரிகமான அறமுயலாழி, (உருவம்) ஒருவன்ரூபம், (எரி) நெருப்புப்போலே ஏறிட்டுப்பார்க்கவொண்ணுதபடி காஹாஜ்வலமாயிருக்கும், (உருவம்) ஒருவன்வடிவு, (கார்) கண்டவர்கள் கண்குளிரும்படி காளமேகம்போலேயிருக்கும், இப்படி பரஸ்பரவிஸத்ருசமான இரண்டுவஸ்துக்களில், (ஒன்று) ஒன்று, (மேனி) சரீரமாயிருக்கும்.

ஒன்று சரீரியாயிருக்குமென்னுமிடம் சுயம்லிங்கம், ஸவ்யாத்தாளென்றல் ஸவ்யனுாஸ்யசரீரம் என்று ஶ்ருதிகொடிவருகிறப்போலே அன்றிக்கே இவர்கள்ரூபம்பார்த்தால் எரிமேனியொன்று கார்மேனியொன்றென்னவுமாம். (ரு)

ஆறும்பாட்டு.

அ— 'அரன் அறிவானும்' என்றுருத்ரனை அறிவுகேடனென்று கேஷவித்துச்சொன்னீர்? நீர்தாம் அவனையறிந்து பிறர்க்குபதேசிக்கும்படி எங்ஙனே?யென்ன, ஸத்வம் தலையெடுத்தபோது ஸ்யத்தாலே சிறிதறிந்தானுய் ரஜஸ்தமஸ்ஸுக்கள் தலையெடுத்தபோது 'ஸம்ஸ்ரோஹம்' என்றிருக்கு மவனைப்போலேயோ? நான் நிர்ஹேதுகமாக அவன்றானே காட்டக்கண்டவனுகையாலே எனக்குஒருக்காலும் விஸ்ம்ருதிப்ரஸங்க மில்லையென்கிறார்-

(அன்று) அறிவுநடையாடுகைக்கு யொக்யதையில்லாதவன்று, (கருவரங்கத்துள்) கர்ப்பஸ்தானத்திலே, (கிடந்து) கிடந்து, ஜாயமானகாலத்திலே இத்தலையில் ப்ரதிஷேதமே பற்று

மூ—இன்றுமறப்பனோவேழைகாள்* அன்று கருவரங்கத்துட்கி டந்துகைதொழுதேன் கண்டேன் * திருவரங்கமேயான்திசை (௬)
திசையுந்திசையுறுதெய்வமும்* தெய்வத்திசையுங்கருமங்க ளெல்லாம்* அசைவில்சீர்கண்ணன் நெடுமால்

உ- சாகக் குளிரக்கடாக்ஷித்துத் தன்படிகளைக் காட்டித்தருகை யாலே ஸம்ஸாரிகளைத் தண்ணளிபண்ணிரக்ஷிக்கைக்சாக, (தி ருவரங்கமேயான்) தாமே கோயிலிலேவந்து பள்ளிகொண்டரு ளுகிற பெரியபெருமாளுடைய, (திசை) ஸாமுத்ரிகலக்ஷண ணாதி லக்ஷணங்களையும், (கண்டேன்) ஸாக்ஷாத்கரித்த நுபவித்தேன், (கைதொழுதேன்) கார்க்ஷிக்கநர்ஹமான அஞ் ஜலிபந்தம்முதலான வ்ருத்தியிலேயும் அந்வயிக்கப்பெற்றேன், மறு க்குஇடமறும்படி தன்பக்கலிலே இழுத்துக்கொள்ளவற்றாய்- (ஓதம்) ஓதங்கிளர்ந்த, (நீர்) ஸமுத்ரஜலம்போலே யிருண்டுகு ளிர்ந்த, (வண்ணனை) வடிவழகையுடையவனை, (ஒன்றும்) ஸக் லேசமும், (மறந்தறியேன்) மறந்தறியேன், (ஏழைகாள்) உத் ரவிஷயங்களிலே மண்டித்திரிகிற அறிவுகேடர்காள்? (நான்) மறைச்கைக்கு ஹேதுவுள்ளவிடத்தில் மறவாதநான், (இன்று) நினைக்கைக்கு ஹேதுவுள்ளஇன்று, (மறப்பேனோ) மறப்பனோ?

ஏழாம் பாட்டு.

அ— இப்படியாகில் நாட்டங்க எம்பெருமானைவிட்டு கண்டக ண்டதேவதைகள் காற்கீழே தலையெடுத்துத்திரிகைக்கடி யெ ன்னென்னில்? உதவாதார் தன்னைவந்து கிட்டாமைக்கு அவன் பண்ணினமயக்குக்களென்கிறார்-

(திசையும்) திமாவக்ஷிதேதயான லாதியும், (திசை) அவ்வவதிக்குக்களிலே, (உறு) வ்திக்கிற, (தெய்வமும்) தேவ தேதகளும், (தெய்வத்து) அத்தேவதேதகளுக்கு, (இசையும்) சேர்ந்த, (கருமங்கள்) ஸ்ருஷ்ட்யாதிவ்யாபாரங்களும், (எல்லாம்) யாவும், (அசைவு) க்ஷயக்ஷயாதிதோஷங்கள், (இல்) இன்றிகே (சீர்) நித்யமானகல்யாண குணங்களையுடையனாய், அக்குணங்கள் வெளிரிக்கவந்து- (கண்ணன்) க்ருஷ்ணனாய்வந்துபிறந்த ஸௌல

மூ— கடல்கடைந்த* காரோத வண்ணன் படைத்த மயக்கு. (எ)

மயங்கவலம்புரி வாய்வைத்து* வானத் தியங்குமெறிகதி
ரோன்றன்னை* முயங்குமருள் தேராழியால் மறைத்த தென்னீ திரு
மாலே* போராழிக் கையால்பொருது. (அ)

ஹ்ருத்தையுடையனாய், (நெடு) ஸர்வஜ்ஞனானவிடத்திலும் அளவிடவொண்ணாத, (மால்) பெருமையையுடையனாய், தம்பெருமைபாராதே ஶரணம்புக்க தேவர்களுக்காக- (கடல்கடைந்த) உடம்புநோவக் கடலைக்கடைந்து அபேக்ஷிதஸம்விதானம்பண்ணுமவனாய், ரக்ஷியாதே யழியச்செய்யிலும் விடவொண்ணாதபடி, (கார்) கறுத்த, (ஓதம்) கடல்போலே யிருண்டுகுளிர்ந்த (வண்ணன்) வடிவையுடையனானவன், தன்பக்கல்வாராதாரை அகற்றுகைக்கு; (படைத்த) உண்டாக்கின, (மயக்கு) ஹ்ராஸகவஸ்துக்களாயிருக்கும்; (மயக்கு) மயங்கப்பண்ணும் வஸ்துக்கள். (எ)

எட்டாம்பாட்டு.

அ—இப்படி அநாஶ்ரிதரை மயங்கப்பண்ணுகிற வள்வன்றிக்கே ஆஶ்ரிதவிஷயத்தில் ஸத்யஸங்கல்பனான தன்னிலைகுலைந்தும் வ்க்ஷவர்த்தித்து ரக்ஷிக்குமென்கிறார்-

(மயங்க) ப்ரதிகூலரான நாஸ்திகர் ஶ்ரீத்வநிஶயத்தாலே அறிவழியும்படியாக, (வலம்புரி) ஸ்ரீபாஞ்சஜந்யத்தை, (வாய்) திருப்பவளத்திலே, (வைத்து) மடுத்தூதி, (வானத்து) மறைக்கவொண்ணாத தன்னிலமான ஆகாஶத்திலே, (இயங்கும்) குறிக்கவொண்ணாதபடி உதயாஸ்தஸஞ்சரிக்குமவனாய், (எறி) ஸ்வதேஜஸ்ஸாலே ஸகலரையும் அபிபவிக்கிற, (கதிரோன்றன்னை) கிரணங்களையுடையனான ஆதித்யனை, ஆஶ்ரிதவிஷயத்தில் ஓரத்துக்குஉவாத்தான- (திரு) பிராட்டியார்பக்கல், (மாலே) பெரும்பிச்சனானவனே, ஸகலப்ராணிகளும் யுயுக்ஷயாவந்து (முயங்கு) நெருங்கிக்கிடக்கிற, (அமருள்) ஸமரஸந்நிதியிலே, (போர்) போருகைக்குவசிகரமான, (ஆழி) திருவாழியோடேகூடின, (கையால்) திருக்கையாலே, (பொருது) ஹிரண்யாதிகளை

கூ—பொருகோட்டோரேனமாய்ப் புக்கிடந்தாய்க்கு* அன்றுன் ஒருகோட்டின்மேற்கிடந்ததன்றே* விரிதோட்ட சேவடியைநீட் டித்திசைநடுங்க விண்துளங்க* மாவடிவின் நீயளந்தமண். கூ

த்துரத்திப்பொருது, (நீ) ஸத்யஸங்கல்பனான நீ, அத்தைக்குலைத்து- (தேராழியால்) திருவாழியாலே, (மறைத்தது) மறைத்தருளிற்று (என்?) ஏதுக்காக.

ஸவ்யஸாசாரணமான வுறவுக்குச்சேருமோ? ஸத்யஸங்கல்பனையிருக்கிற இருப்புக்குச்சேருமோ? உன்பெருமைக்குப் போருமோ? இவையெல்லாவற்றையும் காற்கடைக்கொண்டு இங்ஙனேசெய்தருளிற்று எதுக்காக? ஆஸ்ரிதவிஷயத்தில் ஓர் மாசாதே என்று விஸராகிறார், (தேராழி) ஸம்ரம்பம். (அ)

ஒன்பதாம்பாட்டு.

அ— இவ்வளவன்றிக்கே ஆபத்துமுதிர்ந்தவளவில் 'ஆஸ்ரிதர் அநாஸ்ரிதர்' என்றுதரம்பாராதே இருந்ததேதுடியாகத் தன்னையழியமாறிநோக்கும் ஸ்வபாவனென்கிறார்.

(விரி) விகஸிதமான, (தோட்ட) இதழையுடையதாமரைபோலே, (சே) சிவந்த, (அடியை) திருவடிகளை, (நீட்டி) வளர்த்து, (திசை) திக்விபாகவிசிஷ்டையான ஸ்ருஷ்டியிலுள்ளார், (நடுங்க) நடுங்கவும், (விண்) உபரிதநலோகத்திலுள்ளார், (துளங்க) நடுங்கவும், (மா) பெரிய, (வடிவின்) வடிவையுடையையாய்க்கொண்டு, (நீ) நீ, (அளந்த) அளந்துகாற்கீழிட்டுக் கொண்ட, (மண்) ஸ்ருஷ்டியானது, நிலமகள்முலையில் குங்குமத்தோடு நிலத்தோடுவாசியற எங்கும் ஜாத்யவிதமான செருக்காலே, (பொரு) பொருதுகொடுவருகிற, (கோடு) கொம்புகளையுடைத்தாய், (ஓர்) அழகுக்கு அத்விதீயமான, (ஏனமாய்) வராஹவேஷத்தையுடையனைக்கொண்டு, (புக்கு) ப்ரளயஜலத்திலேமுழுகி, (இடந்தாய்க்கு) அண்டபித்தியினின்றும் இடந்தெடுத்துக்கொண்டேறினவுனக்கு, (அன்று) அக்காலத்தில், (உன்ஒருகோட்டின்மேல்) உன்னெயிற்றின் ஏகதேசத்திலே, ஒருமறுப்போலே, (கிடந்ததன்றே) கிடந்ததொன்றன்றோ.

மூ— மண்ணும்மலையும்மறிகடலும்மாருதமும்* விண்ணும்விழுங்கியதுமெய்யென்பர்*- எண்ணில் அலகளவுகண்டசீராழியாய்க்கு* அன்றிவ்வுலகளவுமுண்டோ! உன்வாய். ௧௦

ஆபத்துவந்தால் தலையாலே சுமந்துநோக்குதல், தலையிலேகாலைவைத்து நோக்குதல் செய்யுமவனன்றோ நீ, ரக்ஷ்யவர்க்கத்தைநோக்குமளவில் உனக்கொரு நியதியுண்டோவென்று உகந்தநுஸந்திக்கிறார், 'விரிதோட்ட' என்று விஸ்த்ருதமாய்ப்ரகாசிக்கிற திருத்தோடுகளையுடையவனே? யென்று ஸம்போதநமாகவுமாம். (௯)

பத்தாம்பாட்டு.

அ—இப்படி பெரியவடிவைக்கொண்டு சிறியசெயலைச்செய்து நோக்குமளவன்றிக்கே சிறியவடிவைக்கொண்டு பெரியசெயலைச்செய்து நோக்கிலும் நோக்குமென்கிறார்-

(மண்ணும்) ஸர்வாதாரமான ப்ருதிவியும், (மலையும்) அதுக்குதாரகமான குலபர்வதங்களும், அத்தைச்சூழ்ந்துகிடந்து, (மறி) அலையெறிகிற, (கடலும்) ஸமுத்ரங்களும், ஸர்வப்ராணிகளுக்கு உஜ்ஜீவநஹேதுவான- (மாருதமும்)காற்றும், (விண்ணும்) அதுக்கு அவகாசப்ரதமான ஆகாசமும், இவற்றைபடையத் திருவயிற்றிலே ஒருபுடையிலே யடங்கும்படி (விழுங்கியது) அமுதுசெய்தருளினவித்தை, (மெய்யென்பர்) பரமார்த்தமென்று உன்சக்திஸாமர்த்யத்தைத் தறைகாணவல்ல வைதிகபுருஷர்கள் சொல்லாநின்றார்கள், (எண்ணில்) உன்படியைப் பரிச்சேதித்து அநுஸந்திக்குமளவில், (அலகு) அளவிடுகைக்கு பரிகரமான ஆயுதங்களையும், (அளவுகண்ட) பரிச்சேதித்து, எல்லைகண்டிருக்கிற ஸர்வஜ்ஞமான- (சீர்) கல்யாணகுணங்களையும், (ஆழியாய்க்கு) திருவாழியையுமுடையயானவுனக்கு, (அன்று) இவற்றையெடுத்துத் திருவயிற்றிலேவைத்தருளினவன்று, (இவ்வுலகம்) இஜ்ஜகத்தோபாதியும், (அளவுண்டோ) பெருமையுடைத்தோ, (உன்) உன்னுடைய, (வாய்) திருப்பவளமானது.

மூ— வாயவனையல்லதுவாழ்த்தாது* கை யுலகம் தாயவனையல்லதுதாந்தொழா*- பேய்முலைநஞ்சூணாக வுண்டானுருவொடு பேரல்லால்* காணாகண் கேளாசெவி. ௧௧

செவி வாய் கண் மூக் குடலெ ன்றைம்புலனுஞ்

இந்தச்சிறியதிருப்பவளத்தைக்கொண்டு பெரியஜகத்தை அமுதுசெய்தருளின இவ்வாச்சர்யமென்னாயிருக்கிறதோ! என்று ஈடுபடுகிறார். (௧௦)

பதினோராம்பாட்டு.

அ—இப்படி அவன்படிகளையநுஸந்தித்துக்கொண்டு போருகிறவழியாலே தமக்கு அவன்பக்கலுண்டான ஸந்நிவேஸத்தைப்பேசினார் கீழ்; இப்போதுகரணியான தம்மிலுங்காட்டில் தம்முடையகரணங்களுக்கு அவன்பக்கலுண்டான ஸந்நிவேஸாதிஸயத்தைப் பேசுகிறார்-

என்னிலுங்காட்டில் 'அவனெங்குற்றான்' என்றுபார்க்கிற (வாய்) என்னுடையவாகிந்த்ரியமானது, (அவனையல்லது) அவனையொழிய (வாழ்த்தாது) புகழாது, (கை) கைகளானவை, தாரதம்யவிபாகம்பாராதே இருந்ததேகுடியாக- (உலகம்) லோகத்தையடைய, (தாயவனையல்லது) அநாயாஸேந அளந்து கொண்ட ஸ்ரீவாமநனானவனையொழிய, (தாம்தொழா) தாம் தொழப்பாராது, (பேய்முலை) பூதனையுடையமுலையில், (நஞ்சு) விஷத்தை, (ஊணாக) யாரகமாக, (உண்டான்) விரும்பியமுதுசெய்தவனுடைய, (உருவல்லால்) வடிவையொழிய, (கண் காணா) கண்காணாது, (பேரல்லால்) குணசேஷ்டிதங்களுக்கு வாசகமான திருநாமங்களையொழிய, (செவிகேளா) செவி கேளாது. (௧௧)

பன்னிரண்டாம்பாட்டு.

அ—கீழ் ஸமாஸ்ரயணீயனாகச் சொன்னவவனை ஆஸ்ரயிக்குமிடத்தில் தத்ஞாநமான ஸாதநம் பக்தியென்கிறார்-

(செவிவாய்கண்மூக்குடலென்றைம்புலனும்) ஸ்ரோத்ரஜிஹ்வாசக்ஷுர்க்ராணத்வக்குக்களாகிற ஜ்ஞாநேந்த்ரியங்களைந்தும்,

மூ—செந்தீ* புவிகால்நீர்விண்பூதமைந்தும்* அவியாத ஞானமும் வேள்வியும் நல்லறமுமென்பரே* ஏனமாய்நின்றார்க்கியல்வு. கஉ

(செந்தீபுவிகால்நீர்விண்பூதமைந்தும்) தேஜ꞉ ப்ருதிவீ வாயு ஜலாகாஶங்களாகிற பஞ்சபூதங்களும், தத்கார்யபூதமான ஶரீரமும், இந்த காரணகார்யங்களாலே ஸாதிக்கப்படுவதாய்- (அவியாத) அவிச்சின்னஸம்ப்ரதாயஸந்தாநாதிமான, (ஞானமும்) பக்திரூபாபந்நஜ்ஞாநமும், (வேள்வியும்) பக்த்யுத்பத்திவ்ருத்திஹேதுவாக ஸங்ககர்த்ருத்வத்யாக பலத்யாகமாகப்பண்ணும் யாகாதிகர்மங்களும், நாள்தோறும் பக்தியை வளர்க்கக்கடவ விவேகவிமோகாதிகளும் ஆந்ருஶம்ஸ்யதாநாதிகளுமாகிற, (நல்லறமும்) விலக்ஷணதர்மமும், (ஏனமாய்நின்றார்க்கு) ஸர்வஸுலபனாய் ஆபத்ஸகனாய்நின்ற ஸர்வேஶ்வரனுக்கு, (இயல்வு) ஸமாஶ்ரயணஸாதநம், (என்பர்) என்று வேதவைதிகபுருஷர்கள் சொல்லாநின்றார்கள்.

'பக்தி꞉' என்றும் "பக்த்யா த்வநந்யயா ஶக்ய꞉" என்றும் சொல்லக்கடவதிறே; அங்ஙனன்றிக்கே தமக்கு ஸாக்ஷாத்காரணமான பக்தியை உபாஸகர் உபாயமாகவநுஷ்டிக்கும் கட்டளையைச்சொல்லி பக்தியை க்ஷேபித்து ப்ரபத்தியையருளிச்செய்கிறாராகவுமாம், அப்போதைக்கு ஏனமாய்நின்றார்க்கு- நல்லறமானவிவை- இயல்வு- என்பர், தானேவந்து ஸந்நிஹிதனாய் ரக்ஷிக்குமவனைப்பெறுகைக்கு இவற்றை ஸமாஶ்ரயணஸாதநமென்றுசொல்லாநிற்பர்கள், என்னவறிவிலிகளோ! என்று க்ஷேபமாகக்கடவது, 'ஞானப்பிரானையல்லாலில்லை நான்கண்ட நல்லது' என்றிறே? தம்முடையஸித்தாந்தம். (கஉ)

பதின்மூன்றாம்பாட்டு.

அ—அவனை நேர்கொடுநேரேகிட்டிப் பரிமாறுகைக்கு அதிகாரிகள் நித்யஸூரிகளே, இப்படியிருக்கச்செய்தேயும் ஸம்ஸாரிகளான நம்போல்வார்க்கும் ஆஶ்ரயிக்கலாம்படி தன்னை ஸுலபனாக்கிவைக்குமென்கிறார்.

மூ— இயல்வாகவீன்றுழாயானடிக்கேசெல்ல* முயல்வார் இய
லமரர்முன்னம்*- இயல்வாக நீதியாலோதிநியமங்களாற்பரவ*
ஆதியாய் நின்றார் அவர்- ௪௫

ஸௌந்தர்யவைலக்ஷண்யமான, (ஈன்) அழகிய, (துழாயானடிக்கேசெல்ல) திருத்துழாயையுடையனான ஸர்வேச்வரன்திருவடிகளிலேகிட்ட, (இயல்வாக) ஸஹஜமாக, (முயல்வார்) உத்யோகிப்பார், (முன்னம்) முந்துறமுன்னம், (இயல்) அதுக்கீடான யோக்யதையுடையரான, (அமரர்) நித்யஸூரிகள், அல்லாதநம்போல்வாரும் ஸ்ரவணாதிகளுக்கு நழுவுதல்வாராதபடி- (இயல்வாக) அழகிதாகக்கொண்டு, (நீதியால்) ஸாங்கோபாங்கமான வ்ரதநியமாதிக்ரமங்களோடே, (ஓதி) அத்யயனத்தைப்பண்ணி, அதீதமான வேதத்தினர்த்தத்தை ஆசார்யன்பக்கலிலேகேட்டு மநநம்பண்ணி அர்ச்சநவந்தநகீர்த்தநாதிகளோடேகூட அநவரதபாவனை பண்ணுகையாகிற- (நியமங்களால்) நியமங்களாலே, (பரவ) பக்திபரவசராய்ப் பரவும்படிக்கீடாக. (அவர்) அப்படிப்பட்ட பெருமையையுடையரானவர், 'பூர்வஜ' என்கிறபடியே ப்ரவர்த்தகராய்க்கொண்டு- (ஆதியாய்நின்றார்) முற்பாடராய்நின்றார், ஆகையாலே நமக்கெல்லாம் ஆச்ரயிக்கக்குறையில்லையென்று கருத்து.

(இயலமரர்) இயற்றியையுடையரான, யோக்யதையையுடையரான நித்யஸூரிகளென்றபடி. (௪௫)

பதினாலாம்பாட்டு.

அ— இப்படி ப்ரவர்த்தகனைக்கொண்டு முற்பாடனாய் நிற்கிறவனைவிட்டு ஸம்ஸாரிகள் க்ஷுத்ரதேவதா ஸமாச்ரயணம்பண்ணுகின்றார்களேயென்னில்? அவர்கள் அப்படிசெய்தார்களேயாகிலும் அந்த ஆச்ரயணீயரான தேவதைகளுக்கும் ஆச்ரயணீயனவனேயென்கிறார்-

(அவரவர்) ரஜஸ்தமஃப்ரசுரராய் ஹிரண்யாதிகளான அவ்வவ்வதிகாரிகள், ஸாத்த்விகத்வத்தாலன்றிக்கே ப்ராணார்த்த

மூ— அவரவர்தாந்தாமறிந்தவாறேத்தி* இவரிவரெம்பெரு
மானென்று சுவர்மிசைச்* சாத்தியும்வைத்துந் தொழுவார்*
உலகளந்தமூர்த்தியுருவேமுதல். ௧௪

முதலாவார்மூவரே அம்மூவருள்ளும்*

---

ணமாக- (தாந்தாமறிந்தவாறு) தாந்தாமறிந்தப்ரகாரங்களாலே (ஏத்தி) வாய்விட்டுப்புகழ்ந்து, (இவரிவர்) தாங்களுகந்த ஜன்மகுணங்களையுடைய ஐயன் ஈச்வரனைத்தொடக்கமாக ஸ்தாவராந்தமுடிவாகவுண்டான இவர்கள், (எம்) நமக்கு, (பெருமானென்று) ஆச்ரயணீயரான ஸ்வாமிகளென்று அத்யவஸித்துக்கொண்டு, ஒவ்வொருதேவதைகளை- (சுவர்மிசை) ஓரோர்பித்திகளிலே, (சாத்தியும்) சித்ரரூபேண எழுதியும், (வைத்தும்) க்ருஹந்தொடக்கமான வோரொருவிடங்களிலே ப்ரதிமாரூபேண ப்ரதிஷ்டித்துவைத்தும், (தொழுவர்) ஆச்ரயியாநிற்பர்கள், இவர்கள் இப்படிசெய்தாலும் ஆச்ரயிக்கிறவர்களோடு ஆச்ரயணீயராக இவர்கள்விரும்புகிற அத்தேவதைகளோடு வாசியற எல்லாரும் தன்காற்கீழேதுகை யுண்ணும்படி, (உலகு) ஜகத்தையடைய, (அளந்த) அளந்துகொண்ட, (மூர்த்தியுருவே) ஸர்வேச்வரன்திருமேனியே, (முதல்) ப்ரதானம். (௧௪)

பதினஞ்சாம்பாட்டு.

அ—நீர் அவனையே ப்ரதானனாகச்சொல்லாநின்றீர் புறம்பே ஆச்ரயிப்பார்சிலரும் ஆச்ரயித்தார்க்கு பலங்கொடுப்பார்சிலருமாயன்றோ? நாட்டில்நடந்துபோருகிறதென்ன அவையடங்கலும் வ்யர்த்தமென்கிறார்-

இவர்இவர் 'என்று' இருந்ததேகுடியாக ஆச்ரயணீயரென்றுநிரூபியாதே ஸ்ருஷ்ட்யாதிகார்யங்களை அதுக்கடைத்த வடிவெடுத்து நடத்திக்கொண்டுபோருகிற- (மூவரே) ப்ரஹ்மாவிஷ்ணுருத்ரர்களாகிற மூவருமே, (முதலாவார்) ஜகத்துக்குப்ரதானராவார், (அம்மூவருள்ளும்) அம்மூவர்தம்மில் ஸமரென்றும் மூவருங்கூடஒன்றென்றும் மூவர்க்குமவ்வருகே ஒருவன் ப்ரதானனென்றும் நிரூபியாதே அந்தமூவரிலும் வைத்துக்

மூ — முதலாவான்மூரிநீர்வண்ணன்*- முதலாயநல்லானருளல்லால் நாமநீர்வையகத்துப்* பல்லாரருளும்பழுது. கரு

பழுதேபலபகலும்போயினென்றஞ்சி அழுதேன்*அரவணை மேற்கண்டுதொழுதேன்* கடலோதங்காலலைப்பக்கண் வளருஞ்

கொண்டு, [முதலாவான்] ப்ரதானவாள், ப்ரஹ்மாதிகளையிடுக் கி ஸ்ருஷ்டிக்கு நிவர்த்தித்தும் தானாநிலையிலே நின்றுவரு ஞயஜத்தை நிவர்த்தித்தும் போருமவனாய்- [மூரி] ஸஞு ரியாகின்றுள்ள, [நீர்] கடல்போலேயிருக்கிற (வண்ணன்) வ டிவையுமுடையனுன்வன், [முதலாய] ஜகக்காரணபூதனு மாய், [நல்லான்] ஸவவிஷயமான வாத்ஸல்யத்தையு முடைய னைவனுடைய, [அருளல்லால்] க்ருபையொழிய, [நாமம்] ப்ரஸிதமான, [நீர்] நீரையுடைத்தான, [வையகத்து] ஜகத்திலு ள்ள, [பல்லார்] பலருடைய, [அருளும்] ப்ரஸாதமும், [பழு து] வ்யர்த்தம்.

இவனையொழிந்த மற்றவிருவருடைய அருளோடு கீழ்ச் சொன்னவர்களருளோடு வாசியற ஸவமும்வ்யர்த்தம், அன்றி க்கே நீர்சூழ்ந்தபூமியில் நாநாதருமான 'பல்லாருளும்பழு து' என்னவுமாம்; தான்ஸமியாதவளவன்றிக்கே ஸமவஸ்ப்ர ஸாதத்தையும் விலக்குகையாலே 'பழுது' என்கிறார். (கரு)

பதினாறும்பாட்டு.

அ — ஐதரதேவதைகளைப்பற்றி இவ்விஷயத்தையிழந்த ந ட்டாரிழவை வாஸநிஷ்கர்ஷத்தாலே வரிஷ்ரித்தவர் சுநாதிகாலம் ஐதரதேவதைகளையும் ஐதரஸாயநங்களை யும்பற்றி இவ்விஷயத்தை அகன்று திரிந்த தம்மிழவைநினைத்து சோகிக்கிறார்-

ஸளகரியமாக- [கடலோதம்] கடலின் சிறுதிவலைகளானவை, துடைகுத்துவாரைப்போலே சுநாகமி லுமாக- [காலலைப்ப] திருவடிகளைஸ்பர்ஶிக்க, அத்தாலே [கண் வளரும்] பள்ளிகொண்டருளுமவனாய், வாத்ஸல்யத்தாலும் ஸௌ ஶீல்யத்தாலும்- [செம்] குதறிச்சிவந்த, [கண்] திருக்கண்களை

மூ—செங்க* ணடலோதவண்ண ரடி. (௧௬)

அடியும்படிகடப்பத்தோள்திசைமேற்செல்ல* முடியும்விசும் பளந்ததென்பர்* வடியுகிராலீர்ந்தான் இரணியனதாக* மிருந்

யுடையனுமாய், [அடல்] ஸந்நஹிக்கப்புக்கவர்களை ஸம்ஹரித்துளழவீசுகிற, [ஓதம்] ஸமுத்ரதரங்கங்களோடுகூடின, [வண்ணர்] வடிவையுடையனுமானவனுடைய, [அடி] திருவடிகளை-வெளுத்தநிறத்தையுடையனான, [அரவு] திருவனந்தாழ்வானாகிற [அணைமேல்] படுக்கையின்மேலே ஜ்ஞாநஸாக்ஷாத்காரவேந, [கண்டு] கண்டநுபவித்து, [தொழுதேன்] தத்ஜ்ஞாநஸாவியான தொழுகையிலு மநுபவிக்கப்பெற்றேன், இப்படி ஸந்தோஷத்தோடே அடிக்கழஞ்சுபெற்றுச் செல்லுகைக்குறுப்பான- [பலபகலும்] கீழ்க்கழிந்தகாலமெல்லாம் ஒன்றொழியாதபடி; [பழுதே] வ்யர்த்தமே, [போயினவென்று] போய்விட்டதேயென்று, [அஞ்சி] கண்ணநீர் வெள்ளமிடவிருந்து, [அழுதேன்] சோகித்தேன்.

கீழ்இழவுக்கடியான நம்முடையகர்மம் இப்போதும் குறியழியாதேகிடக்கையாலே மேலுள்ளகாலத்திலும் இவ்வநுபவத்துக்குக் குறைத்தல்வரிற் செய்வதென்னென்று பயப்பட்டு அழுதேன். [௧௬]

பதினேழாம்பாட்டு.

அ—திருப்பாற்கடலிலேசென்று கிட்டவேண்டும்படி தூர்மாய்நானிழந்தேனோ அவன்றானே எல்லார்தலையிலும் திருவடிகளைவைத்து ஸந்நிதாநம் பண்ணிநிற்கச்செய்தே கிடீர் நானிழந்தேனென்கிறார்—

[வடி] கூர்மையான, [உகிரால்] திருநகத்தாலே, [இரணியன்து] ஹிரண்யாஸுரனுடைய, தேவர்கள்வரபலத்தாலே மிடியற வளர்ந்த, [ஆகம்] முரட்டுடலை, [ஈர்ந்தான்] அநாயாஸேந கிழித்துப்பொகட்டவனாய் [இரு] பெரிய, [சிறை] சிறகையுடையவனான, [புள்ளூர்ந்தான்] பெரியதிருவடியைமேற்கொண்டு ஸஞ்சாரமாக நடத்தியருளினவன், ஸூரிதனான் ஐந்த்ரன்காயத்

மூ— சிறைப்புள் ளூர்ந்தா னுலகளந்தநான்று. (கஎ)

நான்ற முலைத்தலை நஞ்சுண்டு* உறிவெண்ணெய் தோன்ற
வுண்டான் வென்றிசூழ் களிற்றை* யூன்றிப் பொருது

செய்கைக்காக- [உலகளந்தநான்று] திருவுலகளந்தருளினகாலத்திலே 'கோலமாமென்சென்னிக்கு' என்கிறபடியே என்தலைக்கு அலங்காரமாக நானுசைப்பட்டிருக்கும்- [அடி] திருவடிகள், [படி] காடும் ஓடையுமான ஸ்ருஷ்டியை, [கடப்ப] அளந்துகொள்ள, [தோள்] பிராட்டியை வரிஷ்டமிக்கக்கடவ திருத்தோள்களானவை, இடமுடையும்படி- [திசைமேற்செல்ல] திக்குகளின்மேலே வளர்ந்துசெல்ல, [முடியும்] திருவபிஷேகமும், அபரிச்சேத்யமான- [விசும்பு] ஆகாசத்தை, முசிவறநிமிர்ந்து- [அளந்தது] அளவுபடுத்திக்கொண்டது, [என்பர்] என்று தத்வவித்துக்களான ரிஷிகள் சொல்லாநிற்பர்கள். முசிவு- வருத்தம்.

தானேவந்து தலையிலேயிருந்தவன்று இழந்து இன்றுகேட்டார்வாய்க்கேட்பதேநான் என்றுவெறுக்கிறார். (கஎ)

பதினெட்டாம்பாட்டு.

அ—கடலிற்கிடையிலும் அங்குநின்றும்வந்து ஞாலத்தூடே நடந்தவிடத்திலும் இழந்தவளவேயோ இடக்கை வலக்கை யறியாதாரும் வாழும்படி இடைக்குலத்திலேவந்து பிறந்தவிடத்திலும் இழந்தேனிறே! என்றுசோகிக்கிறார்—

பேய்வடிவைமறைத்துத் தாய்வடிவுகொண்டுவந்த பூதனையினுடைய, [நான்ற] பாலின்பரத்தாலே சரிந்துநான்றுகிற, [முலைத்தலை] முலையிலுண்டான, [நஞ்சு] நஞ்சை, அவள்பிணமாய்விழும்படி- [உண்டு] அமுதுசெய்து, [உறி] உறிகளிலேசேமித்துவைத்த, [வெண்ணெய்] வெண்ணெயை, ஸிம்ஹவாலாதிகள் மொழியிலும்- [தோன்ற] ப்ரஸித்தமாம்படி [உண்டான்] அமுதுசெய்தருளினவனை; [வென்றி] வெற்றியையுடைத்தாய், [சூழ்] எதிர்த்தவர்களைத்தப்பாமல் சூழ்ந்துக்கொள்ளவல்ல, [களிற்றை] குவலயாபீடத்தை, மஜ்யாஸத்துக்கு ஸேவிகரானவர்களைப்போலே- [ஊன்றிப்பொருது] உன்றக்கநின்று பொருது,

மூ—டைவுகண்டானும் புள்ளின்வாய்கீண்டானும்* மருதிடை போய் மண்ணளந்த மால். (கஅ)

மாலுங்கருங்கடலே என்னோற்றாய்* வையகமுண்டாலினிலைத்துயின்றவாழியான்*- கோலக்கருமேனிச் செங்கண்மால்

[உடைவுகண்டானும்] தலையெடுக்கமாட்டாமல் உருவழிந்து உருக்காம்படி பண்ணினவனும், [புள்ளின்வாய்] தன்னைவிழுங்கவந்த பகாஸுரன்வாயை, [கீண்டானும்] கிழித்துப் பொகட்டவனும், [மருதிடை] யமளார்ஜுநங்களின் நடுவே, அவை வேர்பறிந்துவிழும்படி- [போய்] தவழ்ந்துபோய், [மண்] பூமி முதலான லோகங்களை, [அளந்த] அளந்துகொண்ட, [மால்] ஸர்வேச்வரன்.

வரையாதேதீண்டுகையும் அழகும் ஆனைத்தொழில்முதலான ஸஹவாஸாத்ம்யத்தாலே க்ருஷ்ணனோடே த்ரிவிக்ரமனைச்சேர்க்கிறார் இவள்முலையைப்பற்றி அமுதுசெய்தவாறே பழையபேய் வடிவோடே நான்றபூலையுந் தானுமாய் விழுந்தாளென்னளவுமாம் 'பொருதிடைவுகண்டானும்' என்றுபாடமாய் திடைந்து ருக்காம்படி கண்டவனென்றுமாம். (கஅ)

பத்தொன்பதாம்பாட்டு.

அ—ஸாக்ஷாத்க்ருதமான ஸம்பவமும் கிடையாமையால் நான் கண்ணீர்விழவிடாகிர்க்க, அவனை மடியிலேசாயவிட்டு முழுநோக்குச்செய்து நித்ராநுபவம்பண்ணிவாழுகிற நீ என்னஸாதநம் பண்ணினாயென்கிறார்-

[வையகம்] ஜகத்தையடைய, ப்ரளயத்தி லழியாதபடி- [உண்டு] திருவயிற்றிலேயெடுத்துவைத்து, [ஆலினிலை] ஓராலந்தளிரிலே, [துயின்ற] கண்வளர்ந்தருளினவனாய், ப்ரளயம்வரில் இருதுண்டமாகவிடுகைக்குப் பரிகரமான- (ஆழியான்) திருவாழியையுடையனுமாய், (கோலம்) அழகிய, (கரு) கறுத்தநிறத்தையுடைய, (மேனி) திருமேனியையும், அதுக்குப்பகைத்தொடையாம்படி- (செம்) வாத்ஸல்யத்தாலே குதறிச்சிவந்த, (கண்) திருக்கண்களையுமுடையனாய், (மால்) ஸ்ரீதவ்யாமோஹனனவன்,

மூ—கண்படையு* ளென்றுந்திருமேனிநீதீண்டப்பெற்று. (௧௯)
பெற்றார்தளைகழலப் பேர்ந்தோர்குறளுருவாய்* செற்றார்
படிகடந்தசெங்கண்மால்*- நற்றாமரைமலர்சேவடியை வானவர்

---

(கண்படையுள்) கண்வளர்ந்தருளுகிறவிடத்தில், (என்றும்) ஸர்வ காலத்திலும், திருமேனி அவன்திருமேனியை- நீதீண்டப்பெற்று, நீ அநுபவிக்கப்பெற்று, அந்த ஸம்ஶ்லேஷத்தாலே- மாலும் மயங்காநிற்பதாய், அவன்வடிவின் நிழலீட்டாலே- (கருங்கடலே) கறுத்தநிறத்தையுடையகடலே. இப்பேறுபெறுகைக்கு- (என்நோற்றாய்) என்னஸாதநாநுஷ்டாநம் பண்ணினாய் அத்தைச்சொல்லமாட்டாயோ நானுமநுஷ்டித்துப் பார்க்கைக்கு என்று கருத்து.

மால் என்று பெருமையைச்சொல்லுகிறதென்னவுமாம் (௧௯)

இருபதாம்பாட்டு.

அ—கடல் அவனைப்பெற்றுக் களித்தவளவேயோ அப்படுக்கையைவிட்டு இங்கேவந்து அவதரித்த விடத்திலும் சிலஆஶ்ரயிகள்கிட்டிஅநுபவிக்கப்பெற்றார்கள் கிடீரென்கிறார்-

(பெற்றார்) தன்னைப்பிள்ளையாகப் பெற்ற ஸ்ரீவஸுதேவர், தேவகியாருடைய காலில்விட்ட- (தளை) விலங்கு, (கழல) நீங்கும்படியாக, (பேர்ந்து) பரமபதத்தினின்றும் பேர்ந்து இங்கே க்ருஷ்ணனாய்வந்தவதரித்து, அவ்வளவில்நில்லாமல்- (ஓர்) அழகுக்குஅத்விதீயமாய், கண்ணாலேமுகந் தநுபவிக்கலாம்படியான- (குறளுருவாய்) வாமநவேஷத்தை யுடையனாய், ஆஶ்ரிதனான இந்த்ரனை நெருக்குகையாலே- (செற்றார்) தனக்குஶத்ருவான மஹாபலிபோல்வார், என்னதென்று அபிமாநித்திருந்த- (படி) பூமியை, (கடந்த) அநாயாஸேந அளந்துகொண்டவனாய்- அத்தால்வந்த ப்ரீதிப்ரகர்ஷத்தாலே- (செம்) சிவந்த, (கண்) திருக்கண்களை யுடையனாய், (மால்) ஆஶ்ரிதவ்யாமோஹனவனுடைய, (நல்) அழகிய (தாமரைமலர்) தாமரைப்பூப்போலேயிருக்கிற, (சே) சிவந்த, (அடியை) திருவடிகளை, இன்னீர்மையேறிப் பூயாத, (வானவர்) ஸ்வர்க்கத்திலேவர்த்திக்கிற இந்த்ராதிதேவ

பூ—கைகூப்பி* நிரைமலர்கொண்டேத்துவராம்நின்று. (உ0)

நின்றுநிலமங்கை நீரேற்றுமூவடியால்* சென்றுதிசையளந்த செங்கண்மாற்கு*- என்றும்படையாழிபுள்ளூர்தி பாம்பணையான் பாதம்* அடையாழி நெஞ்சே அறி. (உக)

---

வெகள், இச்செயலுக்குத்தோற்று. (கைகூப்பிநின்று) அஜ்ஞலி ஸம்யத்தைப்பண்ணி, (நிரை) தொடைவாய்த்திருந்துள்ள, (மலர்கொண்டு) செவ்விப்பூக்களைப் பணிமாறிக்கொண்டு, (ஏத்துவராம்) ஸ்தோத்ரம்பண்ணி ஆஶ்ரயிக்கப்பெறுவர்களாம்.

பாவியேன்நாமே இழப்போ! மென்று வெறுக்கிருர். (உ0)

இருபத்தோராம்பாட்டு.

அ—அவன்பெருமையைப்பார்த்துப் பிற்காலியாதே ஸூஶீலவாஸல்யஸௌஶீல்யஸ்வாவன் என்றறிந்து அவன்திருவடிகளைக்கிட்டப் பார்கிடாய் நெஞ்சே? யென்கிருர்-

(சென்று) உஹாவலியஜ்ஞவாடத்தளவும் நடந்துசென்று அவன்முன்னே 'அர்த்திதம்பெற்றன்றிப்போகேன்' என்றுமலையாளர்வளைப்புப்போலே. (நின்று) அயிர்க்கவுந் தோற்றநின்று, எல்லார்க்கும் குறைவறக்கொடுத்துப்போந்த (அம்கை) அழகியதிருக்கைபிலே (நிலம்) ஸ்ரீமியை, (நீரேற்று) நீரேற்றுவாங்கிக்கொண்டு, ஓரடிக்கு அவனைச் சிறையிட்டுவைப்பதாக- (மூவடியால்) மூன்றுதிருவடிகளாலே, (திசை) திக்குக்களோடேகூடின ஸகலலோகங்களையும், (அளந்த) அளந்துகொண்டவனுப், அத்தால்வந்த ஹர்ஷப்ரகர்ஷத்தாலே, (செம்) சிவந்த (கண்) திருக்கண்களையுடையனுமான, (மாற்கு) ஸர்வேஶ்வரனுக்கு, (என்றும்) ஸர்வகாலத்திலும், (படை) ரக்ஷணபரிகரமானதிவ்யாயுதம், (ஆழி) திருவாழி, (ஊர்தி) மேற்கொண்டுநடத்துகிற வாஹநம், (புள்) பெரியதிருவடி, (பாம்பு) திருவனந்தாழ்வானை, (அணையான்) படுக்கையாகவுடையவனாகையாலே ஸூஶீலவாஸல்யஸௌஶீல்யஸ்வாவனானவனுடைய, (பாதம்) திருவடிகளை, (அடை) கிட்டியநுபவிக்கப்பார், (ஆழி நெஞ்சே) கம்பீரஸ்வபாவமான நெஞ்சே? இத்தைஐலக்ஷவார்த்தையென்றிராதே- (அறி) நன்றாக வ்யவஸியண்ணு. (உக)

மூ—அறியுமுலகெல்லாம் யானேயுமல்லேன்* பொறிகொள்சி றைஉவணமூர்ந்தாய்*- வெறிகமழும் காம்பேய்மென்தோளிகடை வெண்ணெயுண்டாயைத்*தாம்பேகொண்டார்த்ததழும்பு (உஉ)
தழும்பிருந்த சார்ங்க

இருபத்திரண்டாம்பாட்டு.

அ—நீர்நம்மை 'ஸர்வஜ்ஞ, ஸர்வேச்வரன்' என்றறிந்தபடியெங்ஙனேயென்ன; நானொருவனுமேயோ லோகமடைய அறியாதோ வென்கிறார்-

விருத்தம்போலே- (பொறிகொள்) நாநாவர்ணமான (சிறை) சிறகையுடைய, (உவணம்) பெரியதிருவடியை, (ஊர்ந்தாய்) நடத்தும்ஸ்வாமிநாய், பிள்ளை அனுங்காதபடி ஸாமய ஸ்வத்தாலே ஸஞ்சரித்துக் கொண்டிருக்கையாலே, (வெறி) வாசனையும், (கமழும்) அலையெறியாநிற்பாளாய், பசுமைக்கும் சுற்றுடைமைக்கும் ஒழுகுநீக்ஷிக்கும்- (காம்புஎய்மெல்) வேய் போலேயாய் அதில் வ்யாவ்ருத்தமான மார்த்தவத்தையுடைய, (தோளி) தோளையுடையளுமான யசோதைப்பிராட்டி, (கடை) உடம்புநோவக்கடைந்து திரட்டிவைத்த, (வெண்ணெய்) வெண்ணெயை, (உண்டாயை) அமுதுசெய்தருளினவுன்னை, (தாம்பேகொண்டு) கைக்கெட்டிற்றொரு அறுதற்றும்பையேகொண்டு (ஆர்த்த) உறைக்கக்கட்டுகைபால்வந்த, (தழும்பு) தழும்பு, (யானேயுமல்லேன்) நானொருவனுமேயல்லேன், (உலகெல்லாம்) நாடடங்க, (அறியும்) அறியுங்காண்.

உவணமென்று- பருந்துக்குப்பேர். (உஉ)

இருபத்துமூன்றும்பாட்டு.

அ—நாம்சிலர்க்கு அஞ்சுகையாவதென், கட்டுண்கையாவதென், அத்தைப் பின்நாடறிகைபாவதென்னென்று அத்தைமறைக்கப்புக்கான், ஒருதழும்பாகிலன்றோ மறைக்கலாவது உன்னுடம்படங்கலும் ஆச்ரிதர்காயிஞ் செய்கையால்வந்த தழும்பன்றோ?வென்கிறார்-

(அம்) அழகிய, (கை) திருகையானது, (சார்ங்கம்)

மூ—நாண்தோய்ந்தவாம ங்கை* தழும்பிருந்ததாள் சகடஞ்
சாடி*- தழும்பிருந்தபூங் கோதைபாள்வெருவப் பொன்பெய
ரோன்மார் விடந்த* வீங்கோதவண்ணர் விரல். (உங)

விரலொடு வாய்தோய்ந்தவெண்ணெய் கண்டு* ஆய்ச்சிஉர
லோ டுறப்பிணித்தநான்று*- குரலோவா தேங்கி

ஸ்ரீராமபிரானுடைய, (நாண்தோய்ந்தஆம்) நாணுறைவால்வந்த (தழும்பிருந்த) தழும்பைச்சுமந்தன, (தாள்) சுதிவஸூசுமா ரமான திருவடிகளானவை, (சகடம்) சுவலாவிஷ்டமான சகடத்தை, (சாடி) முறிந்துவிழும்படி உதைத்து, (தழும்பிருந்த) அத்தாலெழுந்த தழும்பைச்சுமந்தன, (வீங்கு) கிளர்ந்து (ஓதம்) அலையெறிகிற கடல்போலேயிருந்துள்ள, (வண்ணர்) வடிவையுடையவருடைய, (விரல், திருவிரல்களானவை, (பூ) அழகிய, (கோதையாள்) மயிர்முடியையுடைய பிராட்டி, என்னைத்தேடுகிறதோ என்று- (வெருவ)நடுங்கும்படியாக, (பொன் பெயரோன்மார்வு) ஹிரண்யன்மார்வை, (இடந்த) பிளந்துபொ கட்டதால்வந்த, (தழும்பிருந்த) தழும்பைச்சுமந்தன, விரல்தழும்பு கால்வழும்பு கைத்தழும்பு இவற்றை எங்ஙனே உன்னால் மறைக்கும்படியென்கை. (உங)

இருபத்துநாலாம்பாட்டு.

அ—நாம் வெண்ணெய்களவுகாணப்புக்குக் கட்டுண்டோமாக் வேணுமோவென்ன, களவுகண்டு கட்டுண்டிருக்கும்படி அறியாயோவென்கிறார்—

(விரலொடு) திருக்கையாலேஅள்ளி, (வாய்தோய்ந்த) திருப்பவளத்திலேவைத்த, (வெண்ணெய்) வெண்ணெயை, அமுதுசெய்தருளுவதுக்குமுன்னே- (கண்டு) வாயதுகையதாகக்கண்டு, (ஆய்ச்சி) இடைச்சியானவள், களவுக்குப்பெருநிலைநின்ற- (உரலொடு) உரலோடேயெடுத்து, (உறப்பிணித்தநான்று) உறைக்கக்கட்டினவன்று. (குரல்) கூப்பிடுகிறகூப்பீடு, (ஓவாது) உச்சிவீடுவிடாதபடி, வாய்விட்டழமாட்டாமல். (ஏங்கி) விம்மல்பொருமலாயேங்கிக்கொண்டு. அவ்வளவிலும் வெண்ணெயெங்கே

மூ—நினைந்தயலார்காணவிருந்திலையே* ஓங்கோதவண்ணா?உரை.
உரைமேற்கொண்டென்னுள்ளமோவாதெ, ப்போதும்* வ
ரைமேல்மரதகமேபோலத்* திரைமேல்கிடந்தானைக்கீண்டானைக்
கேழலாய்ப்,பூமி* இடந்தானை யேத்தியெழும். (உரு)

யிருக்கிறது அதுகளவுகாணும்படி எங்ஙனேயென்று இத்தையே (நினைத்து) உருவநினைத்துக்கொண்டு, (அயலார்) உன்னாலேபுண்பட்ட இடைப்பெண்களெல்லாரும், கள்ளனுக்சித்ரனையும் வேணும் என்று- (காண) சிரித்துக்கொண்டுவந்து காணும்படியாக, ஸ்தாஸனைப்கொண்டு- (இருந்திலையே) இருந்திலையோ, கட்டுண்ணப்பெற்றஸௌஶீல்யத்தாலே- (ஓதம்ஓங்கு) ஓதங்கிளர்ந்தகடல்போன்ற, (வண்ணா) வடிவையுடையவனே? (உரை) நீஇத்தை உண்மையாகச்சொல்லிக்காண்.

இவர்க்கு இவன்வடிவு காணவேணுமென்றும் வார்த்தை கேட்கவேணுமென்றும்போலே காணும் ஆசை. (உச)

இருபத்தஞ்சாம்பாட்டு.

அ—அவன்ஓவாதே அருளசபடியைக்கண்டு இவரும்ஓயாதே ஏத்தித்தொடங்கினார்-

(வரைமேல்) ஒருமலையின்மேலே, (மரதகமேபோல) ஒரு மரதகமணிபடிந்தாப்போலே, (திரைமேல்) ஸமுத்ரத்தாலே அலையெறிகிற திருப்பாற்கடலிலே, (கிடந்தானை) கண்வளர்ந்தருளினவனாய், சிறுக்கனுடைய ஆர்த்தித்தீர்க்கைக்காக நரஸிம்ஹமாய் தூணிலேவந்துதோற்றி- (கீண்டானை) ஹிரண்யனைப்பிளந்துபொகட்டவனாய், (கேழலாய்) மஹாவராஹமாய், ப்ரளயத்திலே கரைந்து ஸம்ஹிதியிலேயொட்டின- (பூமி) ப்ருதிவியை, (இடந்தானை) இடந்தெடுத்துக்கொண்டேறினவனை, (என்) என்னுடைய, (உள்ளம்) ஹ்ருதயமானது, (உரைமேற்கொண்டு) உரைக்கையிலே தத்பரமாய்க்கொண்டு, (ஓவாது) உச்சிவீடுவிடாதே, (எப்போதும்) ஸர்வகாலத்திலும். (ஏத்தி) இவ்வவதாரங்களைச் சொல்லிப்புகழ்ந்து, (எழும்) உஜ்ஜீவியாநிற்கும்.

'உரைமேல்கொண்டு' என்று மேலானவுரையைக்கொண்டு,

௨௬—எழுவார்விடைகொள்வா ரீன்றுழாயானை* வழுவாவகைநி னைந்துவைகல்*- தொழுவார், வினைச்சுடரைநந்துவிக்கும்வேங்க டமே, வானோர்* மனச்சுடரைத்தூண்டும்மலை. (௨௬)

---

உத்க்ருஷ்டமான ஸத்வங்களைக்கொண்டென்னவுமாம். 'கேழலாய்க்கீண்டானைப் பூமியிடந்தானை' என்று இரண்டையுமிங்கே பாத்மஸம்ஹிதியிலே பொட்டின இத்தைமுதல்கீண்டு பின்னை இடந்தெடுத்துக்கொண்டேறினபடியைச் சொல்லிற்றாகவுமாம் (௨௫)

இருபத்தாறாம்பாட்டு,

அ—அவ்வவதாரங்களுக்குப் பிற்பாடரானாரிழவை பரிஹரிக்கைக்காகத் திருமலையிலே வந்து ஸந்நிஹிதனானானென்கிறார்- 'போற்றியென்றேயெழுவர்' என்கிறபடியே எங்களுக்கு அஹிதமான ஐஶ்வர்யத்தைத் தரலாகாதோவென்று ப்ரயோஜநத்துக்குக் கையேற்றுக்கிளர்ந்து அது கைப்பட்டவாறே- (எழுவார்) விட்டகன்றுபோம் ஐஶ்வர்யார்த்திகளும், உன்னநுபவம்வேண்டா எங்களாத்மாவை அநுபவித்துக்கொண்டு ஒருநாளும் உன்பக்கலிலே விழியாதேயிருக்கும்படி விடைகொள்ளுகைக்குத் திருக்கைச் சிறப்பிட்டருளவேணும் என்று- (விடைகொள்வார்) விடைகொண்டுபோம் கைவல்யார்த்திகளும், (ஈன்) நிரதிஶயபோக்யமான, (துழாயானை) திருத்துழாயாலே அலங்க்ருதனாய்ப் பரவ்யூஹாதிகதனானவனை, (வழுவாவகை) ஒருநாளும் விட்டுநீங்காதே கிட்டிநின்று அநுபவிக்கும் ப்ரகாரத்தை, (நினைந்து) அநுஸந்தித்து; (வைகல்தொழுவார்) ஸர்வகாலமும் அநுபவிக்கக்கடவர்களாயிருக்கும் பகவச்சரணார்த்திகளுமான இவ்வதிகாரிகளுடைய, தத்தத்ப்ராப்திப்ரதிபந்தகமான- (வினைச்சுடரை) பாபாக்நியை, (நந்துவிக்கும்) உருத்தெரியாதபடி நசிப்பிக்கும், (வேங்கடமே) திருமலையேகாணும், (வானோர்) ஸர்வஜ்ஞரான நித்யஸூரிகளுடைய, (மனச்சுடரை) திருவுள்ளமாகிறவிளக்கை, அவன் ஸீலாதிகுணாநுஸந்தாநத்தின் ப்ரௌடியை வர்த்திப்பித்துக்கொண்டு- (தூண்டும்மலை) ப்ரகாஶியாநிற்கும்மலை. (௨௬)

மூ—மலையாற் குடைகவித்துமாவாய்பிளந்து* சிலையால்மராமரமேழ்செற்றுக்*- கொலையானைப்போர்க்கோடொசித்தனவும் பூங்குருந்தம்சாய்த்தனவும்* கார்க்கோடு பற்றியான் கை. (உஎ)

## இருபத்தேழாம்பாட்டு.

அ—இங்கே எழுந்தருளிநிற்கிற திருவேங்கடமுடையானுடைய தோளின் துடிப்பைக் கண்டபோதே அவதாரங்களில் விரோதிவர்க்கத்தைப் பொடிபடுத்தின வீரப்பாட்டங்களும் காணலாமென்கிறார்-

இந்த்ரன்வ்ருஷ்டிப்பித்த கல்வர்ஷத்தில் ரக்ஷ்யவர்க்கம் நோயாதபடி- (மலையால்) கைக்கெட்டிற்றொரு மலையாலே, (குடை—) குடைபிடிப்பாரைப்போலே, (கவித்து) கீழதுமேலதாக மறித்துரக்ஷித்து, தன்னைவிழுங்குவதாகவந்த- (மாவாய்) கேசியாகிற குதிரையினுடைய வாயை, (பிளந்து) இருபிளவாகக்கிழித்துப்போகட்டு, ஸுக்ரீவனுக்கு விஶ்வாஸமாகவெடுத்த- (சிலையால்) திருவில்லாலே, ஓர்ஶரத்தின் விஶ்வஸிப்பிக்கைக்காக- (மராமரமேழ்) மராமரங்களேழையும், (செற்று) இற்றியச்செய்து, (கொலை) எதிர்த்தவர்களைக் கொன்றுவிழவிடும், (யானை) குவலயாபீடத்தினுடைய, (போர்) பொருகைக்குப் பரிகரமான, (கோடு,கொம்பை, (ஒசித்தனவும்)பிடுங்கிப்போகட்டனவும், கண்டார்க்கு ஸுலக்ஷணமாம்படி- (பூங்குருந்தம்) முட்டாக்கிடப்பூத்துக்கிடக்கிற குருந்தை, (சாய்த்தனவும்) வேர்பறியும்படி தள்ளிவிழவிட்டனவும், குளிர்ந்துமுழங்குகிற ஸஹாவத்தாலே- (கார்) மேகத்தோடொத்திருந்துள்ள, (கோடு) ஸ்ரீபாஞ்சஜந்யத்தை, (பற்றியான்) தரித்தருளினவனுடைய, (கை) திருக்கைகள்கிடீர்.

அன்றிக்கே- திருக்கையிலே ஸ்ரீபாஞ்சஜந்யத்தைப் பிடித்தபோது, மேகத்தைப்பற்றியிருந்த ஹம்ஸம்போலே இருந்ததென்னவுமாம், (உஎ)

## இருபத்தெட்டாம்பாட்டு.

அ—திருமலையிலே யெழுந்தருளிநிற்கிற திருவேங்கடமுடையானின் திருமேனியிலே அழகும் ஸௌந்தர்யமும் ஸௌஶீல்யமும் முதலான குணங்க

மூ—கைய வலம்புரியும்நேமியும்* கார்வண்ணத்தையமலர்கள்நின்னாகத்தாள்*- செய்யமறையான் நின்னுந்தியான்மாமதிள்மூன்றெய்த* இறையான் நின்னாகத்திறை (௨௮)

இறையும்நிலனு மிருவிசும்புங்காற்றும்* அறைபுனலுஞ் செந்தீயுமாவான்*- பிறை

ஞம் நிழலிட்டுத் தோற்றுநின்றது கிடீரென்கிறார்-

(கார்) மேகம்போலே ச்யாமமான, (வண்ணத்து) வடிவையுடைய, (ஐய) நிரதிசயபோக்யனானவனே, வலம்புரியும்- ஸ்ரீபாஞ்சஜந்யமும், நேமியும்- திருவாழியும், கைய- திருக்கைகளிலே, உளவாயிராநின்றன- மலர்மகள்- அலர்மேல்மங்கையானவள், நின்- உன்னுடைய, ஆகத்தாள்- திருமார்விலே "இறையும், அகலகில்லேன்" என்று உரையாநின்றாள், செய்ய- உன்னை உள்ளபடி காட்டும் செவ்வையையுடைய, மறையான்- வேதத்தைத் தனக்கு நிர்வாஹகமாகவுடைய ப்ரஹ்மாவானவன், நின்னுந்தியான்- உன்னுடைய திருமேனியைப்பற்றி லப்தஸத்தாகனாயிராநின்றான், மாமதிள்மூன்று- பெரியமதிளையுடைய த்ரிபுரத்தை, ஈஷ்யமாப்படி- எய்த- எய்துவிழவிட்ட, இறையான்- ஸம்ஹாராதிகாரியான ருத்ரன், நின்னாகத்து- உன்திருமேனியில், இறை- ஏகதேசத்தைப்பற்றி லப்தஸ்வரூபனாகாநின்றான். (௨௮)

இருபத்தொன்பதாம்பாட்டு.

அ—நெஞ்சே? உபயவிபூதிநாயனாயிருக்கிற வனவன்பெருமையை நினைத்துப் பிற்காலியாதே? அவன் ஆஸ்ரிதபாரதந்த்ரன் கிடாய்? இத்தைநன்றாக வ்யவஸிபண்ணென்கிறார்-

பரமபதத்திலே ஸர்வாதிகத்வந்தோற்ற வெழுந்தருளியிருக்கிற இறையும்- ஸ்ரீவைகுண்டநாயனுமாய், நிலனும்- பூமியும், இருவிசும்பும்- பரப்பையுடைத்தான ஆகாசமும், காற்றும்- வாயுவும், அறைபுனலும் அலையெறிகிறஜலமும், செந்தீயும்- சிவந்தநிறத்தையுடைய தேஜஸ்ஸுமு, மாகிற பஞ்சபூதாரப்தமான லீலாவிபூதியை, ஆவான்- ப்ரகாரதயா சேஷமாகவுடையனுமாயிருக்கிற பெருமையையுடையவன், பிறை-

மூ—மருப்பில்லைபைங்கண் மால்யானைபடுதுயரங் காத்தளித்த*
செங்கண்மால் கண்டாய்நெறி. (௨௯)

தெளிதாகவுள்ளத்தைச்செந்நிறீஇ* ஞானத், தெளிதாகநன்
குணர்வார்சிந்தை*– எளிதாகத்தாய்நாடுகன்றேபோல் தண்டுழா

---

பிறைபோலேயிருக்கிற மருப்பு- கொம்பையும், பை ஜாத்யுசிதமான பசுமையையுடைய, கண்- கண்ணையுமுடையனாய், மால்- அடிமைசெய்கையிலே பெரும்பிச்சனுமாயிருக்கிற, யானை- ஸ்ரீகஜேந்த்ராழ்வானுடைய, படு- முதலையின்கையிலே அகப்பட்டுப்பட்ட துயரங்காத்து- து:க்கத்தைப்பரிஹரித்து, கையில்பறித்த பூச்செவ்வியழிவதற்குமுன்னே திருவடிகளிலே பணிமாறுவித்துக்கொண்டு- அளித்த- ரக்ஷித்தருளின, செம்- வாத்ஸல்யஸூசகமான சிவந்த, கண்- திருக்கண்களையுடைய, மால்கண்டாய்- வ்யாமோஹீகிடாய், நெளி- இத்தைஅழகிதாக வ்யவஸி பண்ணு, 'மால்' என்று அரைகுலையத்தலைகுலையவந்து தோற்றினபடி. (௨௯)

முப்பதாம்பாட்டு.

அ—வ்யதிரிக்தங்களில் போகாதபடி மநஸ்ஸை நியமித்துத் திருவடிகளினுறவை அறிந்திருப்பார்க்கு அம்மநஸ்ஸு தானே வரப்ப்ராப்திபற்றுதபடி பற்றிக்கொண்டு ஸந்நிதிவிஷ்டமாய் அவனைக்கிட்டுமென்கிறார்-

விஷயாநுபவங்களாலுள்ள காலுஷ்யம்போய்- (தெளிதாக) தெளிவையுடைத்தாம்படிக்கீடாக, (உள்ளத்தை) ஹ்ருதயத்தை ஸமவஸ்த்வமாம்படி, (செந்நிறீஇ) செவ்வேநிறுத்தி, (ஞானம்) தத்விஷயஸ்ரீஉவாவஸ ஜ்ஞாநத்தாலே, அவன்சேஷி நாம்சேஷம் என்கிற- (தெளிது ஆக) தெளிவுண்டாம்படியாக, ஸாக்ஷாத்காரவம்ஸம்- (நன்குஉணர்வார்) நன்றாகஉணர்ந்திருக்குமவர்களுடைய, (சிந்தை) மநஸ்ஸானது, (எளிதாக) வருத்தமற, கூடநிற்கிறபசுக்களையும் கணிசியாதே- (தாய்நாடு) தன்தாயைத் தேடிக்கொண்டுகிட்டும், (கன்றுபோல்) கன்றுபோலே, (தண்டுழாயாள்) ஸ்ரீஸௌரமான திருத்துழாயாலே

மூ—யான்டிக்கே* போய்நாடிக்கொள்ளும்புரிந்து. (௩௦)

புரியொருகைபற்றி யோர்பொன்னாழியேந்தி* யரியுருவுமா ளுருவுமாகி*- யெரியுருவவண்ணத்தான் மார்பிடந்தமாலடியே யல்லான்* மற்றெண்ணத்தானாமோவிமை. (௩௧)

ஸ்வஸங்கல்பகனுகையாலே வகுத்தசேஷியுமாய் நிரதிசயபோ க்யனுமான எம்பெருமானுடைய, (அடிக்கே) திருவடிகளையே, வ்யக்த்யந்தரங்களைக் கணிசியாதே- (புரிந்துபோய்) அங்கே ஸுகி த்வமாய்க்கொண்டுபோய், (நாடிக்கொள்ளும்) தேடிக்கொள் ளாநிற்கும். இது நிஷ்கர்ஷம். (௩௦)

முப்பத்தோராம்பாட்டு.

அ—ஸ்ரீயஃபதிவிஷயத்தில் அவனுக்குண்டான வாராதந்த்ர்யவா த்ஸல்யங்களை அநுஸந்தித்தால் வேறேயொருவிஷயத்தை க்ஷண காலமும் நினைக்கப்போமோவென்கிறார்—

(புரி) ஸ்ரீபாஞ்சஜந்யத்தை, (ஒருகை) ஒருதிருக்கைபா லே, (பற்றி) தரித்து, (ஒருகை) மற்றத்திருக்கையிலே, (ஓர்) அத்விதீயமாய், (பொன்) ஸ்ப்ருஹணீயமான, (ஆழி) திருவா ழியை, (ஏந்தி) தரித்து, இவற்றுக்குவிஷயமில்லாதபடி- (ஆ ளுருவுமரியுருவுமாகி) நரஸிம்ஹங்க ளிரண்டுக்கும் ஆ ச்ரயமான வடிவையுடையனாய்க்கொண்டு, (எரிஉருவம்) அக்நியி னுடையவடிவுபோலே, எறிட்டுப் பார்க்கவொண்ணாத- (வண் ணத்தான்) வடிவையுடையனான ஹிரண்யனுடைய, (மார்வுஇ டந்த) மார்வைப்பிளந்துபொகட்ட ப்ரஹ்லாதத்தாலே, (மால்) ப்ரஹ்லாதன்பக்கல் வ்யாமோஹனவனுடைய, (அடியல்லால்) தி ருவடிகளையொழிய, (இமை) ஒருக்ஷணகாலமும், (மற்று) வே றுவிஷயத்தை, (எண்ணத்தான்ஆமோ) நினைக்கத்தான்போமோ அன்றிக்கே நெஞ்சைஅபஹரித்து வேறொன்றை எண்ணப் போமோ, இமை- இத்தையநுஸந்தித்துப்பார்என்றுமாம். (௩௧)

முப்பத்திரண்டாம்பாட்டு.

அ—சாஸ்த்ரங்களிற்சொல்லுகிற ஸாதநாநுஷ்டாநங்களில் அந் வயமில்லையே யாகிலும் சேஷசேஷிபாவமான உறவு

மூ—இமையாதகண்ணா லிருளகல நோக்கி* யமையாப்பொறிபுலன்களைந்தும்*- நமையாமல் ஆகத்தணைப்பாரணைவரே* ஆயிரவாய் நாகத்தணையான் நகர். (௩௨)

நகரமருள் புரிந்துநான் முகற்குப்பூமேல்* பகரமறை

---

அறிந்தவர்களுக்கும் பரமபதத்தைப் ப்ராபிக்கலாருங் கிடைரென்கிறார்—

(இமையாத) ஜ்ஞாநஸங்கோசரஹிதமான, (கண்ணால்) நெஞ்சென்னு முட்கண்ணாலே, (இருள்) அஜ்ஞாநமாகிற வல்லிருள், (அகல) விட்டுநீங்கும்படியாக, (நோக்கி) ஸ்வஸ்வரூபபரஸ்வரூபங்களை உள்ளபடி தர்சித்து, (அமையா) பெற்ற விஷயங்களால் பர்யாப்திபிறக்கக்கடவதன்றிக்கே யிருக்கிற, (பொறியைந்தும்) யந்த்ரகல்பமான ச்ரோத்ராதிகளைந்தையும், (புலன்களைந்தும்) தத்விஷயமான சப்தாதிகளைந்தையும், (நமையாமல்) நியமியாமல், ஸம்யஜ்ஞாநோத்யுக்தராய்க்கொண்டு- (அகத்து) ஹ்ருதயத்திலே, (அணைப்பார்) அவனைவைத்து அநுஸந்திக்குமவர்கள், (ஆயிரவாய்) அவனைப்புகழுகைக்கு ஆயிரம்வாயையுடைய, (நாகத்தணையான்) திருவனந்தாழ்வானைப் படுக்கையாகவுடைய ஸர்வேச்வரனுடைய, (நகர்) கலங்காப்பெருநகரை, (அணைவர்) சென்று கிட்டப்பெறுவர்.

அந்த ஸாதநாநுஷ்டாநம் பண்ணுதார்க்கு பரமபதத்தைப் ப்ராபிக்கப்போமோவென்றுமாம்: அமையாப்பொறிபுலன்கள்' என்று நியமிக்கவரிதான விஷயேந்த்ரியங்களென்னுமாம்.

முப்பத்துமூன்றுப்பாட்டு.

அ—எம்பெருமானை உள்ளீடாகக்கொள்ளாதேபண்ணும் ஸர்வ்யாவஹாராதி ஸாதநாநுஷ்டாநம் நிஷ்ப்ரயோஜநமென்கிறார்-

அந்தரங்கர்க்குக் கிட்டமாளிகை கட்டுமாப்போலே- (பூமேல்) ஜநநஹேதுவான திருநாபீகமலத்திலே, (நான்முகற்கு) சதுர்முகனுக்கு, (நகரம்) இருப்பிடத்தை, (அருள்புரிந்து) க்ருபாவத்ஸலமாகப் பண்ணிக்கொடுத்து, (பகர) இவ்வருகுள்ளார்க்கும் ஓதுவிக்கத்தக்கதாக, (மறை) ஸகலஜ்ஞாபகமான

மூ—பபந்தபண்பன்*– பெரியனைபேபுந்தியாற்சிந்தியா தோதி
யுருவெண்ணும்* அந்தியாலாம் பயனங்கென். (௩௩)

என்றொருவர்மெய்யென்ப ரேழுலகுண்டாலிலையில்* முன்
றொருவனாயமுகில்வண்ணா*– நின்னுருகிப்பேய்த்தாய்முலைதந்தா
ள்பேர்ந்திலளால்பேரமர்க்கண்* ணாய்த்தாய்முலைதந்தவாறு. (௩௪)

---

வெஃத்தை, (பபந்த) உவகரித்த, (பண்பன்) ஸௌஶீல்யாதிகுணங்களை யுடையனானவனுடைய, (பெயரினை) அந்தமாணங்களுக்கு வாசகமான திருநாமங்களை, (புந்தியால்சிந்தியாது) ஜ்ஞாநத்தால் அநுஸந்தியாதே, (ஓதி) வாசிகமாத்ரத்தாலே ஜபித்து, (உருவெண்ணும்) இடக்கைபற்றிக்கொண்டு அநுஸந்திக்கிற, (அந்தியால்) ஸந்த்யாவந்தநாதி கர்மாநுஷ்டாநங்களால், (அங்குஆம்) அவ்விடத்திலுண்டான, (பயன்என்) ப்ரயோஜநமேது. (௩௩)

முப்பத்துநாலாம்பாட்டு.

அ—இவ்விஷயத்தில் தலையானபக்தியை யுடையளாய்க்கொண்டு அவனை யநுஸந்திக்கப்பெற்றவள் யஶோதைப்பிராட்டியொருத்தியுமே யன்றோவென்கிறார்.

ப்ரளயத்திலழியாதபடி- (ஏழுலகு) ஸப்தலோகங்களையும் (உண்டு) அமுதுசெய்து, (ஆலிலையில்) முகிழ்விரியாததோராலந்தளிரிலே. (முன்) ஒருபரிவருமில்லாத ப்ரளயஸமயத்திலே, (ஒருவன்ஆய) அஸஹாயனாய்க்கொண்டு கண்வளர்ந்தருளின, (முகில்) காளமேகநிபஶ்யாமமான, (வண்ணா) வடிவையுடையவனே, அற்றையிழவுதீர- (நின்) உனக்குஸ்நேஹித்து, (உருகி) பரிவுடனே, (முலைதந்தாள்) முலைதந்து உகப்பித்தாளாயிருந்து, [பேய்த்தாய்] பேய்த்தாயான பூதனையானவள், [பேர்ந்திலள்] அவ்விடத்தினின்றும் பேரமாட்டாமல் பிணமாய்விழுந்தாள், அத்தை- [பேர்] பெரிய, [அமர்க்கண்] ஸௌந்தர்யமுடையிலே, [ஆய்த்தாய்] இடைத்தாயான யஶோதைப்பிராட்டி. அஞ்சாமல் அந்தவிஷத்துக்கு ஸ்ரூதமாக- [முலைதந்தவாறு] முலைதந்தப்ரகாரத்தை, [ஒருவர்] அறிவுக்கு அவிதீயரான வ்யாஸ

மூ—ஆறியவன்பிலடியார்தமார்வத்தால்* கூறியகுற்றமாக்கொள் ளல்நீ*- தேறிநெடியோயடி யடைதற்கன்றே* யீரைந்து முடியான்படைத்த முரண். (௩௫)

வாரணாதிகளான ரிஷிகள், [மெய்யென்பர்] வாக்யமென் றுசொல்லாநிற்பர்கள்; [என்] எங்ஙனே, நாட்டில்கண்டறிவதொ ருஸ்நேஹமாகிலன்றே மெய்யென்னலாவது, சுவடிதவடநா லாக்யங்களானவனுக்கு அஞ்சுகிற ஸௌமித்ரிப்ராட்டிஸ்நே ஹமு மொருஸ்நேஹமே! என்று விஸ்மரிக்கிறார். (௩௪)

முப்பத்தஞ்சாம்பாட்டு.

அ—இவளுடைய ஸ்நேஹத்தைக்கண்டவாறே அல்லாத தம்போ ல்வார்ஸ்நேஹம் ப்ராதிகூல்யஸமமாய்த் தோற்றி அத்தைப்பொ றுத்தருளவேணுமென்று அவனை க்ஷமைகொள்ளுகிறார்—

உனக்கு என்புகுருகிறதோவென்று பரிந்து வயிறெரியும்ப டி- ஆறிய- ஏறிமறிந்த, அன்புஇல் ஸக்தியின்றிக்கே, அடியார்- சேஷபூதராயிருக்குமவர்கள், தம்- தந்தாமு டைய, ஆர்வத்தால்- ஸ்நேஹத்தாலே, அநுபவிக்கவேணும் அடிமைசெய்யவேணும் என்றாப்போலே, கூறிய- ஸர்வயோக நமஸ்காரமாகச்சொன்ன வார்த்தைகளை, நீ- குற்றத்தை நற்ற மாகக்கொள்ளும் அதிசாத்ரவத்ஸலனானநீ, குற்றமாக்கொள்ளல்- குற்றமாகக்கொள்ளாதொழியவேணும், அதெங்ஙனேகூடும்படி என்று திருவுள்ளமாகில், ஈரைந்துமுடியான்- ப்ராதிகூல்யனான ராவணன், படைத்த- பூர்வவாக்யமாகப்பண்ணின, முரண்- திருவிளைப்பிரித்த மிகைச்செயலானது, நெடியோயடி- ஆநுகூல்யஸௌகர்யதிறத்தில் பண்ணும் ஸ்நேஹ வசீ காதங்களுக்கு எல்லைகாணவொண்ணாத பெருமையையுடைய வுன் திருவடிகளை, தேறி- காகுத்ஸ்தவிஷ்ணுதெளிந்து, அடைத ற்கன்றே. விபீஷணாழ்வானைப் புகட்டினைசக்ருதலாய்விட்டதில்லை போ? அன்றிக்கே, நீ தேறி ராவணனைப் செய்தகுற்றத்தைக்குற் றமாகக் கொள்ளாதொழியவேணு மென்னவுமாம், ப்ராதிகூல் யம் ஆநுகூல்யமாய்விளைத்தால் ஆநுகூல்யாபாஸம் ஆ நுகூல்யமாகத் தட்டுண்டோவென்றபடி, (௩௫)

ஸ்ரீ — முரண்வலி தொலைதற் காமென்றே, முன்னம்* தரணிதன தாகத்தானே*— யிரணியனைப்புண்ணிரந்த வள்ளுகிரால் பொன்னாழிக்கையால், நீ* மண்ணிரந்து கொண்டவகை* (௩௬)

வகையறு

முப்பத்தாறும்பாட்டு.

அ—இப்படி கூறிய குற்றமாக்கொள்ளல் என்று பொறைகொள்ளவேண்டாதபடி நீதானே உன்னையழியமாறிவந்து கார்யஞ்செய்தது ஸம்ஸாரிகள்கோணையைப் போக்கி உனக்காக்கிக் கொள்ளலாமென்று பார்த்தேயென்கிறார்-

முன்னம்- முன்பே, தரணி- உக்தமான ப்ருதிவியை, தனதாகத்தானே- தன்னதாகத்தானே அபிமாநித்திருந்த, இரணியனை- ஹிரண்யனை, புண்ணிரந்த- புண்படுத்திப்பிளந்த, வள்- கூரிய, உகிரால்- திருவுகிரோடேகூடியிருப்பதாய், பொன்- ஸ்வர்ணமயமான, ஆழி- திருவாழியையுடைத்தான, கையால்- திருக்கையாலே, நீ- ஸ்ரீயபதியானநீ, மண்- ப்ருதிவியை, இரந்து- யாசித்து, கொண்டவகை- அளந்துகொண்டவ்யாபாரம், "நநமேயம்" என்கிறபடியே தலைவணக்கமறுத்திரியும் கஞுங்கரான், முரணைவலி- ஸம்ஸாரிகள் கோபணைமிடுக்கு, தொலைதற்காமென்றே- அறுக்கலாமென்றே.

இரப்புத்தோற்றநின்ற ஸௌலப்யத்தையும் வடிவழகையுங்காட்டி நானெனக்கென்றிருக்கும் மிறங்குதலைமீட்டு உனக்கேயாளாம்படி சேர்த்துக்கொள்ளுகைக்காகவன்றோ வென்றபடி.(௩௬)

முப்பத்தேழாம்பாட்டு.

அ—அங்ஙனே தன்னையிரக்கவந்தோற்றவந்து என்னளவன்றிக்கே என்றுந்தன்னை யாசியாக்கிக்கொண்டு ஸர்வர்க்கும் ஸர்வகாலத்திலும் ஆச்ரயிக்கலாம்படி திருமலையிலேவந்து நித்யஸந்நிஹிதனானானென்கிறார்-

ஸூர்யாஸ்வாத்ர ஹ்ருஷீகேச த்ரவித்த வஸ்வர் ஸம்ஸாரத்ரேவண பலவகைப்பட்டிருக்கிற க்ஷேத்ரவாஸார்த்தங்களையும் வாசிவார்த்தார்த்த லக்ஷண ஸௌக்ஷ்த்தையும், ஸங்கியரு

மூ—நன்கேள்விவாய்வார்கள்நாளும்* புகைவிளக்கும் பூம்புன லுமேந்தித்*- திசைதிசையில்வேதியர்கள்சென் றிறைஞ்சும்வேங் கடமே* வெண்சங்கமூதிய வாய் மாலுகந்தவூர் (௩௭)

ஊரும்வரியரவமொண்குறவர் மால்யானை*

---

அலகலகாக வகையறுக்கைக்குறுப்பாய், நன்கேள்வி - ஸம்யக் ஞாநவிஷயமான ச்ரவணம், வாய்வார்கள் - வாய்த்திருக்கும், வேதியர்கள் - வேதார்த்தவித்துக்களானவர்களும், நாளும் - ஸர்வகாலமும், ஆராதநோபகரணமான - புகைவிளக்கும் - தூபதீபங்களையும், பூம்புனலும் - பூவோடேகூடின ஜலத்தையும், ஏந்தி - தரித்துக்கொண்டு, பெரியதிருநாளுக்குப்போமாப்போலே, திசைதிசையில் - ஸர்வதோதிக்கமாக, சென்று - எடுத்துவிட்டுச்சென்று, இறைஞ்சும் - ஆச்ரயிக்கும், வேங்கடமே - திருமலையே, ஹாரதலஸாத்திலே ப்ரத்யக்ஷம்நமிக்கும்படியாக - வெண் - வெளுத்தநிறத்தையுடைய, சங்கமூதிய - ஸ்ரீபாஞ்சஜந்யத்தை மடுத்தூதின, வாய் - திருப்பவளத்தையுடையனாய், மால் - ஆச்ரிதவ்யாமோஹனான க்ருஷ்ணன், ஆச்ரிதரக்ஷணத்துக்கு அநுகூலமான தேசமென்று, உகந்தவூர் - உகப்புடனேவர்த்திக்கிறவூர். (௩௭)

முப்பத்தெட்டாம்பாட்டு.

அ—இப்படி அவன் திருமலையிலே உகந்து நித்யவாஸம்பண்ணுகையாலே இவரும் தத்ஸம்பந்தத்தாலே அங்குண்டான ஸர்வமும் குறவர் ஆனை அத்தைபெறிகைக்குக் கருவியானமணி; புற்றுமுதலான பதார்த்தங்களையெல்லாம் அவனோபாதி ப்ராப்யமாக நினைத்து மண்டியநுபவிக்கிறார்-

ஒருகாயப்படற (ஊரும்) ஸ்வைரஸஞ்சாரம்பண்ணுகிறதாய், (வரிஅரவம்) ஸுலக்ஷணமான வரியையுடைத்தான ஸர்ப்பமானது, திருமலையில்நின்றும் கிழிழியுமது குடிப்பழியாகநினைத்திருக்கும்- (ஒண்குறவர்) விலக்ஷணரான குறவர், புனத்தில்வந்து பட்டிமேய்கிற (மால்) பெருமதமான, (யானை) ஆனையானது; மணிகளின்ஒலியைக் கண்டுசலித்து

மூ—பேரவெறிந்தபெருமணியைக் காருடையமின்னென்றுபுற்றடையும்வேங்கடமே, மேலசுரரென்னென்றமாலதிடம். (௩௮)
இடந்ததுபூமியெடுத்தது

(பேரஎறிந்த) மலைபேர்ந்தாப்போலே பேர்ந்துபோம்படியாக எறிந்த, ஒருமலையிலே ஒருமலைதாக்கினாப்போலே யிருக்கும். (பெரு) பெருமையையுடைய, (மணியை) மாணிக்கத்தை, யானையின்கறுப்பும் மணியின்புகரும் தன்னில் வாசிதோற்றுகையாலே, (காருடையமின்னென்று) மேகத்தோடேகூடினதொரு மின்னாகக்கருதி, தசநகாஹியான இடிக்குப் பயப்பட்டு நிஹ்லயஸ்தாநமான, (புற்றுஅடையும்) புற்றிலேசென்று ப்ரவேசிக்கும் சிறப்பையுடைய, (வேங்கடமே) திருமலையே, அக்ரரான தேவர்களன்றியே, (மேல) ஸர்வோத்க்ருஷ்டரான, (சுரர்) நித்யஸூரிகள், (என்னென்ற) எங்களதென்று மேல்விழுந்து, (மாலதிடம்) ஸந்நிஹிதிவிஷ்டராய நமஹவிக்கும்தேசம்.

'என்னென்றமாலதிடம்' என்று எங்களது எங்களது என்று ஸந்நிவேசிக்கைக்கு விஷயமான ஸ்தாநமென்றபடி. 'எம்' என்கிறவித்தை மாலோடேகூட்டி எங்களுக்கு ப்ராப்யமென்னப்பட்ட ஸர்வேஶ்வரனதான இடமென்றுமாம், முற்பட யோஜனைக்கு 'மால்' என்று ஸந்நிவேசத்தைச் சொல்லுகிறது. (௩௮)

முப்பத்தொன்பதாம்பாட்டு.

அ—மற்றுமுள்ள திவ்யதேசங்களிற்காட்டில் திருமலைக்கு இத்தனையேற்றமென்னென்ன; அவையெல்லாமொருதட்டும் இதுவொருதட்டென்னும்படி அவன்விரும்பினதேசமன்றோ? திருமலையென்கிறார்.

(பேர்) பெரிய, (ஓதம்) திரைக்கிளர்த்தியையுடைய கடல் போன்ற, (வண்ணர்) வடிவையுடையவர், வராஹவேஷங்கொண்டு ப்ரளயத்திலே புகுந்து, (இடந்தது) இடந்தெடுத்துக்கொண்டேறினது, (பூமி) ஸமஷ்டி, க்ருஷ்ணவேஷங்கொண்டு வஷராவத்தைப் பரிஹரிக்கைக்காக, (எடுத்தது) எடுத்தருளித்து

மூ—குன்றம்* கடந்தது கஞ்சனை முன்னஞ்சக*- கிடந்ததுவும் நீரோதமாக்கடலே நின்றதுவும் வேங்கடமே* பேரோதவண்ணர் பெரிது* (௩௯)

பெருவிற்பகழிக் குறவர்கைச்செந்தீ* வெருவிப்புனந் துறந்தவேழ*- மிருவிசும்பில்மீன்வீழக்கண்டஞ்சும் வேங்கடமே* மேலசுரர் கோன்வீழக்

---

க்கொண்டுநின்றது, (குன்றம்) கோவர்த்தநம், (முன்) உறவிலேபழைத்து நலியநினைத்த முற்காலத்திலே (அஞ்ச) கண்டகாக்ஷியிலே நடுங்கும்படியாக, (கஞ்சனை) கம்ஸனை, (கடந்தது) ஸம்ஹரித்துமுடித்துவிட்டது, இவ்வவதாரங்களுக்கடியாக- (நீர்) மிக்கநீரையுடைத்தாய், (ஓதம்) அலையெறிகிற (மா) பெரிய, (கடல்) திருப்பாற்கடலிலே. (கிடந்தது) கண்வளர்ந்தருளிற்று, இங்கு அப்படியன்று; ஸகலாவதாரங்களிலுமுள்ள குணசேஷ்டிதங்களடங்கலும் ப்ரகாசிக்கும்படி உகப்புடனே என்றுமொக்க- (பெரிது) மிகவும், (நின்றது) நின்றருளிற்று, (வேங்கடமே) திருமலையிலேகிடீர். (௩௯)

நாற்பதாம்பாட்டு.

அ—ஆஶ்ரிதவிரோதிநிரஸநம்பண்ணி உகக்கு மிதுவேகிடீர் அவன் இங்குத்தை நித்யவாஸத்துக்குப் ப்ரயோஜநமாக நினைத்திருப்பதென்கிறார்-

'ஸ்வஹஸ்தோஹஸநாக:' என்கிறபடியே (கை) ஒருகையிலேயெடுத்துப்பிடித்த, (பெருவில்) பெரியவில்லையும், (பகழி) வாயம்புகளையு முடையரான, (குறவர்) திருக்குறவர், மற்றக் கையிலே வழியில் வெளிச்செறிப்புக்காகப்பிடித்த- (செம்) சிவந்தநிறத்தை யுடைத்தான, (தீ) சூள்நெருப்பினொளிவழியே, இவர்கள் கையும்வில்லும் பிடித்தசூளுமாய்க்கொண்டு ஆயத்தப் பட்டு வருகிறபடியைக்கண்டு, (வெருவி) நம்மைநலியவருகிறார்கள் என்றுபயப்பட்டு, ஒருக்காலும் இங்குவரக்கடவோமல்லோம் என்று- (புனம்துறந்த) புனத்தை ஸந்யஸித்துப்போன, (வேழம்) ஆனையானது, போமிடந்தன்னிலும்- (இரு) பரப்பையுடைத்தான, (விசும்பில்) ஆகாசத்தினின்றும், (மீன்வீழ)

மூ—கண்டுகந்தான்குன்று. (சO)

குன்றனையகுற்றஞ் செயினுங்குணங்கொள்ளு* மின்றுமுத லாகவென்னெஞ்சே*- யென்றும்புறனுரையேயாயினும் பொன்

---

நக்ஷத்ரங்கள்வீழ, (கண்டு) அத்தைக்கண்டு, நமக்கு அவ்வருகு ஓடி இடவொண்ணாதபடி ஸந்நிதியிலே நெருப்பைவிழவிட்டார்கள் என்று அவ்வருகுபோகமாட்டாமல் புனத்திலேபுக மாட்டாமல் நடுவேநின்று (அஞ்சும்) நடுங்கும்படியான, (வேங்கடமே) திருமலையே, (மேல்) முன்பொருகாலத்திலே, (அசுரர்கோன்) ஸர்வலோகராஜனென்று விருதூதித்திரிந்த ஹிரண்யன், (வீழக்கண்டு) பிணமாய்விழுந்துபோகக்கண்டு, சிறுக்கன்விரோதிபோகப்பெற்றோம் என்று- (உகந்தான்) உகந்தஸர்வேஶ்வரன், பின்புள்ள ஆஶ்ரிதவிரோதிகளையும் தீர்க்கவேணுமென்றுவதிஷ்டிக்கிற, (குன்று) மலை. (ச0)

நாற்பத்தோராம்பாட்டு.

அ—இப்படி அவன் ஆஶ்ரிதவிரோதி நிரஸநஶீலனாகிலும் தோஷமேவேஷமான நமக்கு அவனைச்சென்றணுகப்போமோ என்று திருவுள்ளம்பயப்பட உனக்கு ஆஶ்ரயணவ்யாஜமுண்டாகவே அவன் நம்குற்றத்தை யடைய நற்றமாகக்கொள்ளும் அஞ்சவேண்டாவென்கிறார்-

என்வழியேயொழுகும்படி (என்) எனக்குப்பாங்கான, (நெஞ்சே) நெஞ்சே, (என்றும்) ஸர்வகாலத்திலும், ஸஹ்ருதயமாகவன்றிக்கே கேவலம் வாங்மாத்ரஸித்தமான- (புறனுரையேயாயினும்) புறப்பேச்சாலேயாகிலும், ஸுஹ்ருதயோக்தியையும் ஸஹ்ருதயமாம்படி பண்ணவற்றான- (பொன்னாழிக்கையான்திறன்) அழகிய திருவாழியும்கையுமான சேர்த்தியழகையுடைய ஸர்வேஶ்வரனிடையாட்டமாய், ஶ்ரீராமாவதாரமடியாக (உரையே) 'ந த்யஜேயம்' என்னும்படியான சொல்லையே, (சிந்தித்து) அநுஸந்தித்துக்கொண்டு, 'ஸதாமேதத்' என்னும்படி (இரு) நிர்ப்பரனாய்க்கொண்டிரு, (இன்றுமுதலாக) இவ்வாத்மவஸ்துவுண்டான இன்றுமுதலாக, (குன்றனைய)

மூ—ஆழிக்கையான்* திறனுரையே சிந்தித்திரு. (௪௧)

திருமகளுமண்மகளுமாய்மகளுஞ்சேர்ந்தால்* திருமகட்கே தீர்ந்தவாறென்கொல்*— திருமகள்மேல்

மலைபோலே ஸ்வயத்நத்தால் சலிப்பிக்கவொண்ணாதபடி பெருத்து உறைந்திருக்கிற, (குற்றம்) குற்றங்களை, (செயினும்) பத்தும் பத்தாகச்செய்தாலும், க்ருதஜ்ஞனானவன்- செய்தாரேல் நன்றுசெய்தார், என்னும்படி- (குணம்கொள்ளும்) குணமாகக்கொள்ளும். (௪௧)

நாற்பத்திரண்டாம்பாட்டு.

அ—இப்படி குற்றத்தை ஸ்வதந்த்ரனானவன் குணமாகக்கொள்ளக்கூடுமோவென்னில்? 'நகச்சிந்நாபராத்யதி' என்று பிராட்டிமார்மூவரும் அங்கே குடியிருக்கையாலே கூடுமென்கிறார்—

(பாலோதம்) திருப்பாற்கடலில் சிறுதிவலைகளானவை, ஸ்ரீஹாரமாம்படி அடைகுத்துவாரைப்போலே- (சிந்த) நாலுபாடும்சிதறிவிழ, (படம்) ஸ்வஸ்பர்சத்தாலே விகஸிதமான பணங்களையுடைய, (நாகணை) திருவனந்தாழ்வானாகிற படுக்கையிலே, (கிடந்த) பள்ளிகொண்டருளுகிற- (மல்) பெரிய, (ஓதம்) கடல்போலே ஸ்ரீஹாரமான, (வண்ணர்) வடிவையுடையனான ஸர்வேச்வரனுடைய, (திருமகள்மேல்) பெரியபிராட்டியார்மேலே, அத்யபிநிவிஷ்டமாய்ச்செல்லுகிற, (மனம்) திருவுள்ளமானது, (திருமகளும்) குற்றத்தைப்பொறுப்பிக்கும் பெரியபிராட்டியாரும், (மண்மகளும்) பொறைவிளையும்தறையான ஸ்ரீபூமிப்பிராட்டியாரும், குற்றம்கிளராதபடி திருவுள்ளத்தைத்திறைகொள்ளும்- (ஆய்மகளும்) தோஷகுணவிவேக தீண்டியான நப்பின்னைப்பிராட்டியும், (சேர்ந்தால்) ஸாக்ஷாத்தாக ஸம்ச்லேஷித்தால், ஷோடசஸஹஸ்ராதிகளோபாதி தேவிமாராகமாண கொடியிலேநின்று பிராட்டியோடே கலக்குமிடத்தில் ஸாபத்ந்யமற அல்லாத பிராட்டிமாரெடுத்துக் கைநீட்டுகையாலும் அவர்களோடே கலக்குமிடத்தில் தன்முலையிலும் இடையிலும் கலந்தாப்போலே பிராட்டி நினைத்திருக்கையாலும், (திருமகட்கே)

மூ—பூலோதஞ் சிநதப்பட-நாகணைகிடந்த* மாலோதவண்ணர் மனம். (௪௨)

மூ—மனமாசுதீருமருவினையுஞ்சாரா* தனமாயதானேகைகூடும் புனமேயபூந்துழாயானடிக்கே போதொடுநீரேந்தி* தாந்தொழாநிற்பர் தமர். (௪௩)

பெரியபராட்டியார்க்கே, (தீர்ந்தவாறு) அற்றுத்தீர்ந்ததாயிருக்கிறபடி, (என்கொல்) எங்ஙனேதான், இத்தால்மூவர்க்குமுண்டான வைலக்ஷண்யம்சொன்னபடி. (௪௨)

நாற்பத்துமூன்றும்பாட்டு.

அ—பிராட்டிமார் நித்யஸந்நிஹிதராயிருக்கையாலே தங்கள் குற்றத்தைநினைத்துப் பிற்காலிக்கவேண்டுவதில்லை, இனிஸாத்யஸாதநமான வ்ருத்தியிலே அந்வயிக்கவே விரோதிவர்க்கம் தன்னடையேவிட்டு நீங்குமென்கிறார்—

திருமேனியின்ஸௌந்தர்யத்தாலே, (புனம்மேய) தன்னிலத்தில்நின்றாற்போலே செவ்விபெற்று, (பூ) பூத்த, (துழாயான்) திருத்துழாயாலே அலங்க்ருதனான ஸர்வேச்வரனுடைய, (அடிக்கே) திருவடிகளுக்கே, அடிமைக்குக் கைதொடுமானமான; போதொடு- சூட்டுநன்மாலைகளோடேநீராட்டுகைக்கு உபகரணமான, (நீர்) நன்னீரையும், (ஏந்தி) ஸாதரமாக தரித்துக்கொண்டுநின்று, தங்களுக்குநிரதிசயபோக்யமாக, (தமர்தாம்) ஆச்ரிதரானதாங்கள், (தொழாநிற்பார்) அடிமைசெய்யாநிற்பர்கள், இவர்கள் இப்படிவகுத்த அடிமைசெய்யவே, (மனம்) அந்தஸ்ஸ்தவாஸிகரமான உந்நலெல்லைப்பற்றிக்கிடக்கிற (மாசு) அஜ்ஞாநம்விஷயாநுபம் முதலானதோஷங்களடங்கலும், (தீரும்) தன்னடையேவிட்டுக்கழலும், அவற்றுக்கடியாய் (அரு) ஸ்வயத்நத்தால் போக்கவரிய, (வினையும்) பூர்வோத்தராகங்களும், (சாரா) கிட்டவாராது, கைங்கர்யோபகரணமாய் ஸ்வாஸ்வாதநமான- (தனமாய) தநமாயிருக்கிற வாஹநாதிகளும் (தானேகைகூடும்) தனக்குத்தானேவந்து கைபுகுரும். (௪௩)

மூ—தமருகந்த தெவ்வுருவ மவ்வுருவந்தானே* தமருகந்த தெப்பேர் மற்றப்பேர்*- தமருகந்த தெவ்வண்ணஞ் சிந்தித்திமையா திருப்பரே* அவ்வண்ண மாழியானும். (௪௪)

நாற்பத்துநாலாம்பாட்டு.

அ—ஆச்ரிதர் இப்படி அடிமைசெய்யுமளவில் இவர்களுக்கு அஜ்ஞாநாதிகளை யுடையனாய்க்கொண்டு தன்னையமைத்து ஸ்வதந்த்ரனான ஸர்வேச்வரன் இங்கே அடிமைகொள்ளுமென்கிறார்.

தன்கருத்தறிந்து எடுத்துக்கைநீட்டும் (ஆழியான்) திருவாழிமுதலான திவ்யாயுதங்களை யுடையனான ஸர்வேச்வரன், அவர்களைக்காற்கடைக்கொண்டு, (தமர்) இன்று ஸம்ஸாரத்திலே தன்னைப்பற்றியிருக்கும் ஆச்ரிதரானவர்கள், ஸ்வர்ணரஜதாதிகளான த்ரவ்யங்களாலே, (உகந்தது) உகந்துவறியருள்ப்பண்ணினது, (எவ்வுருவம்) யாதொருவிக்ரஹம், (அவ்வுருவம்) அந்தவிக்ரஹத்தை, ஸ்வாஸாதாரணமான விக்ரஹத்தோபாதி, (தானே) தானே ஆதரித்து, (ஆம்) பரிக்ரஹியாநிற்கும், (மற்று) இப்படி அவர்களுகந்த திருமேனியை விரும்புகிறவளவன்றிக்கே (தமர்உகந்த) ஆச்ரிதர்உகந்துசாத்தின திருநாமம், (எ) யாதொன்று, (அப்பேர்) அந்தத்திருநாமத்தை, நாராயணாதி நாமங்களோபாதி, (ஆம்) தனக்குநாமமாக விரும்பாநிற்கும், (தமர்) ஆச்ரிதரானவர்கள், (உகந்து) உகந்துகொண்டு, (எவ்வண்ணம்) குணசேஷ்டிதாதிகளான யாதொருப்ரகாரத்தை, (சிந்தித்து) அநுஸந்தித்து, (இமையாதிருப்பர்) அநவரதபாவநை பண்ணியிருப்பர்கள், (அவ்வண்ணமாம்) அந்தப்ரகாரத்தையுடையனாநிற்கும்.

இப்படி தன்பெருமைபாராதே ஆச்ரிதருகந்த ரூபநாம குணசேஷ்டிதாதிகளைத் தானுடையனாய்க்கொண்டு ஆச்ரிதரையடிமைகொள்ளும் ஸ்வாதந்த்ர்யத்தின் நீர்மையினேற்றத்தை அநுஸந்தித்து விஸ்மயிக்கிறார். (௪௪)

நாற்பத்தஞ்சாம்பாட்டு.

அ—இப்படியிருக்கிற வன்நீர்மை ப்ரஹ்மாதிகளுக்கும் நிலமல்லவென்கிறார்—

௪௫—ஆமேயமரர்க்கறிய, அதுநிற்க* நாமேயறிகிற்போம் நன்னெஞ்சே*- பூமேயமாதவத் தோன்றாள்பணிந்த வாளரக்கன் நீண்முடியைப்* பாதமத்தாலெண்ணினான் பண்பு. (௪௫)

(நல்நெஞ்சே) என்னினைவிலேநடக்கும் நல்நெஞ்சே, (பூமேயமாதவத்தோன்தாள்பணிந்த) திருநாபீகமலத்தைத் தனக்கு வாஸஸ்தானமாக வுடையனாய் ஜகத்ஸ்ருஷ்டிக்கு உபகரணமான தபஸ்ஸ்வரூபமான ஜ்ஞானத்தையுடையனான ப்ரஹ்மாவினுடைய காற்கீழே தலைமடுத்து எனக்குவரந்தரவேணும் என்றாச்ரயித்த, (வாளரக்கன்) ஸாயுதனான ராவணனுடைய, (நீள்) ஓங்கத்தையுடைத்தான, (முடியை) தலைகளை, புதுக்குப்பிடிகண்டு இறுமாந்து மேல்விளைவதறியாமல் அந்த ப்ரஹ்மா அவனுக்குவேண்டின வரங்களைக்கொடுப்பதாக ஒருப்படுகிறவளவிலே ஒருவாஜனாய்க்கொண்டு அவன்மடியிலேவந்து ஆவிர்ப்பவித்து அவைகள் அறுப்புண்ணும் தலைகளென்னுமிடத்தை, எனக்கு நிரதிசயஸௌஹார்த்தரான- (அப்பாதத்தால்) அந்தத்திருவடிகளாலே நீறி, (எண்ணினான்) எண்ணிக்காட்டி அந்த ப்ரஹ்மாவின ஸங்கடத்தைப் பரிஹரித்த ஸர்வேச்வரனுடைய, (பண்பு) குணங்களை, தங்கள்ஹிதமறியாமல் ஸங்கடத்தைச் சூழ்ந்துக்கொள்ளக்கடவ, (அமரர்க்கு) ப்ரஹ்மாதிதேவர்களுக்கு (அறியவாமே) அறியப்போமோ, (அதுநிற்க) அதுகிடக்கிடாய் (நாமே) அவனருளாலே தெளியக்காணவல்ல நாமே, (அறிகிற்போம்) அறிகைக்கு சக்தராகாநின்றோம்.

பேரளவுடைய ப்ரஹ்மாதிகள் மதிகெட்டு நிலம்துழாவாநிற்க நாமே அவனை அறியப்புகாநின்றோமென்றுமாம். (௪௫)

நாற்பத்தாறாம்பாட்டு.

அ—ப்ரஹ்மாவுக்குவந்த ஸங்கடத்தைப் பரிஹரித்து ரக்ஷித்தவளவன்றிக்கே லோககுருவுமாய் பிதாவுமான அந்த ப்ரஹ்மாவின் தலையையறுத்து பாபோபஹதனாய்க் கையும் கபாலமுமாய் இரந்து உண்டுதிரிந்த ருத்ரனுடைய ஸங்கடத்தைப் பரிஹரித்து ரக்ஷித்தபடியை யருளிச்செய்கிறார்.

மூ—பண்புரிந்தநான்மறையோன் சென்னிப்பலியேற்ற* வெண்
புரிநூல்மார்பன்வினைதீரப்*- பண்புரிந்தஆகத்தான்றாள்பணிவார்
கண்டீர்* அமரர்தம்போகத்தால் பூமியாள்வார். (௪௬)

வாரிசுருக்கி மதக்களிறைந்தினையும்* சேரி

பண்புரிந்த- ஸ்வரத்திலே நோக்காய், நான்மறையோன்- ஸ்வராதிபேதத்தாலே நாலுவகைப்பட்டிருக்கிற வேதத்தை யப்யஸித்திருந்துள்ள ப்ரஹ்மாவினுடைய, சென்னி- தலையை, 'ஹரிணஜஸ்யஶிரோபயா' என்கிறபடியே அறுக்க, அவன் 'ஸ்வாமீ ஸம்ஹவிஷ்யஸி' என்று அநந்தரம்ஸவிகக தவ்ஷாபாவஸ்துனைக்கொண்டு- அவன் தலையோட்டிலே, பலியேற்ற- நெடுங்காலம் இரந்துதிரிந்தவனைப், 'ப்ராயஶ்சித்தி' என்னுமிடந்தோற்ற, வெண்புரிநூல்- வெளுத்தபூணூலையும், மார்பன்- மார்பிலேயிட்டு விநீதவேஷனுமாயிருக்கிற ருத்ரனுடைய, வினை- ப்ரஹ்மஹத்யாரூபமான பாபம், தீர- விட்டுநீங்கும்படியாக, 'நவாமேருண்விசாரிதம்' என்கிறபடியே திருவுகிராலேகீறி, புண்புரிந்த- ஶரஸஜாதரக்தஜலத்தை உபகரித்த ஆகத்தான்தாள்- திருமேனியையுடைய ஸர்வேஶ்வரன்திருவடிகளை, பணிவார்- ஆஶ்ரயிக்குமவர்கள், கண்டீர்- கிடீர், அமரர்தம்போகத்தால்- நித்யஸூரிபோகமான பரமபதபோக்யத்தோடேகூட, பூமி- ஸமஸ்தஐஶ்வர்யபூமியான லீலாவிபூதியையும், ஆள்வார்- ஸ்வாதீநமாக நிர்வஹிக்குமவர்கள்.

நாற்பத்தேழாம்பாட்டு,

அ—இந்த்ரியங்களைஜயித்து ஸம்யக்ஜ்ஞாநத்தை யுடையவர்களாய் அவனை ஆஶ்ரயிப்பார்க்கல்லது- அவன்திருவடிகளைக் கிட்டவொண்ணாதென்கிறார்-

(வாரி) ஸாதுக்களான ஸூரிகளான ஜலத்தைக்கண்டு, கடுகமாற்றுதல் நெடுகவிடுதல் செய்யாதே நடுத்தரமான க்ஷேத்ரத்திலே (சுருக்கி) ஸங்கோசிப்பித்து, களித்துக் கண்டகண்ட விஷயங்களிலே காடுபாய்ந்துதிரிகிற- (மதக்களிறைந்தினையும்) ஶ்ரோத்ராதிகளான இந்த்ரியங்களைந்தையும், (சேரி) விஷய

மூ—திரியாமற்செந்நிறீஇச்*- கூரியமெய்ஞ்ஞானத்தா லுணர்வார்காண்பரே* மேலொருநாள் கைந்நாகங்காத்தான்கழல். (சஎ)

கழலொன்றெடுத் தொருகை சுற்றி* யோர்கைமேல் சுழலுஞ்சுராசுரர்களஞ்ச*-

---

ங்களாகிற குடியிருப்புகளில், பண்டுபோலே கயிறுருவிவிட்டு (திரியாமல்) ஸஞ்சரியாதபடியாக, ப்ரத்யக்விஷயப்ரவணமாம்படி (செந்நிறீஇ) செவ்வேநிறுத்தி, ஸந்நிஹிதமமாக ஸந்துக்ஷித்த ஸங்கல்பத்தாலே தெளிந்தநிஷ்கர்ஷத் தளமாக முளைத்து ஸர்வவ்யாபகத்வத்தை யதாவாக ஸ்பர்சிக்கும்படி (கூரிய) அதிஸூக்ஷ்மமாய், ஜ்ஞேயவிஷயத்தை ப்ரத்யக்ஷமாக க்ரஹிக்கையாலே (மெய்ஞ்ஞானத்தால்) யதார்த்தமாயிருக்கிற ஸாக்ஷாத்காரரூபஜ்ஞானத்தாலே, (உணர்வார்) அவனையுள்ளபடியுணர க்ஷமரானவர்கள், (மேலொருநாள்) பண்டொருநாளிலே 'அடிமைசெய்யவேணும்' என்னு மபிநிவேசத்தாலே ஸர்வாவயவமாக வொருபொய்கையிலேபுக்குத் துதிக்கைமுழுத்தும்படி முதலையாலேபிடர்ப்பட, (கைந்நாகங்காத்தான் கழல்) ஸ்ரீகஜேந்த்ராழ்வானை விரோதியைப்போக்கி அடிமைகொண்டுரக்ஷித்த ஸர்வேச்வரனுடைய திருவடிகளை, (காண்பர்) கண்டநுபவிக்கப்பெறுவர்கள். (சஎ)

நாற்பத்தெட்டாம்பாட்டு.

அ—நமக்கு இவ்வருந்தொழில்களில் இழியவேண்டா தானேவந்து தன்னைத்தரும் ஸ்வபாவனன்றோ வென்று அவன்படியை யநுஸந்தித்து நெஞ்சே! நீ அவனை ப்ரீதிபூர்வகமாக அநுபவிக்கப்பாரென்கிறார்-

(ஓர்கழல்) ஒருதிருவடியை, (எடுத்து) ஊர்த்வலோகங்களிலே செல்லவளர்த்து, (ஒருகை) ஒருதிருக்கையாலே, ப்ரதிகூலரான நமுசிப்ரப்ருதிகளை (சுற்றி) சுற்றிபெறிந்து, (ஓர்கைமேல்) மற்றையொருதிருக்கையின்மேலே, (சுழலும்) வயிறுமறுகிப்ரமிக்கிற, (சுராசுரர்கள்) அநுகூலரானதேவர்களும் ப்ரதிகூலரான அஸுரர்களும், (அஞ்ச) நடுங்கும்படி

மூ— அழலுஞ்செருவாழியேந்தினான் சேவடிக்கேசெல்ல* மருவாழி நெஞ்சே? மகிழ். (௪௮)

மகிழலகொன்றேபோல் மாறும்பல்யாக்கை* நெகிழமுயல்கிற்பார்க்கல்லால்*- முகிழ்விரிந்தசோதிபோற்றோன்றுஞ் சுடர்பொன்னெடுமுடி* யெம்

ச்சீடாக, (அழலும்) ஶத்ருவக்ஷத்தின்மேலே அழலையுமிழுகிற, (செரு) யுத்தஸாதநமான, (ஆழி) திருவாழியை, (ஏந்தினான்) தரித்தஸர்வேஶ்வரனுடைய, (சேவடிக்கேசெல்ல) ஆஶ்ரிதரிருந்தவிடமே எல்லையாகவளரும் திருவடிகளிலேகிட்டும்படி, (ஆழிநெஞ்சே) அளவுடையநெஞ்சே? (மருவு) நிரந்தரமாகப்பொருந்தப்பார், அது தேவையாகாதபடி (மகிழ்) மகிழ்வதுஞ்செய், ஶ்ரீவைஷ்ணவர்களுடையாக வாஸநைப்பண்ணென்றபடி. சேவடி- சிவந்தவடியென்றுமாம். (௪௮)

நாற்பத்தொன்பதாம்பாட்டு.

அ—எல்லாஞ்செய்தாலும் ப்ரக்ருதிப்ராக்ருதங்களில் விரக்தராய் அவனை ஆஶ்ரயிப்பார்க்கல்லது அவனைக்காண முடியாதென்கிறார்-

(மகிழலகொன்றேபோல்) கணிதத்தில் நிவேஶனத்திலே வைக்கப்பட்டதொரு மகிழலகு காணிஸ்தானத்திலும் கோடிஸ்தானத்திலும் மாறிமாறிநிற்குமாப்போலே, ஸ்வகர்மஸம்ஸ்காரத்தாலே கர்மாநுகுணமாக உத்க்ருஷ்டாபக்ருஷ்டமாக (மாறும்) மாறிமாறிவரக்கடவ, ப்ரஹ்மாதிவிவிதாகாரமாக (பல்யாக்கை) பலவகைப்பட்டஶரீரங்கள், (நெகிழ) தன்னைவிட்டுநீங்கும்படியாக, ஜ்ஞாநபக்திவைராக்ய ஸம்பாதநோபாய (முயல்கிற்பார்க்கல்லால்) யத்நம்பண்ணுமவர்களுக்கல்லது, (முகிழ்விரிந்த) விகஸிதஸ்வபாவமான, (சோதிபோல்) தேஜஸ்ஸைப்போலே, (தோன்றும்) தோற்றுகிற, (சுடர்) தேஜஸ்ஸையுடைத்தாய், (பொன்) ஸுவர்ணமயமாய், (நெடு) ஸர்வாதிபத்யஸூசகமான, (முடி) திருவபிஷேகத்தையுடையராய், (எம்) எல்லார்க்கும் என்னுடையவனென்று முறைசொல்லிப்பற்றலா

மூ—மாதி காண்பார்க்கு மரிது. (சகூ)

அரியபுலனைந்தடக்கியாய்மலர்கொண்டு* ஆர்வம்புரியபரிசினாற்புல்கில்*- பெரியனாய்மாற்றாதுவீற்றிருந்த மாவலிபால்* வண்கைநீ ரேற்றானைக்காண்பதெளிது. (ருo)

---

ம்படி, (ஆதி) ஸர்வகாரணபூதனான ஸர்வேஶ்வரன், (காண்பார்க்கும்) கேவலம் காணவேணுமென்றிருப்பார்க்கும், (அரிது) அரியனாயிருக்கும். (சகூ)

ஐம்பதாம்பாட்டு.

அ—இதரவிஷயஸங்கமற்று ஸ்நேஹபூர்வமாக ஸமாஶ்ரயிக்குமவர்களுக்கு அவனைக்காணச் சாலவெளிதென்கிறார்.

(அரிய) நியமிக்கவரிதான, (புலனைந்து) ஶ்ரோத்ராதி ஜ்ஞாநேந்த்ரியங்களைந்தையும், இதரவிஷயங்களில் போகாதபடி (அடக்கி) நியமித்து, அங்குத்தைக்கு யோக்யமாம்படி (ஆய்) மயிர்புழுவறசோதித்த, (மலர்) செவ்விப்பூக்களை, (கொண்டு) ஸம்பாதித்துக்கொண்டு, (ஆர்வம்புரிய) ஸ்நேஹோத்தரமான (பரிசினால்) ப்ரகாரத்தாலே, அபிமதவிஷயத்தை யணைக்குமாப்போலே (புல்கில்) ஹார்தமாக ஸமாஶ்ரயிக்கில், (பெரியனாய்) ஸர்வஜ்ஞனிலுங்காட்டில் தன்னைப்பெருக்க நினைத்திருக்குமவனாய், (மாற்றாது) அர்த்திகளுக்குக்கொடுக்கும் கொடையிலொன்றும் மாறாமல், 'ஸர்வஸ்வதாநம்பண்ணக்கடவன் என்று (வீற்றிருந்த) தன்வேறுபாடுதோற்ற வீற்றிருந்த, (மாவலிபால்) மஹாபலிபக்கலிலே, கொடுக்கக்கொடுக்கப் பூரிக்கிற (வண்கை) அழகியதிருக்கையிலே, தான் அர்த்தியாய்ச்சென்று (நீரேற்றானை) நீரையேற்று மண்கொண்டவனை, (காண்பது) கண்டநுபவிக்கை, (எளிது) சாலவெளிதாயிருக்கும். (ருo)

ஐம்பத்தோராம்பாட்டு.

அ—இனிதாகத்திருநாமத்தை வாயாலேசொல்லவே ப்ரஹ்லாதனுக்கு விரோதியைப்போக்கித் தன்னைக் கொடுத்தாப்போலே நமக்கு விரோதியைப்போக்கித் தன்னை நமக்குத் தந்தருளுமென்கிறார்.

மூ—எளிதிலிரண்டடியுங் காண்பதற்கென்னுள்ளம்* தெளியத் தெளிந்தொழியுஞ்செவ்வே*- களியில்பொருந்தாதவனைப்பொர லுற்றரியா* யிருந்தான் றிருநாமமெண். (ருக)
எண்மர் பதினொருவர்

(என்னுள்ளம்) எனக்குவிதேயமானநெஞ்சே? காணவே ணுமென்னு மபிலாஷையுடையார்க்கு- (எளிது) சுதிலபமா மான, (இரண்டடியும்) திருவடிகளிரண்டையும், (காண்பதற்கு) கண்டநுபவிக்கைக்கு, நீ அழகிதாக விஷயகாலுஷ்யமற்று (தெளிய) நிர்மலமாக, அவன்மேலேழவன்றிக்கே திருவுள்ளத் தோடே (செவ்வே) செவ்விதாக, நான்முன்புபண்ணின ஸ்ராதி கூலியவாபவமொகளில் (தெளிந்தொழியும்) சுதிஸ்ஸலபனு ய்விடும், ஆனபின்புநீ (களியில்) வரவலாதிகளாலுந்த செரு க்கையுடையனாய், 'நநவேயம்' என்று (பொருந்தாவனை) தன் னைக்கிட்டோமென்றிருந்த ஹிரண்யனை, (பொரலுற்று) பொ ருதுமுடிக்கையிலே ஒருப்பட்டு, அவன்வரத்துக்குள்ளடங்காத (அரியாய்) நாஸிம்ஹவேஷத்தை யுடையனாய்க்கொண்டு, ஸ்ர ஹ்லாதவிரோயியைக் கைதொட்டழித்த சூஹ்லாதத்தாலே (இ ருந்தான்) ஸாவதிஷ்டனுயிருந்த ஸவேஸ்வரனுடைய, சூ ஶ்ரீதவாத்ஸல்யாதிகுணங்களுக்கு வாசகமான (திருநாமம்) திரு நாமங்களை, ஸ்ரத்தையாலே நெஞ்சிலே யூற்றிருக்கும்படி (எண்) அநுஸந்தி, பின்னைநம்கையிலும் பிறர்கையிலும் நம்மை விட்டுக்கொடானென்றுகருத்து, எளிதில்- எளிதல்லாத ஸுலபமல்லாத விரண்டுதிருவடிகளென்னுதல், என்னுள்ளம்- என்னுள்ளமே? யென்று ஸம்போதி. (ருக)

ஐம்பத்திரண்டாம்பாட்டு.

அ—நமக்கு அவன்பேர்சொல்லாவிடில் ஜீவிக்கவரிதோவென்ன ப்ரஹ்மாதிகளான அதிகாரிவர்க்கங்களும் அவனை யாஸ்ரயித்தன்றோ தங்களதிகாரங்களைப் பூண்கட்டிக்கொள்ளு கிறது நம்க்குப்பின்னைச் சொல்லவேணுமோவென்கிறார்-

(எண்மர்) அஷ்டவஸுக்களும், (பதினொருவர்) ஏகாதச

மூ—ஈராறுவரோரிருவர்* வண்ணமலரேந்தி வைகலும்*- நண்ணியொருமாலையாற் பரவியோவாதெப்போதும்* திருமாலைக் கைதொழுவர் சென்று. (ருஉ)

சென்றாற்குடையா மிருந்தாற்சிங்காசனமாம்* நின்றால்

ருத்ரர்களும், (ஈராறுவர்) ஆதித்யர்களும், (ஓர்) அத்விதீயமான, (இருவர்) அச்விநிகளிருவரும், (வண்ணம்) நாநாவர்ணமான, (மலர்) புஷ்பங்களை, (ஏந்தி) தரித்துக்கொண்டு (வைகலும்) ஸர்வகாலங்களிலும், (நண்ணி) வந்துகிட்டி, (ஒரு) அத்விதீயமான. (மாலையால்) ஸ்ரீபுருஷஸூக்தாதிஸ்தோத்ரங்களைக்கொண்டு, (பரவி) அடைவுகெடப்புகழ்ந்து, (எப்போதும்) எல்லாக்காலத்திலும், (ஓவாது) உச்சிவீடுவிடாதே, அபிமதங்களைச் ஸித்திப்பிக்கும் ஸ்வபாவையான (திரு) பெரியபிராட்டியாரோடே கூடியிருக்கிற, (மாலை) ஸர்வேச்வரனை, (சென்று) ஸ்வஸ்தாநத்தைத் துறந்துசென்று, (கைதொழுவர்) கிட்டி ஆச்ரயிப்பர்கள். (ருஉ)

ஐம்பத்துமூன்றாம்பாட்டு.

அ—ஸ்வப்ரயோஜநத்துக்கு மடியேற்கும் ஸம்ஸாரிகள் ஆச்ரயிக்கும்படியை அநுஸந்தித்து உள்வெதுப்படங்கும்படி அநந்யப்ரயோஜநராய் ஸந்நிதாநமாத்ரஸாபேக்ஷராய் ததுசிதஸர்வவிதமான வடிவெடுத்துக்கொண்டு அடிமைசெய்யக்கடவ நித்யஸூரிகளுக்குத் தலைவனான திருவனந்தாழ்வான் அங்குத்தைக்கு அடிமைசெய்யும்படியை அநுஸந்திக்கிறார்-

(திரு) பெரியபிராட்டியாரோடே நித்யஸம்யுக்தனாயிருக்கிற, மாற்கு- ஸர்வேச்வரனுக்கு, அவனுமவளுங்கூடக் கண்ணுற்றுத்துகைத்துப் பரிமாறுகைக்கு யோக்யமான வடிவையுடைய, அரவு- திருவனந்தாழ்வான், உகப்புக்குப்போக்குவீடாக- சென்றால்- அவன் உலாவியருளப்புக்கால், மழைவெய்யில்படாதபடி- குடையாம்- குடையாம், இருந்தால்- தன்னிச்சையாலே எழுந்தருளியிருந்தால், சிங்காசனமாம்- திவ்யஸிம்ஹாஸநமாம், நின்றால்- ஸ்வேச்சையாலே எழுந்தருளிநின்றால்,

மூ—மரவடியாம் நீள்கடலுள்*- என்றும்புணையாம் மணிவிளக்
காம்பூம்பட்டாம்புல்குமணையாம்* திருமாற்கரவு. (ருங)

அரவ மடல்வேழ மான் குருந்தம் புள்வாய்* குரவை
குடம்முலைமற்குன்றம்*-

மரவடியாம்- திருவடிநிலைகளாம், நீள்- பரப்பையுடைத்தான,
கடலுள்- கடலிலே கண்வளர்ந்தருளும்போதைக்கு, என்றும்-
ஸர்வகாலத்திலும், புணையாம்- திருப்பள்ளிமெத்தையாம், ஏதே
னுமொன்றை விளக்கிட்டுக்காண அபேக்ஷிதமானபோது-
மணிவிளக்காம்- ஸமுஜ்ஜ்வலமாம், சாத்தியருளத் திருப்பரியட்
டம் அபேக்ஷிதமான ஸமயத்தில்- பூம்பட்டாம்- ஸௌகுமார்யாவஹ
மான அழகியதிருப்பரியட்டமாம், சாய்ந்தருளினபோதைக்குப்
பிராட்டிமார் 'சிறுபாறு' என்னும்படி- புல்குமணையாம். தழுவ
ணையாம். (ருங)

ஐம்பத்துநான்காம்பாட்டு.

அ—இப்படி தன்னினைவுக்கீடாக அடிமைசெய்யும் திருவனந்
தாழ்வானுகிற படுக்கையைவிட்டு இங்கேவந்தவதரித்துக் களை
பிடுங்கித் தன்விரோதியை நோக்கும்படியை யநுஸந்திக்கிறார்—

செங்கண்- புண்டரீகாக்ஷனை, அவன்- அந்தஸர்வே
ச்வரன், கரவின்றி- மறைக்கையின்றிக்கே, ஸர்வலோகஸாக்ஷி
கமாம்படி- அரவு- காளியனாகிறஸர்ப்பத்தை, விட்டு- விட்ட
டித்து, அடல்- யுத்தோந்முகமான, வேழம்- குவலயாபீட
த்தை, இறுத்து- முறித்துவிழவிட்டு, ஆன்- பசுக்களை, மே
ய்த்து- குறைவறமேய்த்து, குருந்தம்- குருந்தத்தை, ஒசித்து-
இணங்கிப்பொகட்டு, புள்வாய்- பகாஸுரனுடையவாயை,
கீண்டு- கிழித்து, இடைப்பெண்களோடே, குரவைகோத்து-
திருக்குரவைகோத்து, ஐச்வர்யச்செருக்குக்குப் போக்குவி
ட்டு, குடமாடி- குடமெடுத்தாடி, முலையுண்டு- நலியவந்த பூத
னைமுலையை ப்ராணஸஹிதமாகவுண்டு; மல்- கம்ஸன், ஏவிற்று
ச்செய்வானென்றெதிர்ந்துவந்த மல்லரை, அட்டு- முடித்து,
வர்ஷபாதத்தைப் பரிஹரிக்கைக்காக, குன்றம்- கோவர்த்த

ழ—கரவின்றிவிட்டிறுத்துமேய்த் தொசித்துகீண்டு கோத்தாடி யுண்டு* அட்டெடுத்த செங்கணவன். (௫௪)

அவன்றமரெவ்வினையரா கிலுமெங்கோ* னவன்றமரேயெ ன்றொழிவதல்லால்*- நமன்றமரா லாராயப்பட்டறியார்கண்டீர்* அரவணைமேல் பேராயற் காட்பட்டார் பேர். (௫௫)

வைகத்தை, எடுத்த- எடுத்ததுமுதலான இச்செயல்களானவை யிருந்தபடி யென்னென்று விஸ்மயமாநுஸந்திக்கிறார்; இது நிரைநிரைஎன்று தமிழர்சொல்லும்லக்ஷணம். (௫௪)

ஐம்பத்தஞ்சாம்பாட்டு.

அ—அவன் இப்படி ஆச்ரிதரைக் கண்ணிலே வெண்ணெயிட்டு நோக்கி தலிரோயிகளையும்போக்கும் ஸ்வாவமாயிருக்க ஆர்தான் இவர்களைக் கண்கொண்டு சிவக்கப்பார்க்கவல்லாரென்கிறார்—

அவன்- அந்தஸர்வேச்வரனுக்கு, அநந்யஸீரராய்ப்போரும்- தமர்- ஆச்ரிதரானவர்கள், எவ்வினையராகினும்- ப்ராஹ்மண க்ஷத்ரிய வைச்ய சூத்ரரூபமான எந்தத்தொழிலையுடையராஞர்களாகிலும், எங்கோன்வன்தமரே- எங்களுக்கு ஸ்வாமியான அந்தஸர்வேச்வரனை ஆச்ரயித்த உஹாவையர்களிறே, என்று- என்றுஅவர்களைக் கொண்டாடி, ஒழிவதல்லால்- தங்களைக்கொண்டு கடக்கப்போமித்தனையொழிய, அரவணைமேல்- திருவரவணையிலே வதிக்கக்கடவனாப், பேராயற்கு- இடைத்தனத்தில் தனக்கொத்தாரில்லை என்னும்படி அதில்வ்யாபநனான க்ருஷ்ணனுக்கு, ஆட்பட்டார்- அடிமைபுக்கிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்களை, தங்களளவன்றிக்கே, பேர்- தங்கள்பேருங்கூட, நாட்டார்காயிலேமாராய்கைக்கு, நமன்- அவனுடைய ஆளாயிருக்கிற யமனுக்கு, தமரால்- கிங்கரராயிருக்கிறவர்களால், ஆராயப்பட்டறியார்கண்டீர்- ஆராயப்பட்டறியார்கிடீர்.

ஐம்பத்தாறாம்பாட்டு.

அ—அவன்திருநாமங்களை யடைவுகெடச்சொல்லிப்போ பத்தனையல்லது ஸர்வேச்வரன் ஸ்வாவம் ஆர்க்கும் பரிச்சேதிக்கவரிதென்கிறார்-

ஏ—பேரேவரப்பிதற்றலல்லால்* எம்பெம்மானையாரோயறிவார் அதுநிற்க*— நேரேகடிக்கமலத்துள்ளிருந்துங் காண்கில்லான்* கண்ணனடிக்கமலந்தன்னை யயன். (௫௬)

அயல்நின்றவல்வினையையஞ்சினேன்* அஞ்சியுயநின்றிருவடியே

ஏதேனுமொன்றைச் சொல்லினும், பேர்வர- திருநாமம் வாயிலேவரும்படி, பிதற்றலல்லால்- க்ரமரஹிதமாகச்சொல்லிக்கூப்பிடுமித்தனையல்லது, எம்பெம்மானை- தன்படிகளை யெனக்குத் தானேகாட்டித்தந்த என்னுடையனானவனை, ஆர் அறிவார்- ஆர்தான் அறியவல்லார், அதுநிற்க- அவ்விடையாட்டம் கிடக்கிடீர், கடி- பரிமளவுஜ்ஜ்வலமான, கமலத்துள்- திருநாபீகமலத்திலே ஸ்வயமாகப் பிறந்து, நேரே யிருந்தும்- அங்கே நிரந்தரவாஸம்பண்ணுகிறசச்செய்தேயும், அவன்பக்கலிலே யாதி இவ்வருகுள்ளார்க்கும் அறிவுகொடுக்கும்படி அறிவில்தலைநின்ற- அயன்- சதுர்முகனானவன், கண்ணனடிக்கமலந்தன்னை— ஸர்வநிர்வாஹகனான ஸர்வேச்வரன் திருவடித்தாமரைகளை, காண்கிலான்- இவ்வளவென்று அளவிட்டுப்பரிச்சேதிக்கைக்கு ஸமர்த்தனல்லன், பேரேவரப்பிதற்றுகையாவது— அவன்தானேவரும்படி திருநாமங்களை க்ரமமாகச் சொல்லுமத்தனை போக்கியென்றுமாம். (௫௬)

ஐம்பத்தேழாம்பாட்டு.

அ—ஸர்வஜ்ஞர்க்கறியவொண்ணாத விஷயத்தை நீரறிந்தபடியெங்ஙனேயென்ன; திருநாமமாச்ரயித்து அவன்றானே தன்னைக் கொண்டுவந்துகாட்டக் கண்டேனென்கிறார்-

(அயல்நின்ற) அருகுவிட்டுப்போராதே இடைவிடாமல் நலிந்தபடிபேசுகிற, (வல்) சதிஸ்வபமான, (வினையை) பாபத்தைக்குறித்து முன்புபோலே இன்னமும்வந்து மேலிடில் செய்வதென்னென்று (அஞ்சினேன்) பயப்பட்டேன், (அஞ்சி) இப்படிபயப்பட்டு, இந்தபாபஸம்பந்தமற்று (உய) உஜ்ஜீவிக்கைக்கு, நிரவத்யஸர்வேச்வரன் (நின்திருவடியே) உன்திருவடிகளிலே,

மூ—சேர்வான்* நயநின்ற நன்மாலைகொண்டு நமோநாரணா
வென்னுஞ்* சொன்மாலைகற்றேன் றொழுது. (௫௭)

தொழுதுமலர்கொண்டு தூபங்கையேந்தி* யெழுதுமெழு
வாழிநெஞ்சே*- பழுதின்றிமந்திரங்கள்கற்பனவு மாலடியே
கைதொழுவான்*

(சேர்வான்) வந்துகிட்டுகைக்காக, (நயம்நின்ற) நயப்புடைத்தாய், (நல்) அதிவிலக்ஷணமான, (மாலைகொண்டு) ஸூக்தங்களாலேதொடுக்கப்பட்ட இப்ப்ரபந்தரூபமான மாலையைக் கொண்டு, (தொழுது) உன்னையாச்ரயித்து, (நமோநாரணா வென்னும்) உனக்குவாசகமாய் திருமந்த்ரமென்று ப்ரஸித்தமான, (சொன்மாலை) சொல்தொடையை, (கற்றேன்) அப்யஸித்தேன், அன்றிக்கே திருமந்த்ரார்த்தத்தை நயிப்பிக்கையிலே தத்பரமாய்க் கொண்டுநின்ற விலக்ஷணஸூக்திரூபமான இப்ப்ரபந்தத்தைக் கொண்டென்னவுமாம், அயல்நின்றஎன்றது ஜ்ஞாநம்பிறந்தபின்பு பாபங்கள் தம்மைவிட்டுக்கடக்க நின்றபடியைச் சொல்லிற்றாகவுமாம், அயல்நின்ற வல்வினையென்று திருநாமஞ் சொல்லாதபோது தமக்குள்ள வ்யஸநமாகவுமாம். (௫௭)

ஐம்பத்தெட்டாம்பாட்டு.

அ—ஆனபின்பு நெஞ்சே? இவ்விஷயத்தைவிட்டு நமக்கு ஒருக்ஷணம் ஆறியிருக்கவிரகில்லை அவன்றிருவடிகளை ஆச்ரயியென்கிறார்-

(நெஞ்சே) நெஞ்சே, (மலர்) செவ்விப்பூக்களை, (கொண்டு) ஸம்பாதித்துக்கொண்டு, (தூபம்) தூபத்தை, (கையேந்தி) கையிலேதரித்து, ஸ்வரூபாநுரூபமாக (தொழுது) அவனைத்தொழுது, (எழுதும்) உஜ்ஜீவிப்போம், (எழு) கடுகவெழுந்திரு, (வாழி) உனக்கு இந்தஸம்ருத்தி, நித்யமாய்ச்செல்ல (பழுதின்றி) கிடந்தானைகண்டேறாதே, ஆலஸ்யத்தைப் பழக்கவெலவித்து (மந்திரங்கள்) திருவஷ்டாக்ஷரம்முதலான மந்த்ரங்களை, (கற்பனவும்) பழுசற நாம்அப்யஸிக்கிறவையும், (மாலடியே) ஸர்வேச்வரன்திருவடிகளிலே, இடைவிடாமல்(கைதொழுவான்)

மூ—அந்தா மொன்றில்லையடை. (ருஅ)

அடைந்தவருவினையோடல்லல்நோய்பாவம்* மிடைந்தவை மீண்டொழியவேண்டில்*- நுடங்கிடையைமுன்னிலங்கைவைத் தான்முரணழிய* முன்னொருநாள்தன்விலங்கைவைத்தான்சரண்॥

---

ஸ்ருஷ்டிஸம்ஹாரம் முதலான வ்யக்திவிசேஷங்களைப் பண்ணுகைக்காக, ஆனபின்பு நமக்கு ஆறியிருக்கைக்கு (அந்தரம்) அவகாசம், (ஒன்றில்லை) ஒரு க்ஷணமுமில்லை, (அடை) கடுகச் சென்றுகிட்டு. (ருஅ)

ஐம்பத்தொன்பதாம்பாட்டு.

அ—ஹோமத்துக்குவேணுமாகில் இத்தைச்செய்கிறோம், இதுக்கு இடைச்சுவரான விரோதியை இருதுண்டமாக விடுகைக்கு உபாய நமேதென்ன? அதுக்குவேணுமாகில உபாயஜ்ஞனைச் சரணம்புகு வென்கிறார்-

ஜ்ஞாநாநந்தங்களோபாதி ஆத்மாவுக்கு நிரூபகமென்றபடி (அடைந்த) அடியேபிடித்துப் பற்றிக்கிடக்கிற, (அரு) போக்கவரிதான, (வினை) ப்ராசீநபாவம், (அல்லல்) அதடியாகவருகிற ஆத்மஸமானதுக்கங்கள், (நோய) சரீரமானவ்யாதி, (பாவம்) வர்த்தமானசரீரங்கொண்டு பண்ணுகிற நிஷித்தாசாரம் என்றுப்போலே பஹுவியமாய்க்கொண்டு, (மிடைந்தவை) பரணிகூடுவரிந்தாப்போலே ஆத்மாவைத் தெரியாதபடி மூடிக்கிடக்கிறவிவை, (மீண்டொழியவேண்டில்) வாஸனையோடே விட்டுப்போகவேண்டில், க்ஷணகாலமும் விஸ்லேஷிக்கத்தகாதபடி (நுடங்கிடையை) நேரிய இடையழகையுடையபிராட்டியை, (முன்) முன்பொருகாலத்திலே, (இலங்கை) லங்கையிலே கொண்டுபோய், (வைத்தான்) சிறைவைத்தராவணனுடைய, (முரண்அழிய) மிடுக்கு அழியும்படிக்கீடாக, (முன்னொருநாள்) பண்டொருநாளிலே, (தன்) தன்னுடைய, (வில்) ஸ்ரீசார்ங்கத் திருவில்லை, (அம்கை) அழகியதிருக்கையிலே, (வைத்தான்) வைத்தஉபாயஜ்ஞனே, (சரண்) உபாயம், இத்தால் பிராட்டிவிஷயத்தில்போலே ஆஸ்ரிதவிஷயத்தில்

மூ—சரண்மறைபயந்ததாமரையானோடு* மரணாயமன்னுயிர்கட்
கெல்லா,*- அரணாயபேராழிகொண்டபிரானன்றி மற்றறியாது*
ஓராழி சூழ்ந்த வுலகு. (௬௰)

ஸம்ஸாரன் உகந்து காயக்லேசஞ்செய்யுமென்னுமிடமும், அவன் ஸ
ம்ரக்ஷணத்திலேயிரங்குமென்று இவனுக்கு க்ருதஜ்ஞதாம்ஸமுள்ளதெ
ன்னுமிடமும், அவன் அபேக்ஷிதஞ்செய்யு மென்னுமிடத்தில்
இவன் வ்யாபாரக்ஷகாரமென்னுமிடமும், அவன்வஸ்துவை என
க்குஎன்பார்- ராவணாதிகள் பட்டதுபடுவரென்னுமிடமும், சொ
ல்லிற்றாய்த்து. இந்த்ரியஜயத்தைப்பண்ணு? அவனைத்தொழு அ
வன்திருநாமத்தைச்சொல்லு அவனைநினை என்றாப்போலே- கீழ்
பலபடியாகச் சொல்லிற்றெல்லாம் ஷட்கத்ரயத்தில் வாமெதம்
போலே ஸாத்விகம் விஶதமாய்ச்சொன்னதில்லை, இது ஆறாம்
ஶ்லோகத்தில் நிலைபோலே உணர்ந்தவன்று அவனல்லது உபா
யமில்லையென்கை. (௫௯)

அறுபதாம்பாட்டு.

அ—இவன் ஸம்ஸாரியாயிருக்க அவன்ஸாதநமாக வே
ண்டுகிறதென்னென்ன? ஸர்வஜ்ஞனாய் ஸர்வசக்தனாயிருப்பா
னொருவன் உபாயபாவத்தைப்போக்கி அஜ்ஞனாய் அசக்தனான
விவனால் செய்யலாவதுண்டோவென்கிறார்-

அபிமதஸித்திக்கு அநாதிவமான உபாயங்களையறிகை
க்கு (சரண்) ஸாதநமான, (மறை) வேதத்தை, (பயந்த)
நாட்டுக்கு உபதேசித்துவைத்த உண்டாக்கின, ஜ்ஞாநாதிகாரத்
த்தையுடையோமென் றபிமானித்திருக்கிற, (தாமரையானோடு)
ப்ரஹ்மாவோடேகூட, (மரணாய) மரணயோக்யர்களாகையா
லே அறிவுகேடராய், (மன்) நித்யமானஸ்வபாவத்தை யுடைய
ரான, (உயிர்கட்கெல்லாம்) ஆத்மாக்களுக்கெல்லாம், (அரணாய)
ரக்ஷகமானவத்தை, (பேர்) ரக்ஷணவரிகமான பெரிய,
(ஆழிகொண்ட) திருவாழியையுடையவனை, (பிரானன்றி) உப
காரகனையல்லது, (மற்று) வேறு, (ஓர்) அத்விதீயமான, (ஆ
ழி) கடலாலே, (சூழ்ந்த) சூழப்பட்ட, (உலகு) லோகத்தி

மூ—உலகுமுலகிறந்த ஊழியும்* ஒண்கேழ்விலகுகருங்கடலும் வெற்பும்*- உலகினிற்செந்தீயும்மாருதமும் வானும்* திருமால்தன்* புந்தியிலாய புணர்ப்பு. (சுக)

புணர்மருதினூடுபோய்ப் பூங்

---

ளுள்ள ப்ராணியானது, (அறியாது) அறியாது, இத்தால் சிறியாரோடு பெரியாரோடு வாசியறத் தந்தாமுடைய ரக்ஷணம் தாங்களறியமாட்டார்கள், இவனே ஸர்வர்க்கும் ரக்ஷணப்ரகாரமறியுமவன் என்றதாய்த்து. (சுO)

அறுபத்தோராம்பாட்டு.

அ—அவனையொழிய இவை தந்தாமுக்கு ஹிதமறியாதென்றீர், அவன்றான் இவைதன்னை நோக்கவேண்டுகிற ஹேதுவென்னென்னில்? பெற்றவனையொழிய வளர்ப்பாருண்டோவென்கிறார்-

(உலகும்) ஸப்தத்வீபாதிகளான லோகங்களும், (உலகு) லோகங்களெல்லாம், காலசேஷமாம்படி (இறந்த) அழிந்துகிடக்கிற, (ஊழியும்) ஸம்ஹாரகாலமும், (ஒண்) அழகிய, (கேழ்) நிறத்தையுடைத்தாய், (விலகு) அலையெறியாநின்றுள்ள, (கருங்கடலும்) ஸமுத்ரமானகடலும், ஸ்ருஷ்டிக்கு ஆணியடித்தாப்போலிருக்கிற (வெற்பும்) குலபர்வதங்களும், பின்னையும் (உலகினில்) லோகத்திலுண்டான, (செம்) சிவந்தநிறத்தையுடைய, (தீயும்) தேஜஸ்பதார்த்தங்களும், (மாருதமும்) வாயுவும், (வானும்) ஆகாசமும், இவையெல்லாம் பிராட்டிக்குகப்பாக (புந்தியில்ஆய) ஜகத்ஸ்ருஷ்டியிலே ஒருப்பட்ட, (திருமால்தன்) ஸ்ரீயःபதியுடைய, (புணர்ப்பு) ஸங்கல்பகல்பிதமான வகுப்பையுடைத்தது. (சுக)

அறுபத்திரண்டாம்பாட்டு.

அ—இவற்றையுண்டாக்கித் தான் கடக்கவிருக்கை யன்றிக்கே இவற்றைக்களைபிடுங்கி நோக்குவானும் அவனேயென்கிறார்-

(புணர்) இடைவெளியறப் பொருந்திநின்ற, (மருதினூடு) யமளார்ஜுநங்களின் நடுவே, ஊடறுத்துக்கொண்டு (போய்) தவழ்ந்துபோய், இலையுங்கொம்பும் தெரியாதபடி (பூ) பூத்துக்

மூ—குருந்தம்சாய்த்து* மணமருவமால்விடையேழ்செற்றுக்*- கணம்வெருவவேழுலகந்தாயினவு மெண்டிசையும்போயினவுஞ்* சூழரவப்பொங்கணையான் றோள். (௬௨)

தோளவனையல்லாற்றொழா* வென்செவியிரண்டுங்கேளவன தின்மொழியே கேட்டிருக்கும்*-

---

கிடந்த. (குருந்தம்) குருந்தத்தை (சாய்த்து) தள்ளிப்பொகட்டு, பிராட்டியைக் கைப்பிடிக்கையாகிற, (மணம்மருவ) கல்யாணம் தலைக்கட்டுகைக்காக, (மால்) பெரியவடிவையுடைய, (விடையேழ்) ருஷபங்களேழையும், (செற்று) முடித்து, 'ஸம்வெஸ்ஸாராணாம்' என்கிறபடியே ஸுநாஸ்ய ஶ்ருதிஸ்ய விஹாமமற (கணம்) ஸர்வப்ராணிகணமும், என்னாகத்தேடுகிறதோ என்று (வெருவ) நடுங்கும்படி; (எழுலகம்) ஸப்தலோகங்களையும், (தாயினவும்) வருத்தமற அளந்துகொண்டனவும், (எண்டிசை) எட்டுதிக்குக்களிலும், (போயினவும்) போய்வ்யாபித்தனவும், (சூழ்) விஸ்த்ருதனாய், மேன்மைகுளிர்த்தி நாற்றங்களையுடைய (அரவம்) திருவனந்தாழ்வானாகிற, (பொங்கு) அழகிய, (அணையான்) திருப்படுக்கையிலே கண்வளர்ந்தருளின ஸர்வேஶ்வரனுடைய, (தோள்) திருத்தோள்கள் கிடீர், அந்தப் படுக்கையும் பொறாத ஸௌகுமார்யத்தை யுடையவன்கிடீர், இச்செயல்களைச்செய்தான். அப்படுக்கையில் கண்வளரப்பொறாமல் இப்படி அலமர்ந்து திரிவதேஎன்று வயிறுபிடிக்கிறார். (௬௨)

அறுபத்துமூன்றாம்பாட்டு.

அ—இப்படியிருக்கிற வவன்பக்கலிலே என்னுடைய ஸர்வேந்த்ரியங்களும்ப்ரவணமாய்த்து, நானும்ப்ரவணனானேனென்கிறார்—

(தோள்) என்னுடையதோள்களானவை, நான்வேறுசிலரைத்தொழு என்னிலும் (அவனையல்லால்) அந்தஸர்வேஶ்வரனை யல்லது, (தொழா) தொழுகிறனவில்லை, (என்) என்னுடைய, (செவியிரண்டும்) செவிகளிரண்டும், (கேள்) நிரவதிகபோக்யமான, (அவனது) அவனுடைய, (இன்) ஸம்ஶ்ரவணீயமான, (மொழிகேட்டு) பேச்சைக்கேட்டு, அத்தாலே (இருக்கும்)

மூ—நா நாளுங்கோணாகணையான்குரைகழலேகூறுவதே* நாணு ஸ்மநள்ளேன் நயம். (௬௩.)

நயவேன்பிறர்பொருளைநள்ளேன்கீழாரோடு* உயவேனுயர்ந்தவரோடல்லால்* வியவேன்திருமாலையல்லது தெய்வமென் றேத்தேன்*

---

யரித்திருக்கும், (நா) நாவானது, (நாளும்) ஸர்வகாலமும், (கோள்) மிடுக்கையுடைய, (நாகம்) திருவனந்தாழ்வானை (அணையான்) படுக்கையாகவுடைய ஸர்வேஶ்வரனுடைய, குரை (கழலே) ஆபரணத்வநியை யுடைத்தான திருவடிகளையே, (கூறுவது) சொல்லாநிற்கும், நாட்டார்விரும்பி மேல்விழுகிற விஷயங்களை அவர்களில் வ்யாவ்ருத்தனானநான், நாணமை- நிர்லஜ்ஜையைக்கொண்டு, நள்ளேன்- செறியேன், நயம்- ஜ்ஞாநம்பிறந்தபின்பு லஜ்ஜித்து மீளவேண்டும்படிகாணும் விஷயவ்யாவண்யத்தின் பொல்லாங்கிருப்பது. (௬௩)

அறுபத்துநாலாம்பாட்டு.

அ—உமக்கும் உம்முடைய கரணங்களுக்கும் ஸமவிஷயத்திலே உதாரவிஷயங்களைக் கடைக்கணியாதபடி வ்யாவண்யமுறைத்தாலும் ஈஸ்வராவஸெநயாலே அவைவந்து மேலிடில்செய்வதென்னென்ன? நான்நின்றநிலை யிதுவானபின்பு எங்ஙனே அவைவந்து மேலிடும்படியென்கிறார்-

‘உத்தமபுருஷஸூநு:’ என்கிறபடியே பிறர்- ஸர்வவிஸஜாதீயனான ஸர்வேஶ்வரனுடைய, பொருளை- ஆத்மத்ரவ்யத்தை, நயவேன்- என்னதென்றுவிரும்பேன், பிறரதானஆத்மாவை என்னது என்றிருக்கும்- கீழாரோடு- தாழ்ந்தஸம்ஸாரிகளோடு, நள்ளேன்- செறியேன், உத்தமமான ஆத்மவஸ்து ஸர்வோத்தமனான ஸர்வேஶ்வரனுடையது என்றிருக்கும்- உயர்ந்தவரோடல்லால்- ஸ்ரீவைஷ்ணவர்களையொழிய, உயவேன்- ஏதேனுமொன்றை உசாவேன், திருமாலையல்லது- ஸர்வாதிகனான ஸ்ரீய:பதியையொழிய, புறம்பேசிலரை, தெய்வமென்று- ஆராதனீயதேவதைகளென்று பெண்ணி, ஏத்தேன்-

நித்யஸங்கல்பமே ஸ்வர்க்காபவர்க்கமான ப்ராப்யமெ ன்னுமிடத்தையும் அந்தப்ராப்யத்தைக் கைப்படுத்தித்தரும் ஸ்வர்க்காபவர்க்கமான ப்ராபகமும் அவன் திருவடிகளே யென்னுமிடத்தையு மறுதியிட்டார், முதலாழ்வார்களில் முதலா ழ்வாரான பொய்கையார். அநந்தரம் பூதத்தார் வையந்தகளியில் அருளிச்செய்த எம்பெருமான்படிகளைக் கூடவிருந்து உத்தரோ த்தரம் அநுபவித்துக்கொண்டு போருகையாலே எம்பெருமானு டையவருளை தளமாக முளைத்துக்கிளர்ந்த தம்முடைய பர பக்தியானது பரஜ்ஞாநதசாபன்னமாம்படி பரிபக்வமாய்வளர அந்த பரஜ்ஞாநதசாபன்ன ப்ரேமவிசேஷத்தாலே அவன்படி களைக்கட்டடங்க ஸாக்ஷாத்கரித்தநுபவித்து தாமநுபவித் த ப்ரகாரத்தை நாடறிந்தநுபவித்து வாழும்படி நடைவிள ங்குதமிழாலே பேசித்தலைக்கட்டுகிறார்.

ஸமஷ்டிவ்யஷ்டிமான விபூதியை 'ஸ்தூலம்' என்றும் 'ஸூக்ஷ்மம்' என்றும்ஶ்ரீக்கிற பாஹ்யமான அஜ்ஞாநாந்த காரம்நீங்கும்படி. ப்ருதிவ்யாதிபூதஸமஷ்டிக பதார்த்தங்களை த்தகளியும் நெய்யும் விளக்குமாக ரூபித்துக்கொண்டு பேசி னார்பொய்கையார், இவர் ஆந்தரமான ஸமஷ்டிப்ரேமத்தில் ஜ்ஞா நவிசேஷங்களைத் தகளியும் நெய்யும் விளக்குமாக ரூபி க்கும்படி இவ்விஷயத்திலே உள்ளூற அவகாஹித்து இறைவனை க்காணும் ஹ்ருதயத்தைப்பற்றிக்கிடக்கிற வுள்ளிருள் நீங்கும்படி யாக ப்ரத்யக்ஷாவான ஆத்ம பரமாத்மாக்களி லுண்டாகக்க டவ ஸம்ஶய விபர்யயங்களை யறுக்கிறார், பரமசாஸ்த்ராதிகள் மூன்றும் மூவற்குந்தனித்தனியே குறைவறவுண்டாயிருக்கச்செ ய்தேயும் ஒரொருத்தருக்கோரோ வைலக்ஷண்யம் தலையெடுத்து அல் லாத வைலக்ஷண்யங்கள் அதுக்குள்ளே யடங்கிக்கிடக்கும், பர ஜ்ஞாநபரபக்திகள் நிழலிட்டுத்தோற்றும்படி பரபக்தியே வி ஞ்சியிருக்குமவருக்கு பரபக்திமுற்றி பக்வமானதாய் பரபக்தி ஸிரஸ்கமான பரஜ்ஞாநமேயாயிருக்குமவருக்கு பரபக்தியேவி ஞ்சி பரபக்திபரஜ்ஞாநங்களிரண்டு மதின்கீழே செரிக்கிடக்

மூ— அன்பே தகளியா

குமவற்றை யிவருக்கு, பரபக்த்யாதிகளினுடைய உத்பத்தியும் வ்ரு த்தியு மின்னுநக்கின்னபோதின்னது தலையெடுக்கக்கடவது இன்ன தடங்கிக்கிடக்கக் கடவதென்னு மிவையெல்லா மீஶ்வரனாலே வாவே யுண்டாகத்தட்டில்லை. பகவத்விஷயத்தை ஸாக்ஷாத்கரி க்கவேணுமென்னு மபிநிவேஶம் பரபக்தி, ஸாக்ஷாத்காரம் பரஜ்ஞானம், பின்பு உத்தரோத்தரம் அநுபவிக்க வேணுமெ ன்னு மபிநிவேஶம் பரமபக்தி. ஸம்ஶ்லேஷத்தில் ஸத்தை விஶ்லேஷத்தில் அஸத்தையாம்படியிருக்கை பரபக்தி, அடியரோ டிருந்தமை என்னும்படி பூர்ணாநுபவஸாக்ஷாத்காரம் பரஜ்ஞா நம், குநாநுபவம்பெறுவிடில் நீரைப்பிரிந்த மத்ஸ்யம்போலே மூச் சடங்கும்படியிருக்கை பரமபக்தியென் றருளிச்செய்யும்படி. நிரூபித்தால் தன்னிலிரண்டுமொக்கும், இவை ப்ராணிக ருக்கு மோக்ஷவஸ்தையிலே யுண்டாமித்தனை, மயர்வறமதிநல மருளப்பெற்ற வாழ்வார்களுக்கிங்கே யிருக்கச்செய்தே பகவத் ப்ரஸாதத்தாலே யுண்டாய்த்து, இனி பரபக்தி பரஜ்ஞான ப ரமபக்திஸ்வபாவம் 'மோக்ஷோபாயம்' என்று ப்ராணிகருக்கு அவ ன்பக்கலிலே ப்ராப்திக்குப்பெறவேணும் ஜ்ஞான தர்ஶந ப்ரா ப்திகளென்று ஶாஸ்த்ரங்களிலே பரபக்த்யாதிகளைச் சொல்லும் "ஜ்ஞாதும் த்ரஷ்டும் ச தத்வேந ப்ரவேஷ்டும் ச பரந்தப" என்றி றே ஸ்ரீகீதாசார்யன்வார்த்தை, 'ஸம்ஜ்ஞாயதே, த்ருஶ்யதே ப்ராப்யதே' என்றிறே வாக்யவசநம்.

## ❁முதற்பாட்டு.❁

அ—பகவத்ப்ரஸாதலப்தமான தம்முடைய ப்ரேமவஸ்தாவி ஶேஷங்களைத் தகளியும் நெய்யுமாக நிரூபியாநின்றுகொ ண்டு ஸர்வஶேஷியான நாராயணனுக்கு பரஜ்ஞாநமாகிற உஜ்ஜ்வலதீபத்தையேற்றி யடிமைசெய்யப்பெற்றேனென்று க்ருதார் த்தராகிறார்-

(அன்பே) விஷயவைலக்ஷண்யந் தளமாக முளைத்துக்கிளரு கிற பரபக்திரூபமான ஸ்நேஹமானது, (தகளியா)

மூ—வார்வமே நெய்யாக * இன்புருகுசிந்தை யிடுதிரியா *—
நன்புருகி ஞானச்சுடர்விளக்கேற்றினேன் நாரணற்கு*
ஞானத்தமிழ்புரிந்த நான். (க)

மேற்சொல்லுகிற நெய்திரிமுதலானவற்றுக் காதாரமான தகளியாகவும், (ஆர்வம்) அந்த விஷயவைலக்ஷண்யத்துக் கென்புகுருகிறதோவென்று பரிந்துகாப்பிடும்படி வரிவஸ்தாவனுமான அபிநிவேசமானது, (நெய்யாக) மேலேற்றத் தேடுகிற விளக்கை வளர்க்கைக்குறுப்பான நெய்யாகவும், (இன்பு) விஷயவைலக்ஷண்யாநுஸந்தாந ஜநிதமான ஆநந்த்தாலே, (உருகு) த்ரவீபூதமான, (சிந்தை) அந்தவஸ்த்வபிநிவேசங்களுக்கு ஆய்த்தலையான ஹ்ருதயமானது, (இடு) மேற்சொல்லுகிற பரஜ்ஞாநமாகிற விளக்குக்கிடப்படும், (திரியா) திரியாகவும், (நன்பு) ஜ்ஞாநாநுலக்ஷணமாய் ஜ்ஞாநகாரணமாய் ஸம்வேதநஸந்தாநவிசேஷமாகையாலே சுத்தஸத்வவிலக்ஷணமான சுத்தஸத்வமானது, (உருகி) பரபக்த்யாவஸ்தை ரஸத்தாலே த்ரவத்ரவ்யமாயுருகி, (ஞானம்) பரஜ்ஞாநமாகிற, (சுடர்விளக்கு) உஜ்ஜ்வலத்தை, (ஞானம்) பரபக்திமயமான ஜ்ஞாநஜநகமாய், (தமிழ்) வேதாதிகள்போலே அதிகாராநதிகாரமன்றிக்கே ஸர்வாதிகாரமான த்ராவிடப்ரபந்தத்தை, (புரிந்த) வெளிகொடுக்கக்காரமாகப்பண்ணின, (நான்) நான், (நாரணற்கு) ஸர்வசேஷியான நாராயணனுக்கு, (ஏற்றினேன்) ஸ்வஸ்வரூபஸ்வரூபங்களுள்ளபடியே ப்ரகாசிக்கும்படி ஏற்றினேன், பேசுவிக்கவொருப்பட்ட ஈச்வரன் ஸத்யஸங்கல்பத்தையாலும் பேசித்தலைக்கட்டியல்லது தரிக்கவொண்ணாத தம் ப்ரக்ருதியாலும் ஸம்வக்ஷரித்துத் தமிழ்புரிந்த வென்கிறார். 'அறைகழல்சுடர்ப்பூந்தாமரை சூடுதற்க வாவாருயிருருகியுக்க நேரியகாதலன்பு' என்றுழ்வாரும் பரபக்த்யாதிகள் மூன்றும் தமக்குண்டென் றருளிச்செய்கிற, 'சூடுதற்கவாவென்று' பரபக்தியை முந்துறவருளிச்செய்து, பரஜ்ஞாந மருளிச்செய்கிற ஸ்தானத்தில் 'அவாவாருயிருருகி யுக்கநேரியகாதலென்று' பர

க்தியாலே யுருகி யுக்கவாருயிருண்டு- ஸூக்ஷ்மவஸ்து, அதினிட
த்திலுண்டான ஸ்நேஹமான்காதலென்று, பரஜ்ஞாநாவஸ்தை
யிலாத்மா த்ரவத்ரவ்யமாயுருகுமென்னுமிட மருளிச்செய்தாரிறே!
அந்த நேரியகாதலாலேயுண்டான- அன்பென்று- பரபக்தி
யைச்சொல்லுகிறது, 'ஆவலன்புடையார்' என்றும் 'சிரத்தைத
ன்னால்வேட்கைமீதூரும்' என்றும் 'ஈரநெல்வித்தி' பேரமர்காத
ல்' என்னும்பரபக்தி தனக்கேயிரண்டுமுண்டாக வருளிச்செ
ய்கையாலே அன்பு ஆர்வம் என்று ஓரவஸ்தைதன்னி லுவ
க்ரமாவஸ்தைகளைச் சொல்லத்தட்டில்லை. 'ஸங்காத்ஸஞ்
ஜாயதே காம:' என்றிறே! பீதாம்பரனருளிச்செய்தது 'கா
மோநாஸம்ஸ்ய விவாக்ஷயா' என்றிறே யிதுக்குபாஷ்யம்.
'ஸ்நேஹபூர்வம்' 'பக்த்யா த்வநந்யயா' என்றுமிறே திருவ
டியும், ஆகையாலே பரபக்த்யம் காரணமான அன்பே
த்தகளிளன்றும், அத்தலைக்குப்பரிந்தல்லது நிற்கவொண்ணாத
படி பரவசமான பரபக்தியை நெய்யென்றும் (நன்புருகி
ஞானச் சுடர்விளக்கென்று) ஆஸ்ரயமான ஸூக்ஷ்மவஸ்து உருகி
விழும்படியான பரஜ்ஞாநாவஸ்தையை விளக்கென்றும் இவ
ருமருளிச்செய்தாராய்த்து 'ஈரநெல்வித்திமுளைத்த நெஞ்சப்பெ
ருஞ்செய்யுள்' என்று பக்த்யங்காரமான ஸம்பாவஸ்தைமுத
லாக நெஞ்சுதளமாக வுண்டாமதாயிருக்க பரஜ்ஞாநாவ
ஸ்தைக்குக் காரணமாக் நெஞ்சைச்சொல்லுகிறது 'உருகுமா
ல்நெஞ்சம், பெருகுமால்வேட்கை' என்று பரபக்த்யவஸ்தையி
ல் காரணமான நெஞ்சமுருகும், பரஜ்ஞாநாவஸ்தையில் கார
ணமான நெஞ்சும் காரணியானவாத்மாவும் உருகுமென்கிறவிசே
ஷந்தோற்றுகைக்காக. (க)

## இரண்டாம்பாட்டு.

அ—பக்திபரவசராய்க்கொண்டு ஸக்ருபாகத் திருநாமங்களைச்
சொல்லிக்கூப்பிடுமவர்களை ஸர்வேஸ்வரன் நித்யஸூரிகளோ
டொத்த தரத்தைக்கொடுத்து ரக்ஷிக்குமென்கிறார்-

மூ—ஞானத்தானன்குணர்ந்து நாரணன்றனாமங்க* டானத்தான் மற்றவன்பேர்சாற்றினால்*— வானத்தணியமர ராக்குவிக்கு மஃதன்றே* நங்கள் பணியமரர்கோமான்பரிசு. (௨)

(நாரணன்றன்) வகுத்தசேஷியான ஸர்வேச்வரனுடைய, (நாமங்கள்) விக்ரஹாதிகளுக்கு வாசகமாய் அஸாதாரணமான திருநாமங்களையும் மற்றும் விபூதியோகத்துக்கு வாசகமான திருநாமங்களையும், (ஞானத்தால்) பக்திரூபாபந்நமான ஜ்ஞாநத்தாலே, (நன்கு) அவனுக்குந் தனக்குமுண்டான சேஷசேஷிபாவமான உறவளவும்செல்ல, (உணர்ந்து) உள்ளபடியறிந்து, (தானத்தால்) 'பேர்பலசொல்லிப்பிதற்றி' என்கிறபடியே சொல்லியல்லது நிற்கவொண்ணாதபடி தலைமண்டைகொண்ட ப்ரேமத்தினுடைய முடிஸ்தாநத்திலேநின்று; (சாற்றினால்) அடைவுகெடக்கூப்பிட்டால். (வானத்து) பரமாகாசசப்தவாச்யமான பரமபதத்தில், (அணி) ஸ்வஸம்பந்தத்தாலே நிறங்கொடுக்கும்படியான அழகையுடையரான, (அமரர்) ஸூரிகளோடொத்த பெருமையையுடையராம்படி, (ஆக்குவிக்குமஃது) பண்ணுமது, (அன்றே) அன்றோ?, (நங்கள்) நமக்கு நிருபாதிக பந்துக்களாய், (பணி) 'நித்யாஞ்ஜலிபுடாஃ' என்கிறபடியே கையுமஞ்ஜலியுமாய்க்கொண்டு தொழுகையே நித்யக்ருத்யமாக உடையராயிருக்கிற, (அமரர்) ஸுநந்தவைநதேயாதிகளான நித்யஸித்தபார்ஷதர்களுக்கு, (கோமான்) நிருபாதிகசேஷியானவனுடைய, (பரிசு) ப்ரகாரம், இங்கேயடைவுகெடத் திருநாமஞ்சொன்னவர்களை அங்கேயடைவுகெட்டுக்கூப்பிடுங் கோஷ்டியிலே வைக்குமென்றபடி. (௨)

மூன்றாம்பாட்டு.

அ—அடுத்தணித்தாகத் திருப்பாற்கடலிலேவந்து கண்வளர்ந்தருளுகிற நீர்மையையுடையவனை ஆச்ரயிக்குமவர்கள் பரமபதத்தைச்சென்று ப்ராபிக்கப்பெறுவரென்கிறார்.

மூ—பரிசுநறுமலரால் பாற்கடலான் பாதம் * புரிவார்புகப் பெறுவர்போலாம்*— புரிவார்க டொல்லமரர்கேள்வித் துலங் கொளிசேர் தோற்றத்து* நல்லமரர்கோமா ன்நகர். (௬)

நக ரிழைத்து நித்திலத்து

(பரிசு) செவ்விகுன்றாத, (நறு) அழகிய, (மலரால்) பூக்க ளைக்கொண்டு, (பாற்கடலான்) ஸம்ஸாரிகளை யக்கரைப்படுத் துகைக்காகத் திருப்பாற்கடலிலே முற்கோலிவந்து கண்வளர்ந் தருளுகிறவனுடைய, (பாதம்) திருவடிகளை, (புரிவார்) ஸர் வொஜ்ஞமானவ்யாபாரத்தால் ஸக்ருத்ஸமாச்ரயணம் பண்ணா யிக்குமவர்கள், (புரிவார்கள்) முழுகுவது மூக்குப்புதைப்பது ஜவிப்பது தொழுவது புகழுவதாய்க்கொண்டு இடைவிடாமல் அவனை யாச்ரயித்துக்கொண்டு போரக்கடவர்களாய், (தொல்) ஸம்ஸாரிகளில் பழையரான, (அமரர்) ப்ரஹ்மாதிதேவர்கள்' (கேள்வி) காணவொண்ணாதே யென்றுங் கேட்டேபோமித்தனை யாய், (துலங்கொளிசேர்) நிரவயிகதேஜஸ்ஸை யுடைத்தாய்க் கொண்டு, (தோற்றத்து) ப்ரகாசிக்கக்கடவதாயிருந்து, (நல்) பிரியில் யரிக்கமாட்டாத நன்மையையுடைய, (அமரர்) நித்ய ஸூரிகளுக்கு, (கோமான்) நாயகனான ஸர்வேச்வரனு டைய, (நகர்) வைகுந்தமானகரத்தை, (புக) ப்ராபிக்க, (பெ றுவர்போலாம்) பெறுவராம். (௬)

❁ நாலாம்பாட்டு. ❁

அ—அன்பேதகளியென்றுதுடங்கி தம்முடைய ஸத்வவிஶேஷங்களைத் தகளியும் நெய்யும் விளக்குமாக நிரூபித்தாற் போலே தம்முடைய ஸத்வவிஶேஷங்களை இதழும் அல் லியும் தாதுமாயிருப்பதொரு தாமரைப்பூவாக நிரூபித்துக் கொண்டு அவனையாச்ரயிக்கிறார்-

(நகர்) ஸத்வோத்தீர்ணமான நெஞ்சை ராஜாதிராஜனு ன் ஸர்வேச்வரனுக்குத் திருப்படைவீடாக, (இழைத்து) வகு த்து, (ஆங்கே) அந்தத்திருப்படைவீட்டிலே, (நித்திலம்) அன் னெஞ்சிலேயுண்டாய் ஸாத்விகமாகிற வழல் தட்டாமையாலே

மூ—நாண்மலர்கொண்டு * ஆங்கே திகழுமணிவயிரஞ் சேர்த்து*—நிகரில்லாப்பைங்கமலமேந்திப் பணிந்தேன்பனிமலராள்* ங்கம் வலம்கொண்டானடி. (௪)

---

குளிர்ந்து 'ஸவ்ருஹம்யஃ' என்கிறவிஷயத்தைப்பற்றிக் கிளருகையாலே வர்ஜிதமாயொளியிடுகிற ஸ்நேஹமாகிறமுத்தை, (நாள்) செவ்விகுன்றாத, (மலர்) இதழாக, (கொண்டு) வகுத்துக்கொண்டு, (திகழும்) ப்ராப்தியையும் வைலக்ஷண்யத்தையும் விஷயீகரித்து இரண்டுகூறாக வெழுந்திருக்கிற சுஹிநிவேசமாகிற உஜ்ஜ்வலமான, (மணிவயிரம்) மாணிக்யவைராங்களை, (சேர்த்து) அல்லியுந்தாதுமாகச்சேர்த்து, இப்படி லௌகிகமான தாமரையிற்காட்டில் வ்யாவ்ருத்தமான விதழையு மல்லியையுந் தாதையுமுடைத்தாகையாலே, (நிகரில்லா) உபமாநரஹிதமான (பை) பக்தியாகிறபெரிய (கமலம்) தாமரைப்பூவை, (ஏந்தி) அழகுபெற தரித்துக்கொண்டு, (பனி) குளிர்ந்த, (மலராள்) தாமரைப்பூவை யிருப்பிடமாக வுடைய ஸௌகுமார்யசைத்யைகவேஷையான பெரியபிராட்டியாரை, (அங்கம்) திருமேனியில், (வலம்) வலவருகான திருமார்பிலே, (கொண்டான்) வைத்துக்கொண்டவனுடைய, (அடி) திருவடிகளிலே, (பணிந்தேன்) நிவேதனுப்பச்சொண்டு விழுந்தாஸ்ரயித்தேன், நெஞ்சை நமஸ்மாக ரூபிக்கையாலே நமஸமாகில் முத்துமாணிக்கம் முதலான விலக்ஷணவஸ்துவை யுடைத்தாயிருக்குமென்று ஸத்யவஸ்தாஹேதுமான ஸ்நேஹாதிகளை முத்துமாணிக்யாதிகளாக ரூபிக்கிறது, (பைங்கமலமேந்தியென்று) பக்தியைத்தாமரையாக நிரூபிக்கையாலே யந்த ஸத்யவஸ்தாஹேதுமான ஸ்நேஹாதிகளை அதுக்கிதழு மல்லியுந் தாதுமாக ரூபிக்கிறது, பக்தியினுடைய ஸௌரபவசீகரணத்வமும் ஸௌகுமார்யசைத்யமுந் தோற்றுகைக்காக அத்தைத்தாமரையாக நிரூபிக்கிறது, நெஞ்சை நமஸமாக நிரூபிக்கிறது சலங்காப்பெருநமஸத்திற் பண்ணும் விருப்பத்தைத் தன்னெஞ்சிலேபண்ணிக்கொண்டு அவன் ஸர்வகாலமாக வதிக்குமென்று தோற்றுகைக்காக. (௪)

மூ—அடிமூன்றிலிவ்வுலக மன்றளந்தாய்போலு* மடிமூன்றிரந்தவனிகொண்டாய்*— படிநின்ற நீரோதமேனி நெடுமாலே* நின்னடியை யாரோதவல்லாரறிந்து. (ரு)

## ❁ ஐந்தாம்பாட்டு. ❁

அ—ஆழ்வீர் 'நீர்நம்மைப்பணிந்தீரோ' என்ன? ஒன்றைச்சொன்னேனித்தனைபோக்கி வனவம்வியனுன வுன்னீர்மை யொருவரால் வரிவெழிக்கப்போமோ? வென்கிறுர்-

சால ஊரைஸீ-யாய்க்கொண்டு இரண்டடியாலே அளந்து ஓரடிக்குச் சிறையிட்டு வைப்பாயாக ஊஹாவலி பக்கலிலே மூந்துறச்சென்று, (மூன்றடி) மூன்றடியை, (இரந்து) சுயிடுத்து, (அவனி) ஹூமியை, (கொண்டாய்) அளந்துகொண்டாய், (அன்று) அளந்துகொள்ளுகிற அக்காலத்திலே, இரண்டடியாலேயளந்துகொண்ட தித்தனைபோக்கி, (மூன்றடியில்) மூன்றடியாலே, (இ) இந்த, (உலகம்) லோகங்களை, (அளந்தாய் போலும்) அளந்துகொண்டாயோதான், (படி) ஹூமியிலே, (நின்ற) ரக்ஷகனுய்க்கொண்டு செவ்வேவந்த வதரித்துநின்ற, (நீர்) நீர்மையையுடையையாய், (ஓதம்) ஜலஸம்ருத்தியை யுடைத்தான கடல்போலே ஶ்ரமஹரமான. (மேனி) வடிவையுடையையாய் (நெடு) ஸவாயிகனுன, (மாலே) ஸவெஜ்ஞானே? (நின்) இப்படி நீர்மையே வடிவான வுன்னுடைய, (அடியை) திருவடிகளை, என்னைப்போலே யறிவுகெட்டார்பேசிற் பேசுமித்தனை போக்கி (அறிந்து) நேர்கொடுநேரே இவ்வளவென்று அளவிட்டறிந்து, (ஓதவல்லார்) பேசவல்லார், (ஆர்) ஆர். (ரு)

## ❁ ஆறும்பாட்டு. ❁

அ—ஆனல் இப்படியாருமறியாதே யிழந்துபோமித்தனையோ வென்னில்? அதுவேண்டா உதாரவிஷயஸம்மமற்று அவன்றிருநாமங்களைச் சொல்லிப்புகழுமவர்கள் அவன்திருவடிகளைப் பெறுவரென்கிறுர்-

மூ—அறிந்தைந் துமுள்ளடக்கி யாய்மலர்கொண்டு* ஆர்வஞ்செறிந்தமனத்தராய்ச் செவ்வே*— யறிந்தவன்றன்பேரோதியேத்தும்பெருந்தவத்தோர் காண்பரே * காரோதவண்ணன்கழல். (௬)

கழ லெடுத்து வாய்மடித்துக் கண்

---

(அறிந்து) பகவத்வைலக்ஷண்யத்தையும் இதரவிஷயதோஷங்களையும் நன்றாகவறிந்து, ஹேயவிஷயங்களிற் போகாதபடி (ஐந்தும்) ஶ்ரோத்ராதிகளான இந்த்ரியங்களைந்தையும், (உள்) ப்ரத்யக்கான பகவத்விஷயத்திலே, (அடக்கி) ப்ரவணமாம்படி நியமித்து, (ஆய்) அங்குத்தைக்கு ஸத்ருஶமாம்படி கந்த ஸஹஆயப்பட்ட, (மலர்) செவ்விப்பூக்களை, (கொண்டு) ஸம்பாதித்துக்கொண்டு, (ஆர்வம்) ப்ரீதிவிஶேஷம், (செறிந்த) மிக்க, (மனத்தராய்) மநஸ்ஸுடையராய், (செவ்வே) அவன்ஶேஷீ, நாம் ஶேஷபூதர் என்னும்முறையை நன்றாக (அறிந்து) தெளிந்து, (அவன்பேர்) குணசேஷ்டிதாதிகளுக்கு வாசகமான அவன் திருநாமங்களை, (ஓதி) இடைவிடாமற் சொல்லிக்கொண்டு, (ஏத்தும்) ஸ்ரீதிவ்யஸூக்தத்தாலே ஸ்தோத்ரம்பண்ணும், (பெரும்) பெரிய, (தவத்தோர்) ஸாத்யாதிகாரிகளானவர்கள், (கார்) கறுத்த, (ஓதம்) கடல்போலே மநோஹரமான, (வண்ணன்) வடிவையுடையனானவன், (கழல்) திருவடிகளை, (காண்பர்) கண்டநுபவிக்கப் பெறுவர்கள். (௬)

## ஏழாம்பாட்டு.

அ—இப்படி ஸாத்யஸாதநங்களுமாஶ்ரயித்துவாழுகிற விஷயத்தை ஸ்ரீதிவ்யவிக்ரஹமாக- நெஞ்சே? நீயு மநுஸந்திக்கப் பாரென்கிறார்-

(கழல்) ஆஶ்ரிதர்வாழும்படி திருவடிகளை, (எடுத்து) வளர்த்து, (மாற்றார்) ஶத்ருக்களான நமுசிப்ரப்ருதிகள், (அழலெடுத்த) நெருப்புக்கொளுத்தின, (சிந்தையராய்) ஹ்ருதயத்தையுடையராய்க்கொண்டு, (வாய்மடித்து) பல்லிறுகி நா மடிக்கொண்டு, (கண்) பார்வையிலே பட்டுவிழும்படி கடப்பார்க்கிற

மூ—சுழன்று * மாற்றா ரழலெடுத்த சிந்தையரா யஞ்சத் *—
தழலெடுத்த போராழி யேந்தினான் பொன்மலர்ச்சேவடியே*
ஓ ராழி நெஞ்சே? யுகந்து. (எ)

உகந்துன்னைவாங்கி யொளிநிறங்கொள்கொங்கை * அகம்
குளிரவுண்ணென்றாளாவி*— யுகந்து முலையுண்டாய்போலே

கண், (சுழன்று) வரிஹூசித்து, (அஞ்ச) நடுங்கும்படியாக, (தழலெடுத்த) எதிரிகள்மேலே நெருப்பை யுமிழுகிற, (போர்) யுத்தோத்யுக்தமான, (ஆழி) திருவாழியை, (ஏந்தினான்) தரித்த ஸர்வேச்வரனுடைய, (பொன்மலர்) பொன்போலேயும் பூப்போலேயும் ஸ்ப்ருஹணீயமா யதிஸுகுமாரமான, (சே) சிவந்த, (அடியே) திருவடிகளையே, (ஆழி) அளவுடைய, (நெஞ்சே) நெஞ்சே? (உகந்து) தேவையாகவன்றிக்கே ப்ரீதியோடே கூடிக்கொண்டு, (ஓர்) அநுஸந்தி. வாய்மடித்துக்கொண்டு சுழன்றுகொண்டு மாற்றாரழலெடுத்த சிந்தைபராம்படி தழலெடுத்தபோராழி யென்னவுமாம். (எ)

## எட்டாம்பாட்டு.

அ—இப்படி ரக்ஷிக்குமிடத்தில் ப்ரதிபந்தக முண்டானாலோவென்னில்? பூதனையைமுடித்தாற்போலே அவன்தானே யவற்றைப்போக்குமென்கிறார்-

(உகந்து) பூதனையானவள் யசோதைப்பிராட்டி ஸ்நேஹிக்குமாப்போலேஸ்நேஹித்து பரிவுதோற்ற ஓசழக்காக, (உன்னை) உன்னை, (வாங்கி) உறங்கத்திலேதூக்கியெடுத்து, (ஒளி) பால்விம்மி யொளிவிடுகிற, (நிறங்கொள்) புகரையுடைத்தான; (கொங்கை) முலையை, (அகம்) ஹ்ருதயம், (குளிர) குளிரும்படி, (உண்ணென்றாள்) உண்? ணென்றுஸாதரமாக முலைதந்தாள், (ஆனமையால்) ஆகையாலே, (நீயும்) நீயும், (அன்று) அவள் முலைதந்தவன்று, (அலை) அலையெறிகிற, (பண்பால்) ஸ்வபாவத்தாலே, (உகந்து) பெருப்பேறுபெற்றாப்போலே யுகந்துகொண்டு, (உண்பாய்போலே) மெய்யே முலையுண்பாரைப்போலே, (முனிந்து) சீறி, (ஆவியுண்டாய்) உண்டு அவள்ப்ராணனை முடி.

மூ—முனிந்துண்டாய்* நீயுமலைபண்பாலானமையாலன்று. (௮)

அன்றதுகண்டஞ்சாத ஆய்ச்சியுனக்கிரங்கி * நின்றுமுலை தந்த வின்னீர்மைக்கு*— அன்றுவரன் முறைபால் நீயளந்த மாகடல் சூழ்ஞாலம் * பெருமுறையா லெய்துமோ பேர்த்து. (௯)

த்துப்போகட்டாய், (அலைபண்பாலென்று) அழிந்த நீர்மையையுடையவளென் றவள்மேலே யேறிடவுமாம், உகந்துன்னை வாங்கி யொளிநிறங்கொள்கொங்கை அகங்குளிரவுண்டென்றுள் ஆனமையால் நீயுமன்றலைபண்பாலுகந்து முலையுண்டாய்போலே முனிந்தாவி யுண்டா யென்றநயம். (௮)

❁ ஒன்பதாம்பாட்டு. ❁

அ—பூதனைபடியை அநுஸந்தித்த நெஞ்சாறல்தீர இவ்விஷயத்தில்நிலைநின்ற ஶ்ரீமுகப யஶோதைப்பிராட்டியு மொருத்தியே என்று அவள்ஸ்நேஹத்தைக் கொண்டாடுகிறார்.

(அன்று) அவள்பிணமாய்விழும்படி நீ முலையுண்டுமுடித்தவன்று, (அது) முலைகொத்தவள்பட்டது, (கண்டு) நாமுமப்படிச்செய்வதென்னென்று, (அஞ்சாத) பயப்படாத, (ஆய்ச்சி) யஶோதைப்பிராட்டியானவள், (உனக்கு) உனக்கு, (இரங்கி) என்னது? விளையத்தேடிற்றே! யென்னும் வயிறெரிச்சலாலே பரிந்து (நின்று) தளராதே தறையிலே கால்பாவும்படி யஸித்துநின்று, (முலைதந்த) முலைதந்த, (இன்னீர்மைக்கு) இம்மஹாஸ்வபாவத்துக்கு, (அன்று) மஹாபலி நீர்வார்த்துத்தந்தவன்று, (வரன்) நீயுடையவனு மிவையுடைமையுமாகிற ஶ்ரேஷ்டமான, (முறையால்) உறவாலே, (நீ) ரக்ஷகனான நீ, (அளந்த) அந்யாபிமாநத்தால்வந்த வழல்மாறும்படி குளிரத் திருவடிகளாலே ஸ்பர்ஶித்து அளந்துகொண்ட, (மா) பெரிய, (கடல்) கடலாலே, (சூழ்) சூழப்பட்ட, (ஞாலம்) ப்ருத்வியானது, (பேர்த்து) மறுத்துப்பார்க்குமிடத்தில், (பெரு) இதில் இதுபெரியதென்று பெருக்கப்பார்க்கும், (முறைபால்) க்ரமத்தால், (எய்துமோ) ஒக்குமோ, அதுவும்பெரியசெயல் இதுவும்பெரியசெயல் அந்தஸ்வபாவத்துக்கிது ஒப்பாகப்போருமோவென்றபடி. (௯)

மூ—பேர்த்தனைமாசகடம் பிள்ளையாய்* மண்ணிரந்துகாத்தனை பல்லுயிருங் காவலனே *— யேத்தியநாவுடையேன் பூவுடை யேனின்னுள்ளி நின்றமையாற்* காவடியேன்பட்ட கடை. (௧௦)

❁ பத்தாம்பாட்டு. ❁

அ—அவனைப்போலே யெனக்குன்பக்கல் அதிசாத்ரவ்யாவண்ணு மில்லையாகிலும் வ்யாவண்ணுவெஸந்தானாகிலுமுண்டே; அதுவேபற்றாசாக அடியேபிடித்துக் கண்டகண்ட தேவதைகள் காற்கீழே தலைமடுத்துப்பட்ட என்றண்மையைப்போக்கி ரக்ஷிக்கவேணுமென்கிறார்-

(பிள்ளையாய்) வளர்த்தினதொட்டிலிலே கிடக்கும்படியான சிறுபிள்ளையாய்க்கொண்டு, (மா) பெரிய, (சகடம்) ஶகடத்தை, (பேர்த்தனை) கட்டழியும்படி தள்ளிப்போகட்டாய், (காவலனே) ஸர்வரக்ஷகனானவனே? அந்த ரக்ஷ்யரக்ஷகஸம்பந்தத்தை ப்ரகாஶித்துக்கொண்டு ஆஶ்ரிதனான இந்த்ரனிழவை பரிஹரிக்கைக்காக- (மண்) ப்ருதிவியை, (இரந்து) யாசித்துவாங்கிக்கொண்டு, திருவடிகளாலே குளிர ஸ்பர்ஶித்து, (பல்லுயிரும்) ஸகலாத்மாக்களையும், (காத்தனை) ரக்ஷித்தருளினாய் (நின்) இப்படி ரக்ஷகனானவுன்னை, (உள்ளி) ஸர்வஸமாஶ்ரயணீயனென்று அநுஸந்தித்து, (நின்றமையால்) நிற்கையாலே, (ஏத்திய) தனக்குத்தானே யேத்தும்படியான, (நா) நாவை (உடையேன்) உடையேனானேன், (பூ) காயிகமான வடிமைசெய்கைக் குபகரணமான புஷ்பங்களை, (உடையேன்) உடையேனானேன், (அடியேன்) உனக்கு ஶேஷபூதனாகையாலேவந்த தாஸ்யத்தையுடையனான நான், (பட்ட) அநாதிகாலம் அவராவீந்மான தேவதைகளின் காற்கீழே தலைமடுத்துப்பட்ட (கடை) தண்மையை, (கா) இனிவாராதபடி தேவர் காத்தருளவேணும். (௰)

❁ பதினோராம்பாட்டு. ❁

அ—நாட்டிலுள்ளார் க்ஷுத்ரதேவதைகளை ஆஶ்ரயித்து க்ஷுத்ரபலத்தைப் பெற்றுப்போமதொழிய ஸர்வாதிகனான வுன்னையறிந்து ஆஶ்ரயிக்கவல்லாரார்? ரென்கிறார்-

மூ—கடைநின் றமரர்கழல் தொழுது * நாளுமிடைநின்ற
இன்பத்தராவர்*— புடைநின்ற நீரோதமேனி நெடுமாலே*
நின்னடியை யாரோதவல்லாரவர். (௧௧)

அவ ரிவ ரென்றில்லை யரவணையான் பாதம்*

(கடைநின்று) அவ்வவதேவதைகளின் வாசற்கடைப்பற்றிநின்று, (அமரர்) நம்மிற்காட்டில் நாலுநாளேறவிருந்து சாகக்கடவ ப்ரஹ்மாதிதேவர்களுடைய, (கழல்) கால்களை, உபாஸநாபரானவர்க ளிரங்கி காரியஞ்செய்யுமளவும், (நாளும்) நெடுங்காலம், (தொழுது) ஆஶ்ரயித்து, அங்கேவந்துன்னை யநுபவித்தல் இங்கேயிருந்துன்னை யாஶ்ரயித்தல் செய்கைக்கு யோக்யதையில்லாதபடி, (இடை) நடுவே, (நின்ற) மிடறுபிடியாய்நின்ற, (இன்பத்தராவர்) ஸ்வர்க்காதிஸுகத்தைப் பெற்றநுபவிக்கப்பெறுவர், (புடைநின்ற) சுற்றும் சூழ்ந்துகிடக்கிற, (நீர்) ஜலஸம்ருத்தியையுடைய, (ஓதம்) கடல்போலே ஶ்ரமஹரமான, (மேனி) வடிவையுடைய, (நெடுமாலே) ஸர்வேஶ்வரனானவனே? (நின்) இப்படி ஸர்வாதிகனானவுன்னுடைய, (அடியை) திருவடிகளை, (ஓதவல்லாரவர்) ஸ்தோத்ராதிகளைப்பண்ணி யாஶ்ரயிக்கவல்லவர், (ஆர்) ஆர்தான், அன்றிக்கே தேவதாந்தரங்களுன்வாசலிலேநின்று உன்திருவடிகளைத்தொழு துன்னை ப்ரயோஜநமாகக்கொள்ளாதே ப்ரயோஜநாந்தரங்களைக்கொண்டு போவரென்றுமாம். (௧௧)

## பன்னிரண்டாம்பாட்டு.

அ—ஆனலந்த தேவதைகளை ஆஶ்ரயிக்கவொண்ணாதோ? அவர்களை க்ஷேபிக்கிறதென்னென்னில்? அவர்கள் தாங்களும் தந்தாமுடைய ஹிதம்பெறுகைக்கு அவனை யாஶ்ரயியாநின்றபின்பு நமக்கு மவனை யாஶ்ரயிக்கையன்றோ வடுப்பதென்கிறார்-

அவர்- ஆஶ்ரயணீயரான அந்ததேவர்கள், இவர்- அவர்களையாஶ்ரயிக்கிற விந்த உபாஸகர்கள், என்று- என்ன, இல்லை- ஒருவாசியில்லை, அரவு- திருவனந்தாழ்வானை, அணையான்- படுக்கையாகவுடைய ஸர்வாதிகனுடைய, பாதம்- திரு

ழ—எவர்வணங்கி யேத்தாதாரெண்ணில்*—
பவருஞ்செழுங்கதிரோ னொண்மலரோன் கண்ணுதலோனன்றே*
தொழுந்தகையார் நாளுந்தொடர்ந்து. (கஉ)

தொட ரெடுத்தமால்யானை சூழ்கயம் புக்கஞ்சிப்*
படரெடுத்தபைங்கமலங்கொண்டு*— அன்றிடரடுக்க வாழியான்

---

வடிகளை, வணங்கி- தலையாலேவணங்கி, ஏத்தாதாரெவர்- வர்யாலேயேத்தி யெவர்தானாச்ரயியாதவர்கள், எண்ணில்- ஆராய்ந்துபார்க்குமளவில் பவரும்- பரம்பின, செழும்- அழகிய, கதிரோன்- கிரணங்களையுடையனான வாதித்யனும், ஒண்- அழகிய, மலரோன்- திருநாபீகமலத்தை யிருப்பிடமாகவுடைய ப்ரஹ்மாவும், கண்ணுதலோனன்றே- லலாடநேத்ரனான ருத்ரனுமாகிற, நாட்டுக்காச்ரயணீயராக ப்ரஸித்தரான விவர்களன்றோ? நாளும்- நாடோறும், தொழும்- அவன் புக்கவிடம்புக்கப்பின்பற்றி யாச்ரயிக்கையே, தகையார்- ஸ்வபாவமாகவுடையராயிருக்கிறார்கள். (கஉ)

## ❁ பதிமூன்றாம்பாட்டு. ❁

அ—இப்படி பெரியாராச்ரயிக்கிற வளவன்றிக்கே ஜநவ்யாதிகளாற் குறைநின்றவர்களுக்கும் கூச்சமறச்சென்றாச்ரயித்து ஜீவிக்கலாமென்கிறார்—

தொடர்- இட்டவிலங்கை, எடுத்த- ஒடித்துக் கையிலேகொண்டு ஸ்வைரமாகத்திரிகிற, மால்யானை- உத்தமஜமானது, சூழ்- தன்னாற் கரைகாணவொண்ணாத பரப்பையுடைத்தான, கயம்- பொய்கையிலே புக்கு- ஸ்வைரிநிவிஷ்டமாய்ச் சென்றுபுக்கு, படர்- விகஸிதமாய், எடுத்த- ஓங்கியிருந்துள்ள, பைஅழகிய, கமலம்- தாமரைப்பூவை, கொண்டு- ஸாதனமாகப்பிடித்துக்கொண்டு, அன்று- அத்தசையிலே, இடர்- முதலைபின்வாயிலே யகப்பட்டுத் தன்னாலும் பிறராலும் பரிஹரிக்கவொண்ணாதபடியான து:கம், அடுக்க- வ்யஸ்தமாக, அஞ்சி- பதறி, பூச்செவ்வியழிவதுக்குமுன்னே திருவடிகளிலே பணிமாறப் பெறுகிறிலோமென்று பயப்பட்டு, ஆழியான்

ரூ—பாதம் பணிந்தன்றே *
வானவர்கோன்பாழிதா னெய்திற்றுப்பண்டு (கரு)
பண்டிப் பெரும் பதியை யாக்கிப்* பழிபாவங் கொண்டு
இங்குவாழ்வாரைக்கூறுதே*— பெண்டிசையும் பேர்த்தகரநான்கு

முதலேபைத்துணிக்கைக்கு வசிகரமான திருவாழியையுடை யனுன ஸவெஷ்ஞானுடைய, பாதம்- திருவடிகளை, பணிந்த ன்றே- ஆஶ்ரயித்தன்றோ; பண்டு- முன்பொருநாளிலே, வான வர்கோன்- அபர்வறுமமரர்க ளதிபதியானவனுடைய, பாழி தான்- வஶவெஷமாகிற ஸ்தாநந்தன்னை, எய்திற்று- ப்ராவித்த து, ஆனபின்பு அவனை யாஶ்ரயிக்குமிடத்தில் இன்று ஆராவர் இன்று ஆராகாரென்னும் நியதியில்லையென்றுகருத்து. (கரு)

பதினலாம்பாட்டு.

அ—இப்படி யவன் ஸவஷஸமாஶ்ரயணீயனுனபின்பு ஸம்ஸா ரவயஷகரான க்ஷுத்ரரை ஸேவாதரம்பண்ணுதே எம்பெருமா னையாஶ்ரயித்து நாட்டைப்புமுங்கள் ஸஞாநத்தாலே வசிஶ ஜமாம்படி பண்ணுங்கோளென்கிறூர்—

(பண்டியை) வயிற்றை, (பெரும்) பெரிய, (பதி) ஊர் போலே, (ஆக்கி) கண்டவன்னமுந் தின்னமுமாகவிட்டு வளர் த்து, (பழி) அதுக்கறுப்பாகத்தானறியாதே பிறரறிந்தேறிடு ம்படி சுவாஜிவஷவஷவமாகச் செய்யப்படும்பழியும், (பா வம்) வாஜிவஷவஷகமாகத்தா நநுஷ்டித்துப்போரும் நிஷி ஜாவரணமாகிற வாவத்தையும், (கொண்டு) உத்ஸராத்தரம் வளர்த்துக்கொண்டு, (இங்கு) ஐஹலொகத்திலே, (வாழ்வா ரை) வஶலொகஸவம் கணக்கண்டறியாதவாக ளாகையா லே இத்தைப் பெரியவாழ்வாககினைத்துக் களித்துத்திரியும்ஸெஹ யரான ஸம்ஸாரிகளை, (மாறுதே) உனக்கருபழியுண்டோ? பாவமுண்டோ? வென்று புகழாதே, (பேதைகாள்) கண்டதல்ல தறியாத வறிவுகேடர்காள்? (எண்டிசையும்) திருவுலகளந்தரு ளினபோது எட்டுதிக்குக்களையும், (பேர்த்த) பேர்த்துப்புகடும் படி விம்மவளர்ந்த, (நான்கு) நாலு, (கரம்) திருத்தோள்களை

மூ—டையான் பேரோதிப்பேதைகாள்* தீர்த்தகராமின்திரிந்து,
திரிந்ததுவெஞ்சமத்துத் தேர்கடவி* யன்றுபிரிந்ததுசீதை
யை மான்பின்போய்* — புரிந்ததுவும் கண்பள்ளிகொள்ள

---

(உடையான்) உடையனான ஸர்வேஶ்வரனுடைய, (பேர்) ஜ்ஞாநிகளுக்கு பாவகமான திருநாமங்களை, (ஓதி) இடைவிடாமற் சொல்லிக்கொண்டு, (திரிந்து) தீதில் நன்னெறிகாட்டி யெங்கும் ஸஞ்சரித்து, (தீர்த்தகராமின்) உங்கள் ஸஞ்சாரத்தாலே நாட்டை யிருந்ததேகுடியாக வஸிஷ்டாசாராம்படி பண்ணுங்கோள். ‘பண்ணுப்பெரும்பதி’ என்று முன்பிந்த ஸம்ஸாரத்தை வஸிஷ்டிப்பித்தென்னுதல், பழையதான ஸம்ஸாரத்தைச் சேர்த்தென்னவுமாம். (கச)

## பதினைந்தாம்பாட்டு.

அ—இவர்களிப்படி தங்களுடம்பைப் பேணிப்பேப்களாய்த் திரிய, இவர்களுக்காக க்ருஷ்ணனுவதாரனுவதாய்க்கொண்டு அதிஸுகுமாரமான திருமேனியோடே அவன்பட்டமிறுக்குக்களை நினைத்துவெறுக்கிறார்-

(வெம்) கொடிதான, (சமத்து) யுத்தத்திலே, எதிரிகள் விடுகிறவம்புகள் தன்மேலேபடும்படி யுடம்புக்கிடாமல் ஸாரதியாய்க்கொண்டு அர்ஜுநன் சொன்னவிடத்திலே, (தேர்) தேரை, (கடவி) நடத்திக்கொண்டு, (திரிந்ததுவும்) திருமேனியலசும்படி இதஸ்ததஸ்ஸஞ்சரித்ததுவும், (அன்று) ‘வநவாஸோமஹோதய:’ என்றுசொல்லும்படி உகப்புடனே காட்டிலே ஸஞ்சரித்துத் திரிகிறவன்று, (மான்) மாயாம்ருகத்தின், (பின்) பின்னே, (போய்) போய், (சீதையை) நித்யஸஹசாரிணியான பிராட்டியை, (பிரிந்ததுவும்) பிரிந்தலைச்சற்பட்டதுவும், (கண்) அதிகம்பீரமான ஸமுத்ரியிடத்திலே, (பள்ளிகொள்ள) பள்ளிகொண்டருள, (புரிந்ததுவும்) ஆசரித்ததுவுமான விவ்விவ செயல்களெல்லாம், (நாகத்தன்) மென்மை-குளிர்த்தி-நாற்றங்களை ப்ரக்ருதியாகவுடைய திருவனந்தாழ்வான்மேலே, (தண்பள்ளிகொள்வான்றனக்கு) குளிரப்பள்ளி

மூ—வழகியதே*நாகத்தின் தண்பள்ளிகொள்வான்றனக்கு.(கரு)
தனக்கடிமைபட்டது தானறியானேலு* மனத்தடைய
வைப்பதாம்மாலை *— வனத்திடரையேரியாம்வண்ண மியற்று
மிதுவல்லால் * மாரிபார்ப் பெய்கிற்பார் மற்று (கசு)

கொண்டருளக்கடவ சுகிவஸுகுரானை தனக்கு, (அழகிய) சாலவழகியதாயிருந்தன, என்று வயிறுபிடிக்கிறார், கண்பள்ளி கொள்ளவென்றது- கண்ணென்று இடமாய் தறைக்கிடைக்கிடக்கவென்றபடி. (கரு)

## பதினாறாம்பாட்டு.

அ—இப்படி நம்மைப்பெறுகைக் கெம்பெருமான் தானேகைதொட்டாயுதித்து க்ருஷிபண்ணுகிற்க வெதநனவாசிக் கவனைப் பெறவேணுமென்னும் ஈஹிராதுமொழிய நாம்பேற்றுக்கு யத்தம்பண்ணவேணு மென்பதொன் றுண்டோ? வென்கிறார்-

'சூதநாஸ்யஂஹரெஸ்ஹ்ஹிஂ ஞஸாவஞ ஸநாஸா' என்று எம்பெருமானுக்கு ஶேஷிக்வம் கூறுபட்டாப்போலே தனக்கு- தனக்கு, அடிமை- ஶேஷக்வம், பட்டது- கூறுபட்டதென்னுமிடத்தை, ஞாணவுஸியானு மாவாயஹிஸவெயா லும், தான்- தான், அறியானேலும்- உள்ளபடி யறியமாட்டாதவனாயிருந்தானேயாகிலும், மாலே- 'நம்முடைமையைநாம் பெறவேணும்' என்று மேல்விழுகிற வ்யாமோஹனவனே, திருவாணையிட்டு புகாதபடி தடுக்கையன்றிக்கே, மனத்து- உநவிஸலே, அடைய- வந்துசேரத்தக்கதாக, வைப்பது- தான்பொருந்தியிடங்கொடுத்து வைத்துக்கொள்ளுவது, இத்தலையிலே இவ்வளவு ஈஹிராதமுண்டானல், ஆம்- விரோயியைப்போக்கித் தன்னைத்தருகை யவனுடைய ஸாமிறே; அதெங்ஙனே யென்னில்? வனம்- காடெழுந்துகிடக்கிற, திடரை- சுகிகரிந மானதிடரை, வருகிறவஷஜலம் புறம்புபோகாதே தடையற வந்துபுகுரும்படி, ஏரியாம்வண்ணம்- ஏரியாம்வகாரம், இயற்றும்- யத்தித்துவெட்டுவிக்கும், இது- இத்தனை, அல்லால்- ஒழிய, பின்னை, மாரி- வஷத்தை, பெய்கிற்பார்- பெய்விப்பார்,

மூ—மற்றாரியலாவார் வானவர்கோன் பாமலரோன்*

ஆர்- ஆர், அதுக்குக்கடவனான வஜூநூனன்றோ ஏரிவஷூத்தை யுண்டாக்கிக்கொள்ளு மன்றன்றோ வூாவூியினு லுண்டாக்கிக்கொள்ளலாவது, ஆனபின்பித்தலையிலே விலக்காமையே பற்றாசாகத்தானே விரோயியைப்போக்கி வூாவூியையும் பண்ணித்தருமென்றபடி. அங்ஙனன்றிக்கே மனத்தடையவைப்பதாம்மாலே- அவன்ஶேஷி தான்ஶேஷம் என்னுமிடத்தைச் சேதநன் தானறியமாட்டானே யாகிலும் 'யஞூாவாாதிரெஷஃ' என்கிறபடியே தனக்குராஹியன்றிக்கே யிருக்கச்செய்தேயும் செய்வார்செய்யு முறைபாடுகண்ணுகிலும் ஸவெஶூாவோ ஹூஉயத்திலே வைத்துக்கொள்வது, இவ்வளவுகொண்டே யவன்றானே விரோயியையும்போக்கி வூாவூியையுப்பண்ணிக்கொடுக்குமதுக்கு உூஷூாஷஞ்சொல்லுகிறது:— ॥வனத்திடரிதூாஜி॥ காட்டுத்திடரை ஏரியாம்படிசொல்லுகையொழிய மற்றும் மழைபெய்விப்பாராரென்று யொஜிக்கவுமாம், அங்ஙனுமன்றிக்கே மாலேமனத்தடையவைப்பதாம்- ஸவெஶூாவோ ஹூஉயத்திலேகொண்டுவந்து ஸவஶூக்கி வையானே? என்றுகேஷவம், வனத்திடரைஐதூாஜி உநாஷூரைவூரித்துக் கல்லுவிப்பானு மிஂஊூனயிடுவித்து மழைபெய்விப்பானு மவன்றானேயன்றோ? வென்கிறார், அப்படியே வனத்திடரில்- சுவிஊூா கூஉவாஸநாஜிகளைப்போக்கி ராஹியுண்டாக்குவானும் தன் கஷூாணஶுணங்களை வஷிப்பானு மவனேயன்றோ வென்னவுமாம்; முற்பட்டயொஜநெ திருமலைநம்பியது, இரண்டாம் யொஜநெ அழ்வானது. (கசு)

❁ பதினேழாம்பாட்டு. ❁

அ—இப்படியிருக்கிற வவனையொழிய மற்றுஸ்ரயணீய ரில்லையென்கிறார்—

வானவர்- முப்பத்துமுக்கோடி தேவர்களுக்கெல்லாம், கோன்- நிவாஹகனான ஐஂஊூனும், மா- ஶூாவூமான, மலரோன்- திருநாஜீகஉஉத்தை வாஸஶூாநமாகவுடைய ஶூஹூாவும்,

மூ—சுற்றும்வணங்குந் தொழிலானை*—பொற்றைப் பிறையிருந்த செஞ்சடையான் பின்சென்று * மாலைக்குறையிருந்துதான் முடித்தான் கொண்டு. (கஎ).

கொண்டதுலகங் குறளுருவாய்க் கோளரியா*

சுற்றும்- நேர்கொடுநேரேசென்று கிட்டமாட்டாமல் பாடே பக்கேநின்று, வணங்கும்- திருவடிகளிலே ஸாஷ்டாங்கமாய் விழுந்து ஆஸ்ரயிக்கைக்குறுப்பான, தொழிலானை- ஸௌசீல்யாதி குணவிசேஷங்களாகிற வ்யாபாரங்களையுடைய னைப், மாலை- ஸர்வேச்வரனானவனை, ஒற்றை. ஏகாக்ஷரமான, பிறை- சந்த்ரனை, இருந்த- தரித்திருக்கிற, செம்- சிவந்த, சடையான்- ஜடையையுடையனான ருத்ரன், பின்சென்று- தன்ஹ்ருதயத்திலே தானபிமானித்துக்கொண்டிருந்த ஈச்வரத்வாபிமானத்தைவிட்டுப் பின்பற்றியநுவர்த்தித்து, குநகாரம் இரந்து- பல்காட்டி ஆச்ரயித்து, குறை- தன்னுடைய குறையை, தான்முடித்தான்- தான்தலைக்கட்டிக்கொண்டான், ஆனபின்பு மற்றார்- அவனையொழிய வேறார்தான், இயலாவார்- ஸர்வஸமாச்ரயணீயரா யிருப்பார். (கஎ)

❁ பதினெட்டாம்பாட்டு. ❁

அ—இப்படி ஸமாச்ரயணீயனை ஸர்வேச்வரனை யிருந்துவைத்துத் தன்னையொழிய மாறியு மாச்ரிதரைநோக்கும் ஸ்வபாவனென்கிறார்.

வான்கடந்தான்- ஆகாசத்தை யளவிடிலு மளவிடவொண்ணாத பெருமையையுடையனைப், தாமரை- இவனே ஸர்வஸ்வாதாரனென்னுமிடத்தைக் சோட்சொல்லித்தருகிற தாமரை போன்ற, கண்- கண்ணழகையுடையனான, மால் ஸர்வேச்வரன் நம்முடைமையை நாமே நம்மைபழியமாறி ரக்ஷிக்கை நமக்குஸ்வரூப ப்ராப்தமன்றோவென்று, வழக்கு- ந்யாயமாகச்செய்த செயல்களிருந்தபடி. குறளுருவாய்- ஸ்ரீவாமநனாய்த் தன்னை யழியமாறி ஆச்ரயித்து, உலகம்- ஸப்தலோகமுதலான லோகத்தை, கொண்டது- வாங்கிக்கொண்டதும், கோள்- மிடுக்கையுடைத்

மூ—ஒண்டிறலோன்மார்வத்து கிர்வைத்தது*— உண்டதுவும்
தான்கடந்தவேழுலகே தாமரைக்கண்மாலொருநாள்*
வான்கடந்தான் செய்தவழக்கு. (கஅ)

வழக்க ன்றுகண்டாய் வலிசகடஞ் செற்றாய் *
வழக்கென்று நீமதிக்கவேண்டா*—

தான, அரியாய்- நரஸிம்ஹவேஷியாய்க்கொண்டு, ஒண்- அழகிய, திறலோன்- மிடுக்கையுடையனான் ஹிரண்யனுடைய, மார்வத்து- மார்பிலே, உகிர்- உகிரை, வைத்தது- நாட்டிப்பிளந்துபொகட்டதும், ஒருநாள்- ஒருநாளிலே, தான்கடந்த- தானளந்துகொண்ட, ஏழுலகு- ஸப்தலோகங்களை, உண்டது- தாரதம்யம் பாராதே திருவயிற்றிலே யெடுத்துவைத்து நோக்கியும்செய்த செயலிவைகள்கிடீர், வழக்கு- ந்யாயம், ஸ்வரூபமென்றபடி. பிறர்க்கொருகார்யஞ் செய்தானாயிருக்கையன்றிக்கே தனக்கடைத்தகார்யஞ் செய்தானாயிருக்கை, உடையவனுடைமையை ரக்ஷிக்கவுரூபமிறே. (கஅ)

## பத்தொன்பதாம்பாட்டு.

அ—நம்மைபழியமாறியும் நம்முடைமையை நோக்குகை நமக்குஸ்வரூபமென்று அவன்நினைத்திருக்க இவரவனுடைய ஸௌகுமார்யத்தை யநுஸந்தித்து இது அஸ்வரூபமென்று வயிறெரிகிறார்-

திருமாலே. பெரியபிராட்டியார் ரெண்புகுருகிறதோவென்று வயிறெரிந்து 'ஸம்ஹாநுவிஸ்யுஷீ' என்று ஸம்ஹாஸாஸநம்பண்ணி நோக்கவேண்டும்படி நிரதிசயஸௌகுமார்யனானவனே? இப்படியிருக்கிற நீ சிறுபிள்ளையாய்க்கொண்டு அதிஸௌகுமார்யமான திருவடிகளாலே, வலி- அதிப்ரபலமான, சகடம்- சகடத்தை, செற்றாய்- உதைத்து முறித்து விழவிட்டாய், வழக்கு- பிராணேபிதுஸ்வரூபம், அன்றுகண்டாய்- அன்றுகிடாய், வழக்கென்று- ரக்ஷகனான நமக்கு விரோதிகளைப்போக்கி நோக்குகை ஸ்வரூபமன்றோவென்று, நீ- இந்த ஸாஹஸப்ரவ்ருத்தியிலே அநுதாபங்கூட அற்றிருக்கிற நீ, மதிக்கவேண்டா-

மூ—குழக்கன்று தீவிளவின்காய்க்கெறிந்த தீமைதிருமாலே* பார் விளங்கச்செய்தாய் பழி. (கக)

பழிபாவம்கையகற்றிப்பல்காலும் நின்னை* வழிவாழ்வார் வாழ்வராம்மாதோ!*— வழுவின்றிநாரணன்றன்நாமங்கள் நங்குணர்ந்து நன்கேத்தும் * காரணங்கள் தாம்

வ்யாஜிபண்ணவேண்டா, அதுக்குமேலே குழக்கன்று- ஸுவஸா ஸுறுன குழக்கன்றைக்கொண்டு, தீ- ஸுவஸாஸ வடிவாய்த்தீதான விளவின்- விளாவின், காய்க்கெறிந்த- காய்க்கெறிந்த, இந்தத் தீம்பான செயலானது, பார்- ஸுஹியிலே, விளங்க- ஒருகா ஸிக்கும்படி, பழி- தப்பாக, செய்தாய்- செய்தாய், அவன்புக ழென்றிருக்க இவர்பழியென்று வயிறுபிடிக்கிறார், விஹுதியி லெகதெஸத்தை நோக்கப்புக்க உஹயவிஹுதியையு மழிக்கப் பார்த்தாயென்றின்னுதாகிறார். (கக)

## இருபதாம்பாட்டு.

அ—ஸமவதூராஸுயணத்தில் முதலடியிட்டாரோடு முடியத்தலை க்கட்டப்பெற்றரோடு வாசியற க்ருதக்ருத்யரென்கிறார்-

பழி- தாங்களறியாதிருக்கப் பிறரறிந்தேறிடும் ஸுவகீ திருமையும், பாவம்- அறிந்தநுஷ்டிக்கப்பட்ட வாஹிம்ஸாதி ரூவமான பாவத்தையும், கையகற்றி- கைகழியவிட்டு பல்காலும்- ஸவஸுகாலமும், நின்னை- உன்னை, வழி- ஸாஸ்த்ரங் களிற்சொல்லுகிற கட்டளையிலே வழிப்பட்டுநின்று, வாழ்வார்- ஹொமாஸுவமாக வாஸுயிக்குமவர்களும், நாரணன்றன்— நா ராயணஸ்ஹவாவுஜையாலே ஸவஸுரக்ஷகனுயிருக்கிற வுன் னுடைய, நாமங்கள்- திருநாமங்களை, வழு- விச்சேதம், இன் றி- இல்லாதபடி, வெதயாகுராய்க்கொண்டு நன்கு- அழகி தாக, உணர்ந்து- அறிந்து, வெதவெவஸரர்க்கொண்டு நன் கு- அழகிதாக, ஏத்தும்- ஏத்துகைக்கு, காரணங்கள்தாம்- ஹெதுக்களானவெதம், தஙெதுவான உஜநம், தனிசா நமானஸ்ஹி, தனிசாநமானஸாகுதம், அதுக்கடியானவுன் க்ஷாக்ஷமென்றுப்போலே சொல்லுகிறவிவற்றை, தாம்- தாங்கள்,

மூ— உடையார் தாம். (உ௦)

தாமுளரே தம்முள்ளமுள்ளுளதே* தாமரையின்பூவுளதே
யேத்தும் பொழுதுண்டே *— வாமன்றிருமருவு தாள்மருவு
சென்னியரே செவ்வே* யருநரகஞ் சேர்வதரிது. (உக)

---

உடையார்- பெற்றுடையராயிருக்கிறவர்களுமான இவ்விரண்டதிகாரிகளும், வாழ்வராம்- ஸம்ருத்தராய் வாழப்பெறுவர்கள், மாதோ! வென்கிறவிது ஓரவ்யயமாய் இதோ! ஆஶ்சர்யமிருந்தபடியென்? என்னும் பொருள்பெற்றுக்கிடக்கிறது. (உ௦)

## ❁ இருபத்தோராம்பாட்டு. ❁

அ—எம்பெருமானை பஜிக்கைக்கீடான கரணஸம்பத்திற் குறைவற்றிருக்கச் செய்தேயும் ஸம்ஸாரிகள் விலக்கடிதேடிக்கொண்டு போய்ப் புகுகிறபடி எங்ஙனே! யென்று விஸ்மயப்படுகிறார்-

தாம்- ஆஶ்ரயணோபகரணமான கரணகளேபரவிஶிஷ்டரான தாங்கள், உளரே- முந்துறமுன்ன முளராயிருந்தார்கள், தம்- அநாஸம்யாந்வஶிகமான தந்தாமுடைய, உள்ளம்- மநஸ்ஸு, உள்ளுளதே- புறம்பே தேடவேண்டாதபடியுண்டாயிருந்ததே, தாமரையின்பூ- திருவடிகளிலே பணிமாறுகைக்குறுப்பான கைக்கெட்டின தாமரைப்பூ, உளதே- உண்டாயிருந்ததே, ஏத்தும்- வாய்விட்டுப்புகழுகைக்கீடான பொழுது- காலம், உண்டே- உண்டாயிருந்ததே, வாமன்- தன்னுடைமை பெறுகைக்குத் தன்னை யிரப்பாளனாக்கும் நீர்மையையுடையனான ஸர்வேஶ்வரனுடைய, திருமருவு- ஸௌலப்யப்ரகாஶகமாய் பூஜாரவிந்தாதி விஹிதமான, தாள்- திருவடிகளிலே, மருவு- ஶேஷத்வாநுரூபமாகச் சேருகைக் கநுரூபமான, சென்னியரே- தலையையுடையராயிருந்தார்கள், இப்படியிருக்க செவ்வே- நேர்கொடுநேரே, அரு- கொடிதான, நரகம்- ஸம்ஸாரத்தை, சேர்வது- சென்றுகிட்டுகை, அரிது- அரிது, இங்ஙனேயிருந்தபின்பிவர்கள் விலக்கடிதேடிக்கொண்டு திரிகிறபடி எங்ஙனேயோ! வென்று விஸ்மயப்படுகிறார். (உக)

மூ—அரியதெளிதாகுமாற்றலால்மாற்றிப் * பெருகமுயல்வாரைப்பெற்றால் *— கரியதோர் வெண்கோட்டுமால்யானை வென்று முடித்தன்றே * தண் (தோ) கோட்டுமாமலரால் தாழ்ந்து. (உஉ)

## இருபத்திரண்டாம்பாட்டு.

அ—தங்களுக்கொரு பரிகாரஸம்பத்தி யற்றிருந்ததேயாகிலும் அவன்பக்கலிலே ந்யஸ்தபராயிருப்பார்க் கெளிதாகசூழுயிக்கலாம்படியன்றே யவன் நீர்மையினேற்ற மிருப்பதென்கிறார்-

(ஆற்றலால்) வஸ்துவை ஸ்வதந்த்ரமாக்கவல்ல ஶக்தியொழுத்தாலே, (மாற்றி) உன்பேற்றுக்குறுப்பாக நீ யொன்றும் யத்நித்துச் செய்யவேண்டாமென்று ஸாக்ஷாத்காரமாக இவன் பண்ணும் ப்ரவ்ருத்திகளை யடையமாற்றி ஜ்ஞானம் ப்ரேமம்முதலாக வெகுமதிகளைச் ஸம்பாதிக்குமாக விவனுக்குச் செய்யவேண்டும் ஸமஸ்தகார்யமும் தன்தலையிலே யேறிட்டுக்கொண்டு இவனுக்கு மௌத்திலே அநுபமாம்படி தன்பேறாக ஸமஸ்தாபேக்ஷைகளையும் பண்ணுகையிலே, (பெருக) மிகவும், (முயல்வாரைப்பெற்றால்) உத்ஸாஹியாகிற்கும் ஸஹாயக்ஷரைப் பெற்றால், (அரியது) பெறுதற்கரிதான ஸமஸ்தமும், (எளிதாகும்) எளிதாகாநிற்கும், அதெங்கே கண்டோமென்னில்? (கரியது) கறுத்த நிறத்தையும், (வெண்) வெளுத்த, (கோடு) கொம்பையும், (மால்) பெரிய வடிவையு முடைத்தான, (யானை) ஆனையானது, (வென்று) அடிமைக்குக் காற்கட்டான முதலையை ஜயித்து, (முடித்தன்றே) அழியச்செய்தன்றே, (தண்) குளிர்ந்த, (கோடு) பொய்கைக்கரையிலே, (மா) ஶ்லாக்யமான, (மலரால்) தாமரைப் பூக்களைக்கொண்டு, அரைகுலையத் தலைகுலையவந்து தோன்றி விரோதியைப்போக்கி ரக்ஷித்தருளின அவன்திருவடிகளிலே, (தாழ்ந்து) தாழ்ந்தடிமை செய்யப்பெற்றது (தாழ்ந்து) தாழ்ந்ததென்றபடி. (கோடென்று) கரைக்குப்பேர், தட்டம்- குளிர்த்தி, குளிர்ந்த பொய்கைக்கரையிலே யென்றபடி. 'தண்தோட்டுமாமலர்' என்று பாடமானபோது குளிர்ந்தவிதழையுடைத்தான பெரியவ்ருக்ஷத்திலே யென்று பொருளாகக்கடவது. (உஉ)

மூ—தாழ்ந்துவரங்கொண்டு தக்கவகைகளால் * வாழ்ந்துகழிவாரைவாழ்விக்குந் *— தாழ்ந்தவிளங்கனிக்குக் கன்றெறிந்துவேற்றுருவாய் * ஞாலமளந்த டிக்கீழ் கொண்ட வவன். (௨௩)

## ❁ இருபத்துமூன்றாம்பாட்டு. ❁

அ—தன்னை யாச்ரயித்தார்களுடைய விரோதிகளைப் போக்கி ஸமீஹிதஸித்தியையும் பண்ணிக்கொடுத்து தத்ததிகாராநுகுணமாக ரக்ஷிக்குமென்கிறார்-

(தாழ்ந்த) கனியப்பழுத்துக் கிடக்கையாலே தரையளவும் வரத் தாழ்ந்துகிடக்கிற, (விள) அஸுரமயமான விளாவினுடைய, (கனிக்கு) பழங்களுக்கு, (கன்று) அஸுரமயமான கன்றை, (எறிந்து) எறிகோலாகவெடுத்தெறிந்து, (வேற்றுருவாய்) ஸ்ரீய:பதியான தன்னுருவைவிட்டு அர்த்தியான வாமநவேஷத்தை யுடையனாய்க்கொண்டு, (ஞாலம்) பூமியை, (அளந்து) அளந்து, (அடிக்கீழ்) தன்காற்கீழே, (கொண்டு) இட்டுக்கொண்டு, (அவன்) அந்தஸர்வேச்வரன், (தாழ்ந்து) 'நநமேயம்' என்கிற ஸ்வாதந்த்ர்யத்தைப் புகட்டுத் தன்திருவடிகளிலேவணங்கி, எங்கள்ஹிதம் நீயே பண்ணித்தரவேணுமென்று, (வரம்) தன்ப்ரஸாதத்தை, (கொண்டு) கைதொடுமானமாகப்பிடித்துக்கொண்டு (தக்க) தந்தாமுடையவதிகாரங்களுக்குத் தகுதியாயிருந்த, (வகைகளால்) ப்ரகாரங்களாலே, (வாழ்ந்து) ஐச்வர்யம் ஆத்மலாபம் ஸ்வப்ராப்தியாகிற ஸ்வஸமீஹிதங்களைப் பெற்று, (கழிவாரை) ஸர்வோத்தரராய்த் தலைக்கட்ட வேணுமென்றிருக்கு மவ்வவதிகாரிகளையும், (வாழ்விக்கும்) அவர்கள் ருசிக்குமவஸாநத்துக்கு மேலான தத்தத்பலங்களைக் கொடுத்து ரக்ஷியாநிற்கும். (௨௩)

## ❁ இருபத்துநாலாம்பாட்டு. ❁

அ—இவனுண்டானவன்று இவனபேக்ஷிதங்கொடுத்து ரக்ஷித்தானென்னுமித்தாரேற்றமோ அப்போதே தொடங்கி யிவனுடைய ஸத்தையை நோக்கிக்கொண்டுபோருகிறவனுக்கு என்கிறார்-

மூ— அவன்கண்டாய்நன்னெஞ்சே யாருளுங்கேடும்* அவன்கண்டாயைம்புலனாய்நின்றான்*— அவன்கண்டாய் காற்றுத்தீநீர்வான் கருவரைமண்காரோதச் * சீற்றத்தீயாவானுஞ்சென்று. (உச)

(நல்) ஸுவிசேஷங் கேட்டாலுக்கும் நல்ல, (நெஞ்சே) நெஞ்சே, (ஆர்) பரிபூர்ணமான க்ருபையாலே யுண்டாகக்கடவ, (அருளும்) மோக்ஷமும், (கேடும்) நிக்ரஹ கார்யமாய் வரக்கடவ ஸம்ஸாரமாகிற து:கரூபமாகிற இவற்றுக்கு, (அவன்கண்டாய்) நிர்வாஹகனானவன் கிடாய், இரண்டுக்கும்பொதுவான ஶரீரத்துக்கு ஆரம்பகமான, (காற்று) வாயு, (தீ) அக்நி, (நீர்) ஜலம், (வான்) ஆகாஶம், (மண்) ப்ருதிவிகளாகிற பூதங்களுக்கும், (கரு) ஸ்தைர்யமானபெரிய, (வரை) பர்வதங்களாகிற இவற்றை யடியிலே யுண்டாக்குவானும், (அவன்கண்டாய்) அவன்கிடாய், (சென்று) ஸம்ஹார காலத்திலே இவற்றையழிக்க வொருப்பட்டுத் திருவுள்ளஞ்சென்று அதுக்குபகரணமாய், (கார்) கறுத்த, (ஓதம்) கடலை, (சீற்றம்) சீறிச்சுடக்கடவ, (தீயாவானும்) படபாக்நிக்கு நிர்வாஹகனாயிருப்பானும், (அவன்கண்டாய்) அவன்கிடாய், (ஆக) த்யாஜ்யோபாதேயங்க ளிரண்டுக்கும் நிர்வாஹகனென்றபடி, (ஆருமொன்று) அருளின் கார்யமான மோக்ஷத்தை லக்ஷிக்கிறது, அன்றிக்கே அநுக்ரஹஹேதுவான புண்யத்தையும் நிக்ரஹஹேதுவாய் அநர்த்தரூபமான பாபத்தையுஞ் சொல்லவுமாம். (உச)

## இருபத்தஞ்சாம்பாட்டு.

அ— இப்படி ஸர்வஸாதாரணனாய்நின்று ரக்ஷிக்குமளவன்றிக்கே ஆஶ்ரிதவிஷயத்தில் ஸாதாரணனாய்நின்று பக்ஷபதித்து ரக்ஷிக்கும்படியை யருளிச்செய்கிறார்-

(விண்ணவர்) பரமபதவாஸிகளான நித்யஸூரிகள், (தம்) தங்கள், (வாய்) வாய்விட்டேத்துகைக்கு விஷயமாகையாலே, (ஓங்கு) உத்துங்கமாய், (தொல்) ஸ்வாபாவிகமான, (புகழான்) கல்யாணகுணங்களையுடைய ஸர்வேஶ்வரன், (வந்து)

மூ—சென்றதிலங்கைமேல் செவ்வேதன்சீற்றத்தால் * கொன்ற
திராவணனைக்கூறுங்கால்*— நின்றதுவும்வேயோங்குதண்சாரல்
வேங்கடமே * விண்ணவர்தம் வாயோங்குதொல்புகழான் வந்து.
வந்தித்தவனை வழிநின்றவைம்பூதம் *
ஐந்துமகத்தடக்கி யார்வமாய்*—

அங்குநின்றும் வந்தவதரித்து, (செவ்வே) ஸஜ்ஜுத்தாலன்றி
க்கே நேர்கொடுநேரே 'ஊஹியாதா' வென்னும்படி, (சென்றது)
எடுத்துவிட்டுச்சென்றது, (இலங்கைமேல்) ஐந்த்ராதிகள்கேட்
கவே வயிறுபிடிக்கும்படியான ஸம்ருத்தியிலே, (தன்சீற்றத்தால்)
'வ்ரதாவ' என்கிறபடியே ஸவதாரத்தின் மெய்ப்பாட்டா
லே ஸ்வைகஷ்தஸயத்திலே உதவி கூவங் காட்டக்கடவதான
கோபத்தாலே, (கொன்றது) கொன்றுவிழவிட்டது, (இரா
வணனை) ஸவயஜ்ஞக வரம்பெற்றுடைய ராவணனே, (கூறுங்
கால்) அவன்படிகளைச் சொல்லப்புக்கால், (நின்றதுவும்) ஸவ
தாரகாலத்தி விழந்தவர்களிழவைப் பரிஹரிக்கைக்காக வெ
ழுந்தருளிநின்றதுவும், (வேய்) மூங்கில், (ஓங்கு) வளர்ந்திருக்
கிற, (தண்) குளிர்ந்த, (சாரல்) பர்வதங்களை யுடைத்தான,
(வேங்கடமே) திருமலையிலே, விண்ணவரித்ராதிக்கு ராவண
வயஸநஜாம் ப்ரஹ்மாதிகளாலே ஸ்துதிக்கப்படுகிற புகழை
யுடையவனென்று பொருளாகவுமாம். (உரு)

## இருபத்தாறும்பாட்டு.

அ—கீழ்ப்ரஸ்துதமான திருமலைதான் பின்னையுமிவர்க் காகஷ்
கமாபங்கே திருவுள்ளஞ்சென்று திருமலைக்குள்ள வைலக்ஷண்ய
ஞ்சொல்லுகிறார்—

(வந்தித்து) ஸஹிதநமஸ்காரராய்க்கொண்டு திருவடிகளி
லேதலைமடுத்து, (அவனை) அவனையாச்ரயித்து தசஸ்ப்ராவ்ருத்வ
திவம்யகங்களாய்க்கொண்டு, (வழி) நடுவே, (நின்ற) நின்று
தகைகிற, (ஐம்பூதமும்) ப்ருதிவ்யாதி பஞ்சபூதங்களையும்,
(ஐந்தும்) ச்ரோத்ராதிகளான ஐந்த்ரியவர்கத்தையும், (அக
த்தடக்கி) ப்ரத்யகாத்மஸ்வரூபமாம்படி நியமித்து, (ஆர்வமாய்)

மூ—உந்திப்படியமரர்வேலையான் பண்டமரர்க் கீந்த * படியமரர் வாழும் பதி. (உசு)

பதியமைந்துநாடிப் பருத்தெழுந்தசிந்தை * மதி யுரஞ்சி வான்முகடுநோக்கிக் *— கதிமிகுத்தங்கோல் தடியோடும்

அவன்பக்கலிலே ஆஸ்திக்யத்தை யுடையராய்க்கொண்டு, (உந்தி) ஒருவர்க்கொருவர் முற்கோலிவந்து, (படி) ஆஶ்ரயிக்கும்படி, (அமரர்) ப்ரஹ்மாதிதேவர்களுக்காக, (வேலையான்) திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருளுகிற ஸர்வேஶ்வரன், (பண்டு) 'யத்ர பூர்வே ஸாத்யாஸ்ஸந்தி தேவா:' என்னும்படி முற்பாடரான, (அமரர்க்கு) நித்யஸூரிகளுக்கு, (ஈந்த) ஸர்வஸ்வதானம் பண்ணுவாரைப்போலே கொடுத்தருளிற்று, (படியமரர்) பூஸுரரான ஸ்ரீவைஷ்ணவர்கள், (வாழும்) அநுபவித்தடிமை செய்துவாழுகிற, (பதி) திருமலை, (பண்டமரர்க்கு) முன்பு நித்யஸூரிகளுக்குக் கொடுத்ததென்றுமாம். (உசு)

## ❀ இருபத்தேழாம்பாட்டு. ❀

அ—இப்படி திருமலையிலே நிலையை அநுஸந்தித்தவர் அங்கு நினைத்த பரிமாற்றம்பெறுமையாலே நினைத்தபடி பரிமாறலாம் பரமபதத்திலிருக்கிற ஸர்வேஶ்வரனைத் தேடாநின்றது என்னெஞ்சு என்கிறார்-

(பதி) திருமலையாகிற ஸ்தானத்திலே, (அமைந்து) வேரூன்றிநின்று, (நாடி) ஆஸ்திக்யந்தோற்ற வெங்கேயெங்கேயென்று தேடிக்கொண்டு (பருத்து) ப்ரதமாவஸ்தையில் பெருத்து, (எழுந்த) கிளம்பின, (சிந்தை) ஜ்ஞானத்தை யுடைத்தாய், (மதி) சந்த்ரபதத்தையும், (உரஞ்சி) உரோசிக்கொண்டு அவ்வருகுபட்டு, (வான்முகடு) அண்டபித்தியிலேசெல்ல, (நோக்கி) கடாக்ஷித்து, (மால்) ஸர்வஸ்வதானம் பண்ணுமவனைப் பற்றிக்கொண்டு பரமபதத்திலே தன்மேன்மைதோற்ற வெழுந்தருளியிருக்கிற ஸர்வேஶ்வரனை, (தேடி) தேடி, (ஓடும்) விட்டவிடத்தில்விடாதே பற்றிச்செல்லுகிற, (மனம்) என்னுடைய நெஞ்சானது, (கதிமிகுத்து) மஹாவேகத்தை யுடைத்தாய்

மூ—கொழுந்ததேபோன்றதே* மால்தேடியோடும் மனம். (உஎ)

மனத்துள்ளான்வேங்கடத்தான் மாகடலான் * மற்றுநினைப்பரிய நீளரங்கத்துள்ளான் *— எனைப்பலரும்தேவாதிதேவனெனப்படுவான் * முன்னொருநாள் மாவாய்பிளந்த மகன். (உஅ)

க்கொண்டு, (அம்) அழகிய, (கோல்) கொம்பை, (தேடி) தேடி, (ஓடும்) படர்ந்துசெல்லுகிற, (கொழுந்ததேபோன்றது) கொழுந்துபோலேயிராநின்றது, * மாகவைகுந்தங் காண்பதற்கென்மனமேக மெண்ணுமாப்போலே (உஎ)

❁ இருபத்தெட்டாம்பாட்டு. ❁

அ—தன்றிருவுள்ளமிப்படி அபிநிவேசித்தவாறே யவனுமஸந்நிதிவிஷேனுய்க்கொண்டு கோயில் திருமலை முதலான தன்னிருப்பிடங்களை யுபேக்ஷித்துத் தன்றிருவுள்ளத்தை வந்து புகுந்தாரென்கிறார்-

(எனைப்பலரும்) அஸங்க்யாதரான வேதவைதிகபுருஷர்கள்பலரும், (தேவாதிதேவன்) நித்யஸூரிகளுக்குநிர்வாஹகனான பெரியமேன்மையுடையவன், (எனப்படுவான்) என்றுசொல்லப்படாநிற்பானாய், ஜகத்ரக்ஷணார்த்தமாக அங்குநின்றும்வந்து, (மா) பரப்பையுடைத்தான, (கடலான்) திருப்பாற்கடலிலே பள்ளிகொண்டருளாநிற்பானாய், (முன்) முன்பே, (ஒருநாள்) ஒருநாளிலே, க்ருஷ்ணனுய்வந்தவதரித்து, (மா வாய்) கேசிவாயை, (பிளந்த) அநாயாஸேந பிளந்துபொகட்ட, (மகன்) சிறுபிள்ளையாய், (மற்றும்) அதுக்குமேலே, (நினைப்பரிய) நினைக்கவரிதான, நீர்மையேற்றத்தை யுடையனுய்க்கொண்டு, (நீள்) ஹாஸ்யதமிக்கிருக்கிற, (அரங்கத்து) கோயிலிலே, (உள்ளான்) ஸம்ஸாரிகளை ரக்ஷித்தல்லது பேரேனென்று கண்வளர்ந்தருளுமவனாய், (வேங்கடத்தான்) திருமலையிலே ஸவுலப்யஸாகரனுய்க்கொண்டு எழுந்தருளிநிற்கிறவன், என்னைப்பெறுகைக்காக முன்புவிரும்பின அவ்வவஸ்தலங்களை யுபேக்ஷித்து இப்போது அஸந்நிதிவிஷேனுய்க் கொண்டு, (மனத்து) என்னெஞ்சிலே (உள்ளான்) நித்யவாஸம்பண்ணுநின்றான். (உஅ)

மூ—மகனாகக்கொண்டெடுத்தாள் மாண்பாயகொங்கை *
அகனாரவுண்பனென்றுண்டு *— மகனைத்தாய்தேறாதவண்ணம்
திருத்தினாய் தென்னிலங்கை * நீறாகவெய்தழித்தாய் நீ. (௨௯)
நீயன்றுலகளந்தாய் நீண்டதிருமாலே *

## ❁ இருபத்தொன்பதாம்பாட்டு, ❁

அ—'மாவாய்பிளந்தமகன்' என்று ப்ரஸ்துதமான க்ருஷ்ணாவதாரத்திலே கால்தாழ்ந்து சுழியாறுபடுகிறார்-

(தென்) தக்ஷிணதிசையிலே கட்டளைப்பட்ட, (இலங்கை) லங்கையை, (நீறாக) பஸ்மஸாத்தாக, (எய்து) தநுஸ்ஸுக்கு ராஜமான திருவில்லாலே திருச்சரங்களை நடத்தி, (அழித்தாய்) முடித்துப்புகட்டவனே, (நீ) இப்படியிருக்கிற நீ, (மகனாக) பருவம் நிரம்புவதுக்கு முன்னே யசோதைப்பிராட்டியைப் போலே புத்ரனாகவே, (கொண்டு) புரையறஸ்நேஹித்துக் கொண்டு, (எடுத்தாள்) பரிவுதோற்ற ஓசழக்காகத் தூக்கியெடுத்த பூதனையுடைய, (மாண்பாய) பாலின்வநத்தாலே விம்மியொளிவிடுகிற, (கொங்கை) அழகியமுலையை, (அகன்) வயிறு (ஆர) நிறையத் தக்கதாக, (உண்பனென்று) உண்பனென்று, (உண்டு) அபிநிவேசந்தோற்றப் பாலோடே ப்ராணனும்போம்படி யமுதுசெய்து, (மகனை) புத்ரனானவுன்னை, (தாய்) தாயாரான யசோதைப்பிராட்டி, (தேறாதவண்ணம்) விஶ்வஸியாதே துணுக்குத்துணுக்கென்று வயிறுமறுகும்படி, (திருத்தினாய்) ஶிக்ஷித்துவிட்டாய். (௨௯)

## ❁ முப்பதாம்பாட்டு. ❁

அ—இப்படி க்ருஷ்ணவிஷயமும் ராமவிஷயமும் அநுஸந்தித்த ப்ரஸங்கத்திலே யவற்றோடே சேர்ந்த வவதாரங்களையும் பலசேஷ்டிதங்களையும் அநுஸந்தித்து வித்தராகிறார்-

(பேர்) பெரிய, (ஓதம்) கடல்போலேயிருண்டு குளிர்ந்த, (மேனி) திருமேனியையுடையனாய், (பிரான்) அவ்வழகை முற்றூட்டாக பென்னையநுபவித்த உபகாரகனாய், (நீண்ட) ஸர்வவ்யாப்திவைபவனான, (திருமாலே) ஸ்ரீய:பதியே? (நீ)

மூ—நீயன்றுல கிடந்தா யென்பரால் *— நீ யன்றுகாரோதம்
முன்கடைந்து பின்னடைத்தாய் மாகடலைப் *
பேரோதமேனிப்பிரான். (௩௦)
பிரா னென்று நாளும்

இப்படி ஸர்வாதிகனான நீ, (அன்று) ஆச்ரிதனான இந்த்ரன் ஐச்வர்யத்தையிழந்து கண்ணும்கண்ணீருமாய்த் திருவடிகளிலே வந்துவிழுந்தவன்று, மஹாபலிபக்கலிலே அர்த்தியாய்ச் சென்றிரந்து, (உலது) ஜகத்தை, (அளந்தாய்) திருவடிகளாலே அளந்துகொண்டாயென்றும், (அன்று) பூமியானது ப்ரளயத்திலேகரைந்து அண்டபித்தியிலே சென்றொட்டினவன்று, நீருக்கும் சேற்றுக்கு மிறுயாதவடிவைக்கொண்டு, (நீ) ரக்ஷகனான நீ, (உலது) அந்த பூமியை, (இடந்தாய்) ப்ரளயத்திலேமுழுகி இடந்தெடுத்துக்கொண் டேறினாயென்றும், (அன்று) துர்வாஸ சாபத்தாலே நஷ்டஸ்ரீகராய்க்கொண்டு இந்த்ராதிகள் சரணம்புக்கவன்று, (நீ) ஸர்வசக்தியான நீ, (கார்) கறுத்தநிறத்தையுடைத்தான, (ஓதம்) கடலை, பிராட்டியை லபிக்கைக்காக; (முன்) முற்பட, (கடைந்து) கடைந்து, (பின்) பின்பொருகாலத்திலே, அவள் முகமலர்ச்சிகாண்கைக்காக, (மா) தத்ஜாதீயமான பெரிய, (கடலை) கடலை, (அடைத்தாய்) அடைத்தருளினாயென்றும், (என்பர்) உன்படியை யறியக்கடவ ப்ராமாணிகரான பேஷிகள் சொல்லாநின்றார்கள், இவை சிலசேஷ்டிதங்களிருக்கும்படியே என்று விஸ்மரிக்கிறார்- (௩௦)

❁ முப்பத்தோராம்பாட்டு. ❁

அ—இப்படி ஸர்வஜ்ஞனான உன்திருவடிகளை ஸாத்யஸாதனங்களைக்கொண்டு ஆச்ரயிக்குமவர்கள் ஸர்வாகாரமான அவன்திருமேனியை நித்யாநுபவமாக அநுபவிக்கப்பெறுவ ரென்கிறார்-

பிரானென்று- இவ்வாத்மாவுக்கு வகுத்த சேஷியானவனே? யென்று, நாளும்- ஐதரவிஷயாநுபவத்துக் குறுப்பாய்க்கொண்டு பாழேகழிகிறநாளிலே, பகவதநுபவத்துக்கு யோக்ய

மூ—பெரும் புலரியென்றும் * சூரானற் செழும் போது கொண்டு *— வராகத்தணியுருவன் பாதம்பணியுமவர்கண்டீர் * மணியுருவங்காண்பார் மகிழ்ந்து. (௩௧)

மகிழ்ந்ததுசிந்தை திருமாலே * மற்றும் மகிழ்ந்தது உபாதமேபோற்றி *— மகிழ்ந்ததழலாழி சங்கம்

மாய்க்கொண்டு அடிக்கழிஞ்சுபெற்றுச் சொல்லுகிற 'ஸ்ரீ ஹூஷாதாவஜெநிஸா' என்கிறபடியே பெரும்- பெரியதொரு, புலரியென்று- நல்விடிவுண்டாவதேஎன்று சூசிரித்துக்கொண்டு, சூரா- சூரரினுடைய, நல்- அழகிதாய் விலக்ஷணமான, செழும்- செவ்வியையுடைத்தான, போது- பூவை, கொண்டு- ஸம்வாஜித்துக்கொண்டு, வராகம்- வராஹ ஸஜாதீயமாய், அணி- அழகுதாரொரு வடிவுகொண்டாப்போலே யிருக்கிற உருவன்- திவ்யவிக்ரஹத்தையுடையவன், பாதம்- திருவடிகளை பணியுமவர்கண்டீர்- ஹூநாஹிஸாநரா யாஶ்ரயிக்குமவர்கள் கிடீர், மணி- நீலரத்நம்போலே யிருண்டுகுளிர்ந்த, உருவம்- வடிவழகை, மகிழ்ந்து- உகந்து, காண்பார்- கண்டநுபவிக்சப் பெறுவர்கள். (௩௧)

## ❁ முப்பத்திரண்டாம்பாட்டு. ❁

அ—இப்படி உபதேசித்தவநந்தரம் தம்முடைய கரணங்கள் உபதேசநிரபேக்ஷமாக வங்கே ப்ரவணமானபடியை யருளிச்செய்கிறார்-

(திருமாலே) இச்சேர்த்தியழகாலே சுநாநுஸம்யித்திவர்களை மகிழப்பண்ணும் ஸ்ரீயஃபதியானவனே? (சிந்தை) ப்ரீதிதக்ஷம புதியதுண்டறியாத வென்நெஞ்சானது, (மகிழ்ந்தது) உன்னை யநுஸம்யித்து ப்ரீதியாக்ஷமாய்த்து 'நேஃவாவெருவாவாசா தாஃ' என்னும்படி (மற்று) சுநநரமெண்ணப்படும் என்வாமிந்த்ரியமாவது, (உன்) ஸ்ரீயஃபதியான உன்னுடைய, (பாதம்) திருவடிகளை, (போற்றி) எத்தி, (மகிழ்ந்தது) மகிழப்பெற்றது, (ஆகம்) என்ஹ்ருதயமானது, (அழல்) ப்ரதிபக்ஷத்தின்மேலே யழலையுமிழாநின்றுள்ள, (ஆழி) திருவாழி, (சங்கம்)

ரூ—இவைபாடியாடும் * தொழிலாகஞ் சூழ்ந்து துணிந்து. (௩௨)

துணிந்ததுசிந்தைதுழாயலங்கல் * அங்கமணிந்தவன்பேருள்ளத்துப்பல்கால் *— பணிந்ததுவும்வேய்பிறங்குசாரல் விரல்வேங்கடவனையே * வாய்திறங்கள்சொல்லும்வகை. (௩௩)

ஸ்ரீவானுஜநமாகிற, (இவை) இவற்றை, (பாடி) பாடி, (ஆடும்) ஆடுகையாகிற, (தொழில்) தொழிலிலே, (சூழ்ந்து) வ்யாவமாய்க்கொண்டு, (துணிந்து) அத்யவஸித்து, (மகிழ்ந்து) உகக்கப்பெற்றது. (௩௨)

❁ முப்பத்துமூன்றாம்பாட்டு. ❁

அ—கீழ் அநுஸந்தானத்தால்பிறந்த ஹர்ஷஞ் சொல்லிற்று, இதில் அவனையநுஸந்திக்கையாலே கரணங்களாக்காயங்கள் அத்யவஸித்தபடியை யருளிச்செய்கிறார்—

(துழாயலங்கல்) திருத்துழாய்மாலையாலே, (அணிந்தவன்) அலங்க்ருதனானவனுடைய, (பேர்) ஒப்பனையழகுக்கு வாசகமான திருநாமங்களை, (உள்ளத்து) ஹ்ருதயத்தில், (சிந்தை) மனோரூபமானது, (துணிந்தது) உத்தரோத்தரம் அநுஸந்திக்கவேணுமென்று அத்யவஸித்தது, இனி (அங்கம்) ஶரீரமானது, (பல்கால்) ஸர்வகாலமும், (பணிந்தது) வணங்குவது, (வேய்) மூங்கில்கள், (பிறங்கு) மிக்கிருந்துள்ள, (சாரல்) பர்வதத்தையுடைய திருமலையிலேவர்த்திக்கிற வழகாலே, (விறல்) நம்மையெழுதிக்கொள்ளும் மிடுக்கையுடைய, (வேங்கடவனை) திருவேங்கடமுடையானை, (வாய்) என்னுடைய வாகிந்த்ரியமானது, (திறங்கள்) அவனுடைய ஸ்வரூபகுணாதிகளான ஸ்வாவங்களை, (சொல்லும்வகை) சொல்லும் ப்ரகாரத்திலே, (துணிந்தது) அத்யவஸித்தது. (௩௩)

❁ முப்பத்துநாலாம்பாட்டு, ❁

அ—வைலக்ஷண்யமான விப்பெரியபேறுதான் தேவருடையகடாக்ஷத்தாலே பெற்றேனென்கிருர்—

மூ—வகையாலவனியிரந்தளந்தாய்பாதம் * புகையால்நறுமலரால் முன்னே *— மிகவாய்ந்தவன்பாக்கியேத்தி யடிமைபட்டேனு னக்கு * என்பாக்கியத்தா லினி. (௩௫)

இனிதென்பர்காம மதனிலுமாற்ற * வினிதென்பர்

வகையால்- வடிவழகு, ஔஜ்ஜ்வல்யம், ஔதார்யமான தி வ்யசேஷ்டிதம்துடக்கமான ப்ரகாரங்களாலே, முன்னே- ஆச்ரி தனனஇந்த்ரன் திருவடிகளிலேவந்து விழுந்த முற்காலத்திலே, அவனி- பூமியை, இரந்து- மஹாபலிபக்கலிலே ஸ்ரீயஃப தியானபெருமையை யழியமாறிச் சென்றயிரந்து, அளந்தாய்- அளந்துகொண்டாயான உன்னுடைய, பாதம்- திருவடிகளை, புகையால்- தூபத்தால், நறு- செவ்விய, மலரால்- பூமுதலான உபகரணங்களைக்கொண்டு, மிக- மிகவும், வாய்ந்த- செறிந்த, அன்பாக்கி- ப்ரேமத்தைபுடையனாய், ஏத்த- ஸ்தோத்ரமுகேன ஸ்தோத்ரம்பண்ணி, உனக்கு- வகுத்தசேஷியான தேவர்க்கு, இனி- இனிமேலுள்ளகாலம், என்- தேவரென்பக்கல் பண்ணின, பாக்கியத்தால்- விசேஷகடாக்ஷமாகிற ஸாமர்த்யத்தாலே, அடிமைப்பட்டேன்- அடிமைசெய்யுமவனாய் விட்டேன் என்னுடைய விலக்காமையாகிற ஸாமர்த்யத்தாலே யென்னுதல், மு ன்னே- ஸந்நிதியிலென்றுமாம். (௩௫)

❁ முப்பத்தஞ்சாம்பாட்டு. ❁

அ—இப்படி ஸர்வாநுகூலரும் பற்றுசாசத்தானே மேல்விழுந்து ஸமாச்ரயணீயனும் உன்னைவிட்டு வேதநர் ஸம்ஸாரி விஷயங்களிலே மண்டி க்லேசப்படுவதே! என்று வெறுக்கிறார்-

எந்தாய்- 'எல்லாங்கண்ணன்' என்கிறபடியே யாவகவெ ஷகஸௌஹ்ருத்களெல்லாம் நீயேயாப்படி என்னைப்புகரகிறுத்தின வென் ஸ்வாமியானவனே? காமம்- க்ஷுமாய் க்ஷயிஷ்ணுமாய் கமேஹா ஹ்யமான ஸம்ஸாரவிஷயங்களை ஸௌஹ்ருத்களாக ப்ரதித்து, இ னிது- இவையினிதாயிருந்தென்று, என்பர்- விஷயாநுபவ த்துக்குச் ருசிசெய்திருக்கும் நாட்டார் சொல்லாநின்றார்கள், விரக்தரோடு அவிரக்தரோடு வாசியற ஸமஸ்தரும் விரும்பும்படி

மூ—தண்ணீரு மென்றாய் *— இனிதென்று காமாநீர் வேளாது
நின்பெருமை வேட்பரேல் * சேம நீராகுஞ் சிறிது. (௩௫)

சிறியார்பெருமைசிறிதின்கணெய்தும் *
அறியாரும்தாமறியாராவர் *— அறியாமை

யிருக்கையாலே, அதனிலும்- அந்த விஷயங்களைக்காட்டிலும், ஆற்ற- மிகவும், இனிதென்பர்தண்ணீர்- இனிதென்று தண்ணீரைச் சொல்லாநின்றார்கள், காமம்- விவேகிகள் ஹேயமாகவே அறுதியிட்டிருக்கிற விஷயங்களையும், நீர்- தண்ணீரையும், இனிதென்று- ஸ்வதஸ்ஸித்த த்ருஷ்ணையாலே போக்யமென்று பாவிபண்ணி, வேளாது- அவற்றை மேல்விழுந்தாசைப்படாதே, நின்- ஸகலகல்யாணகுணாத்மகனாய் நிரதிசயபோக்யபூதனான உன்னுடைய, பெருமை- போக்யதாப்ரகர்ஷத்தை, சிறிது- ஏகதேசம், வேட்பரேல்- ஆசைப்படுவார்களாமாகில், அது- சேமம்- ஸர்வதேசத்திலும் ரக்ஷகமான, நீராகும்- ஸ்வபாவத்தையுடைத்தாகாநிற்கும். (௩௫)

## ❁ முப்பத்தாறும்பாட்டு. ❁

அ—நாட்டார் செய்தபடிசெய்கிறார்கள், நெஞ்சே? நீ முந்துறமுன்னமவனுடைய வ்யாபாரங்களை யநுஸந்தித்துக்கொண்டு ஸாவதானமே யிருக்கப்பார்? என்கிறார்-

சிறியார்- ஸ்வத:உத்கர்ஷஸம்பந்தமின்றிக்கே அதிக்ஷுத்ரராயிருக்கிற ஸம்ஸாரிகளுடைய, பெருமை- 'தாஸோஹம்' என்றிருக்கும் ஜ்ஞாநத்தாலேவந்த பெருமையானது, சிறிதின்கண்- ஸ்வத:ப்ராப்தமான பழையக்ஷுத்ரதசையிலே, எய்தும்- சென்றுபர்யவஸித்துவிடும், அறியாரும்- ஸ்வத:க்ருத்யாக்ருத்ய விவேகம்பண்ணக்ஷமரன்றிக்கே யிருக்கிற வறிவுகேடரானவர்களும், தாம்- தங்கள்நினைவாலே ஸர்வஜ்ஞராக அபிமானித்திருந்தார்களாகிலும், அறியாராவர்- பழையவறிவுகேட்டையுடையராயே விடுவார்கள், என்னெஞ்சே- நானவன்படிகளைச் சொன்னாலறிகைக்குப் பாங்கான ஶோபநமநஸ்ஸே? நீயறிவுகேடரான நாட்டார்படியைக் கைவிட்டு, அறியாமை-

மூ—மண்கொண்டு மண்ணுண்டு மிழ்ந்தமாயனென்று * எண்கொண் டென்னெஞ்சே? யிரு. (௩௬)

இருந்தண்கமலத்திருமலரினுள்ளே * திருந்துதிசைமுகனைத்தந்தாய் *— பொருந்தியநின்பாதங்களேத்திப் பணியாவேல் பல்பிறப்பும் * ஏதங்களெல்லா மெமக்கு. (௩௭)

ஸ்ரீயஃபதியிப்படி இரப்பாளனாய் வந்தானென் றொருவருமறியாதபடிபடி, மண்- ஸஂஹதியை, கொண்டு- இரந்தளந்துகொண்டு, ப்ரளயத்திலழியாதபடி, மண்- அந்தஸஂஹதியை, உண்டு- திருவயிற்றிலே வைத்துநோக்கி, சுநஞாநம் மண்- உள்ளுக்கிடந்துதளாரதபடி யந்தஸஂஹதியை, உமிழ்ந்த- வெளிநாடுகாணப்புறப்படவிட்டவனாய், இவ்வளவன்றிக்கே மாயனென்று- ஆஸ்ரித விஷயத்திற்பண்ணும் ரக்ஷணத்துக்கெல்லை காணவொண்ணாத ஆஸ்சர்யசேஷ்டிதனுமாயிருப்பா னொருத்தனென்று, எண்கொண்டு- அநவரதசிந்தநம்பண்ணித்துக்கொண்டு, இரு- அவனைப்பற்றின நமக்குஇனி ஒருகுறைபுண்டோவென்று நிர்ப்பயமாயிரு. (௩௬)

❀ முப்பத்தேழாம்பாட்டு. ❀

அ—இப்படிப்பட்ட ஸர்வேஸ்வரனை ஆஸ்ரயியாத ஜநங்களெல்லாம் வ்யர்த்தமென்கிறார்—

இரும்- பரந்து, தண்- குளிர்ந்த, கமலத்து- திருநாபீகமலத்தினுடைய, இரு- விஸ்தீர்ணமான, மலரினுள்ளே- பூவினுள்ளே, திருந்து- மறுத்துக் கேள்விகொள்ளாதே சொன்ன கட்டளையிலே ஜகத்தைஸ்ருஷ்டிக்கைக்கு ஸமர்த்தரான, திசைமுகனை- சதுர்முகனை, தந்தாய்- ஸ்ருஷ்டிப்ரயோஜநமெனக்கேபாம்படி உபகரித்தருளினவனே, பொருந்திய- ஸௌசீல்யகுணத்தைக்கொண்டு எல்லாரோடும் பொருந்தியிருக்கிற, நின்- உன்னுடைய, பாதங்கள்- திருவடிகளை, ஏத்தி- வாயாறவேத்தி, பணியாவேல்- தலையாறவணங்கி யாஸ்ரயிக்கைக்குறுப்பல்லவாமாகில், எமக்கு- எங்களுக்கு, பல்பிறப்பும்- தேவாதிநாநாரூபமாக மேலேமேலே யுண்டாய்ச் சொல்லுகிற ஜந்மங்களடங்கலும், ஏதங்கள்- வ்யர்த்தங்கள், ஜந்மத்துக்கு

மூ—எமக்கென்றிருநிதியமேமாந்திராதே* தமக்கென்றுஞ்சார்வ மறிந்து *— நமக்கென்றும்மாதவனேயென்னும்மனம்படைத்து* மற்றவன்பேரோதுவதே நாவினாலோத்து. (௩அ)

வுயொஜநம்- உன்னையாஶ்ரயிக்கையிறே; அதுக்குறுப்பல்லாத போது அவையடங்க நிஷ்யொஜநமென்கை. (௩எ)

❁ முப்பத்தெட்டாம்பாட்டு ❁

அ—சுநஃகரமான வஸ்துக்களை வாஸ்ஷாஸமென்றிராதே ஸ்ரீயஃபதியை நினைப்பது ஏத்துவதாய்க்கொண்டு ஆஶ்ரயிக்கையே ஸவக்கும் கதவ்யமென்கிறார்-

பிறரிடம்பார்த்தறிந்து விநியோகம் கொள்ளவேணுமென்றுகருதும்படி, இருநிதியும்- தனக்கும் பிறர்க்கும் பொதுவாயிருக்கிற உபாயநத்தை, எமக்கு- ஈவராஸமெநயாலே நமக்குவேணும், என்று- என்றபிமாநித்துக்கொண்டு, ஏமாந்து- 'நஸிஷ்டி' என்னும்விஷயத்தைப் பற்றினாப்போலே யறிவுகெட்டு, இராதே- நிஶ்சிந்தனாயிராதே, தமக்கு- தந்தாமுக்கு, என்றும்- அறிந்தபோதோடு அறியாதபோதோடு வாசியற ஸவகாலத்திலும், சார்வம்- நிருமான சுவாஶ்ரயமொன்று, அறிந்து- ஶாஸ்த்ரார்த்த ஸாதிகளாலே அறிந்து, நமக்கு- இனிநமக்கு, என்றும்- காலதத்வமுள்ளதனையும், மாதவனே- ஸ்ரீயஃபதியானவனே, என்றும்- ஆஶ்ரயணீயனும் ஶாப்யனுமென்று துணிந்திருக்கும், மனம்படைத்து- உநிஷ்டையுடையராய், மற்று- அதுக்குமேலே அவன்- அந்தஸ்ரீயஃபதியானவனுடைய, பேர்- அச்சேர்த்திக்கு வாசகமான திருநாமங்களை, ஓதுவதே- சொல்லுகையே; நாவினால்- வாகிந்த்ரியத்தால்; ஓத்து- உச்சரிக்கப்படும். (௩அ)

❁ முப்பத்தொன்பதாம்பாட்டு ❁

அ—நாவினாலோதுகையாவதுதான் ஏதென்ன? ஸகலவேதஸங்க்ரஹமான திருமந்த்ரத்தை உச்சரித்துக்கொண்டு வேதாந்தத்திற்சொல்லுகிற உபாஸநயாலே ஹ்ருதயகமலத்திலேநின்று ஆஶ்ரயியுங்கோளென்றும், அதுமாட்டாதார் உயத்திற்கட்டளையிலே ஸ்ரீயஃபதியானவன் திருநாமத்தைச்சொல்லி ஆஶ்ரயியுங்

மூ—ஓத்தின்பொருண்முடிவுமித்தனையே * உத்தமன்பேரேத்தும் திறமறிமினேழைகாள் * ஓத்ததனைவல்லீரேல்நன்றதனை மாட்டீரேல் * மாதவன்பேர்சொல்லுவதே யோத்தின்சுருக்கு. (௩௯)

கோளென்று மிரண்டுவகையாக ஆஶ்ரயணத்தை ஸுயிக்காநின்று கொண்ணம் விதிக்கிறார்—

ஏழைகாள்- வகுத்தவிஷயத்தை யிகழ்ந்து இதரவிஷயத்திலே ப்ரவணராய்த்திரிகிற அபலர்காள்? ஓத்து- ஸாங்கவேதாத்யயநம்பண்ணி, அதனை- அதிற்சொல்லுகிற அர்த்தங்களையுமறிந்து, வல்லீரேல் அறிந்தபடியே ஸாக்ஷாத்காரரூபமான பகவத்பக்தியைப் பேற்றுக்கு உபாயமாகவநுஷ்டிக்க வல்லிகோளாகில், உத்தமன்- ஸர்வவியாபகனாய் ஸர்வப்ரகாரியான புருஷோத்தமனுடைய, பேர்- ஸர்வரக்ஷகத்வாதியான அர்த்தங்களுக்கும் வாசகமான திருமந்த்ரமாகிற திருநாமத்தை, ஏத்தும்- செல்விஷோத்ரம்பண்ணும், திறம்- ப்ரகாரமான, இத்தனையே- இத்தனையே, ஓத்தின்- வேதத்திற்சொல்லுகிற, பொருள்- அர்த்தங்களெல்லாவற்றிலும், முடிவு- தாத்பர்யமாக நிர்ணயித்துத் தலைக்கட்டின அர்த்தம், நன்றதனை மாட்டீரேல்- இப்படி நன்றாக அத்தைவறியமாட்டிற்றிலிகோளாகில், மாதவன்- ஶ்ரியஃபதியினுடைய, பேர்- திருநாமத்தை, சொல்லுவதே- சொல்லுகையே, ஓத்தின்- அந்த வேதப்பரப்பெல்லாவற்றாலுங்கூட, சுருக்கு- ஸங்க்ஷேபித்துத் தலைக்கட்டி, இவ்வர்த்தம்- பகவத்ப்ரஸாதத்தாலே தெளியக்கண்ட நான்சொன்ன வார்த்தையாகையாலே, அறிமின்- இத்தைத்தப்பாதென்று விஶ்வஸித்து அறியுங்கோள், இத்தைச் சுருக்கென்கையாலே கீழ்ச்சொன்னது வேதத்திற்பரக்கச்சொன்ன பொருளென்று தோற்றுகிறது. (௩௯)

## ❁ நாற்பதாம்பாட்டு. ❁

அ—இப்படியானபின்பு ஸர்வவேதங்களுக்கும் தாத்பர்யபூதனான ஶ்ரியஃபதியை வார்த்தக்யாவஸ்தராவதற்குமுன்னே கடுக ஆஶ்ரயியுங்கோளென்கிறார்—

மூ—சுருக்காக்வாங்கிச்சுலாவிநின்று * ஐயார்நெருக்காமுன் நீர் நினைமின் கண்டீர் *— திருப்பொலிந்தவாகத்தான்பாதம்றிந்தும்* அறியாதபோகத்தா லில்லைபொருள். (௪௦)

பொருளாலமருலகம் புக்கியலலாகாது * அருளாலறமருளு

---

சுலாவிநின்று- ஸரீரமெங்குமொக்க வ்யாப்தித்தில் வ்யாவித்துநின்று, ஐயார்- ஶ்லேஷ்மாவானது, சுருக்காக- ஸரீரவிஶ்லேஷஸமயத்திலே கண்டஸ்தானத்தில்வந்து செறியத்தக்கதாகச்சுருங்க, வாங்கி- வலித்திழுத்துக்கொண்டு, நெருக்காமுன்- வாக்வ்யவஹாரயோக்யதை யில்லாதபடி மிடற்றையடைத்து மிறுக்குப்படுவதுக்கு முன்னே, திரு- பெரியபிராட்டியாராலே, பொலிந்த- ஸஶ்ரீகமாய் விளங்காநின்றுள்ள, ஆகத்தான்- திருமேனியையுடையனான ஸர்வேஶ்வரன், பாதம்- திருவடிகளை, நீர்- நீங்கள், நினைமின்கண்டீர்- அநுஸந்தித்துக்கொண்டு நில்லுங்கிடிகோள், அறிந்தும்- ஹேயவிஷயத்தை யறிந்துவைத்தும், அறியாத- அறியாதார் கணக்காம்படி பண்ணக்கடவ, போகத்தால்- ஸப்தாதிபோகங்களால் வரக்கடவ, பொருள்- ஒருப்ரயோஜநம், இல்லை- இல்லை, சுலாவிநின்றையார் சுருக்காகவாங்கி நெருக்காமுன் திருப்பொலிந்தவாகத்தான்பாதம் நீர் நினைமின்கண்டீ ரென்றந்வயம். (௪௦)

## நாற்பத்தோராம்பாட்டு.

அ—கீழ்பிறர்க்குத் தாமுபதேஶித்த வுபதேஶமவர்கள் திருந்துகைக்குடலன்றிக்கே தம் வைராக்யத்துக்குடலாய்த் தன்திருவுள்ளத்தைக்குறித்து ஶ்ரிய:பதியான ஸர்வேஶ்வரன்திருவடிகளை நீ முந்துறமுன்னம் மறவாதேகிடா? யென்கிறார்—

(பொருளால்) ஸ்வர்க்கஸாதநமாகையாலே மோக்ஷத்தோபாதி இதுவுமொரு புருஷார்த்தமன்றோவென்று புத்திபண்ணி (அமருலகம்) ஸ்வர்க்காதிலோகங்களிலே, (புக்கு) புக்கநுபவிக்கவேணுமென்று, (இயலலாகாது) அதுக்கீடாக யத்நிக்கலாகாது, அதுக்கடி (அருளான்) நிரவதிகக்ருபாவானான ஸர்வேஶ்வரன், (அறம்) ஸூக்ஷ்மமான ஸாதநாதிகளை, (அருளு

மூ—மன்றே*— அருளாலேமாமறையோர்க்கீந்த மணிவண்ணன் பாதமே * நீமறவேல் நெஞ்சே? நினை. (௪௧)
நினைப்பன் திரு

மன்றே) தந்தருளுமவனன்றோ, ஆனபின்பு (மாமறையோர்க்கு) ஸம்ஸாரஸாகரங்களில் விரக்தராய்த் தன்னைப்பெற்றநுபவிக்கவேணுமென்று இருக்கும் முமுக்ஷுக்களான வைதிகருக்கு, (அருளாலே) 'ஸர்வலோகைகஸரண்யஸ்ய' என்னும்படி தன்னுடையக்ருபையாலே, (ஈந்த) மோக்ஷத்தைக் கொடுத்தருளினவனாய், (மணி) அவர்களுக்கு அநுபாவ்யமாய் நீலரத்நம்போலே ஸ்ரமஹரமான, (வண்ணன்) வடிவையுடைய ஸர்வேஸ்வரனுடைய, (பாதம்) திருவடிகளையே, (நெஞ்சே) அறிவுக்குப் பிறப்பிடமான நெஞ்சே? (நீ) நீ (மறவேல்) மறவாதேகொள், (நினை) எப்போதும் நினைத்தபடியேயிரு, (அறமென்று) லக்ஷணையாலே தத்வத்தை நினைக்கிறது அன்றிக்கே அபூர்வத்தை ஸாதநமாக்கிக்கொண்டு, நித்யஸூரிகள் நிரந்தராநுபவப்பண்ணி வாழுகிற பரமபதத்திலேபோய்ப் புகவொண்ணாது ஸம்ஸாரவஸ்துக்க ளிரண்டும் தன்க்ருபையாலே கொடுக்கும் ஸர்வேஸ்வரனை மறவாதேகொள்ளென்றுமாம், இப்போதிவ்வுடம்போடே யவனைமறவாதே ய நுபவிக்கப்பெறில் பரமபதம் அநபேக்ஷிதமென்று கருத்து, அன்றிக்கே மாமறையோர்க்சென்று ஸ்ரீஉலகாரணத்தில் ஜைஷிகளையாய் அவர்களுக்கு 'உருஸம்விஸ்மிதாஃ' என்னும்படி தன் விக்ரஹத்தை அநுபவிப்பித்தவனென்றுமாம், மாமறையோர்கென்றுரகரவொற்றுனபோது ஸாந்தீபநியனுக்கு நித்யங்கொடுத்தபடியைச் சொல்லுகிறது. (௪௧)

❀ நாற்பத்திரண்டாம்பாட்டு. ❀

அ—புறம்புள்ள ஸம்ஸாரஸாகரங்களைத்துறந்து அவனை யநுஸந்திக்குமவர்களிறே! ஜந்துங்களில் வ்யவஸியாதாரென்கிறார்-

(திரு) இவ்வாத்மாவுக்கு ஹியஹிதங்கள் தானுமவனுமாய்க்கொண்டு நடத்திக்கொண்டுபோரும் பெரியபிராட்டியாரோடு

மூ—மாலை நீண்டதோள்காண * நினைப்பார் பிறப்பொன்றும் (பிறப்பொன்றும்) நேரார்*— மனைப்பாற்பிறந்தார் பிறந்தெய்தும் பேரின்பமெல்லாம் * துறந்தார்தொழுதாரத்தோள். (சஉ)

தோளிரண்டெட்டேழும்மூன்றுமுடியனைத்தும் * தாளிரண்டும்

கூடிக்கொண்டிருக்கும், (மாலை) வ்யாமோஹனை, (நீண்ட) அவளோட்டைக் கலவியாலே யளவிறந்த ஹாம்யதையையுடைத்தான. (தோள்) திருத்தோள்களை, (காண) கண்டநுபவிக்கைக்காக, (நினைப்பன்) நினையாநின்றேன், (நினைப்பார்) இப்படிநினைக்குமவர்கள், (ஒன்று) இவ்வநுபவத்துக்கிடைச்சுவரானதொரு, (பிறப்பும்) ஜந்மத்தையும், (நேரார்) கிட்டார்கள், (அ) அந்த, (தோள்) அழகியதோளை, (தொழுதார்) தொழுவார்கள், (மனைப்பால்) ஓரோமனையிடத்து, (பிறந்தார்) பிறந்தவர்கள், (பிறந்து) பிறந்து, (எய்தும்) ப்ராபிக்கும், (பேரின்பமெல்லாம்) நிரவயிகஸுகமெல்லாவற்றையும், (துறந்தார்) வரித்யஜித்தவர்களானவர்கள் கிடீர், தோளழகுதானே மற்றுள்ளவின்பங்களைத் துறக்கும்படி பண்ணுமென்கை, பேரின்பமெல்லாம் துறந்தவர்களிறே; அத்தோள்கள் தொழுவாராரென்னவுமாம். அன்றிக்கே ஒருஸ்த்ரீஸ்ரோதமே பற்றாசாக அவன் தானே தன்னைக்கொண்டுவந்து காட்டுமதொழிய ஆர்தானிவற்றைத்துறந்து அத்தோளைத் தொழுவாரென்னுமாம். 'பிறப்பொன்றும்நேரார்' என்றுவாபோனபோது எல்லாக்காலத்திலும் ஜந்மத்தைக்கிட்டார்களென்று பொருளாகக்கடவது. (சஉ)

❁ நாற்பத்துமூன்றாம்பாட்டு. ❁

அ—எனக்கவன்தோள் தொழவேண்டா தொழுவார் தொழவமையும் அத்தோள்தொழுவார்தாளைத் தொழுமித்தனை நாமென்கிறார்-

(தோளிரண்டெட்டேழும்மூன்றும்) பிராட்டியைத் தனிச்சிறைவைத்து நலிந்த ராவணனுடைய இருபதுதோள்களும், (அனைத்துமுடியும்) அறுக்கவறுக்க முளைக்கையாலே ஒருஸங்க்யையிலடங்காத தலைகளும், (தாளிரண்டும்) இவையெல்லா

மூ—வீழச்சரந்துரந்தான் *— தாளிரண்டுமார்தொழுவார்பாதமவைதொழுவதன்றே * என்சீர்கெழுதோள்செய்யும்சிறப்பு (சங)

சிறந்தார்க்கெழுதுணையாஞ்செங்கண்மால்நாமம் * மறந்தாரைமானிடமாவையேன் *— அறம்

வற்றுக்கு ஆதாரமான கால்களிரண்டும், (வீழ) அறப்பண்ணும்படிக்கீடாக, (சரம்) திருயசரங்களை, (துறந்தான்) வெருசித்துநடத்தின பெருவீரனான வசுதேவத் திருமகனுடைய, (தாளிரண்டும்) திருவடிகளிரண்டையும், (தொழுவார்) தொழுமவர்களாய். (ஆர்) சுஹிதநஹெதுவல்லாத ஏதேனும் ஜந்துக்களை யுடையராயிருக்கும் ஹேவாஷர்களுடைய, (பாதமவை) வாஶ்ரயமாக வுணவுஸிமான வந்தத்திருவடிகளை, (தொழுவதன்றே) தொழுமதன்றோ, (என்) அவர்களில் வாவுதனனவென்னுடைய, (சீர்) தடீயரைத்தொழுமென்னும் பல்பெணக்குமழகு, (செழு) சேர்ந்த, (தோள்) தோள்களானவை, (செய்யும்) எனக்குச்செய்யும், (சிறப்பு) உபகாரம். (சங)

**நாற்பத்துநாலாம்பாட்டு.**

அ—இப்படி யசல்காக்கும்படி பண்ணவல்லவிஷயத்தை யாஶ்ரயியாதே மறந்திருக்குமவர்கள் வெதநரல்லர் கிடீரென்கிறார்-

(சிறந்தார்க்கு) 'ஜ்ஞாநீத்வாத்மைவமெமதம்' என்று தானுகக்கும்படி தன்றிருவுள்ளத்துக் கநுரூபமாக வாஶ்ரயித்திருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு, (எழு) ஸம்ஸாரஸம்பந்தமறுத்து ஜ்ஞாநவிகாஸத்தை யுடையராய் யுஜ்ஜீவிக்கைக்குப் போம், (துணையாம்) கவிராதிமார்க்கத்துக்கு ஆதிவாஹிகர் முன்னே, 'நயாமி' என்கிறபடியே துணையாமவனாய், (செம்) அவர்கள்விஷயத்தில் வாஸல்யத்தாலே குதறிச்சிவந்த, (கண்) திருக்கண்களையுடைய, (மால்) வ்யாமோஹனவனுடைய, (நாமம்) வாஸல்யாதிகுணங்களுக்கு வாசகமான திருநாமத்தை, (மறந்தாரை) விஸ்மரித்திருக்குமவர்களை, (மானிடமா) மாஹவஸ்யானமநுஷ்யஜந்மத்திலே பிறந்தவர்களாய், (வையேன்) என்மநஸ்ஸிலேநினைத்திரேன், (அறம்) ஆநுஶம்ஸ்யமாகிற வரமதர்மத்தை,

மூ—தாங்கும்மாதவனேயென்னும் மனம்படைத்து * மற்றவன் பேரோதுவதே நாவினாலுள்ளது. (சச)

உளதென்றிறுமாவார் உண்டில்லையென்று * தளர்தலதனருகுஞ் சாரார் *— அளவரியவேதத்தான் வேங்கடத்தான் விண்ணோர் முடிதோயும் * பாதத்தான் பாதம்பயின்று. (சரு)

(தாங்கும்) தரியாநிற்கும், (மாதவனே) ஶ்ரிய:பதியானவனே (என்றும்) என்றுச்சரிக்கும், (மனம்) பாஜநத்தை, (படைத்து) உண்டாக்கிக்கொண்டு, (மற்று) அதுக்குமேலே, (அவன்) அந்தஶ்ரிய:பதியானவனுக்கு, (பேர்) வாசகநாமமான ஶப்தத்தை (நாவினால்) நாவாலே, (ஓதுவது) சொல்லுகையிலே, (உள்ளது) உஜ்ஜீவநமாயி, உநதெல்ல ஸ்வீகரித்துக்கொள்ளுவது. கீழ் ஸாதநங்களை விரும்பினார், இதிலே ஸுஸாதநங்களை அநுஷ்டித்தார். (சச)

## நாற்பத்தைந்தாம்பாட்டு.

அ—இப்படி ஸமாஶ்ரயணம்பண்ணியிருக்குமவர்கள் ஐஹிகவிஷயங்களினுடைய லாபாலாபங்களால்வரும் ஹர்ஷஶோகங்களையுடையரல்லர்கிடீ ரென்கிறார்-

(அளவரிய) ஆர்க்குமளவிடவொண்ணாதபடி அபரிச்சிந்நமான, (வேதத்தான்) வேதங்களாலே ப்ரதிபாதிக்கப்படுமவனுமாய், (வேங்கடத்தான்) இப்படி ஓலைப்புறத்திலே கேட்டுப்போகையன்றிக்கே கண்ணாலே கண்டநுபவிக்கலாம்படி திருமலையிலேவந்து ஸந்நிஹிதனான ஸௌலப்யத்தையுடையனாய், (விண்ணோர்) பரமாகாஶத்திலே பழுத்திருக்கும் பரமபதவாஸிகளான நித்யஸூரிகள், அவன்நீர்மைக்குத்தோற்று (முடி) தங்கள்திருமுடியே திருவடிகளிலே மடுக்க, (தோயும்) அத்தாலே ஸ்பர்ஶிக்கப்பட்ட, (பாதத்தான்) திருவடிகளையுடையனான ஸர்வேஶ்வரனுடைய, (பாதம்) திருவடிகளை (பயின்று) இடைவிடாமற் செறிந்துவைத்து, ஜந்மஸித்தரைத் த்திரியச்செய்தே, * சருகிலேதிறம்வாய்ப்பாலே * நடுவேவந்த திரண்டப்ரயோஜநத்தைக்கண்டு, (உளதென்று) இதுநமக்குண்டாகப்

மூ—பயின்றதரங்கந்திருக்கோட்டி * பன்னாள்பயின்றதுவும்வே ங்கடமேபன்னாள் *— பயின்றதணிதிகழுஞ்சோலை யணிநீர்மலை யே * மணிதிகழும்வண்தடக்கைமால். (௪௬)

---

பெற்றதென்று, (இறுமாவார்) பிறர்க்கு ஸஹிக்கவொண்ணா தபடி கர்வோத்தராயிரார்கள், சிலநாள்குறைவற ஜீவித்தபின்பு (உண்டு) வெறுவிபரான அன்றங்ஙனே நமக்கிதுவுண்டாய்த்து, (இல்லையென்று) இன்றிங்ஙனே இல்லையாய்த்தென்று, (தளர்தல்) சோகித்துத் தறைப்படுகையாகிற, (அதனருகும்) அதனருகுங்கூட, (சாரார்) கிட்டார்கள். (௪௫)

❁ நாற்பத்தாறும்பாட்டு. ❁

அ—இப்படி தன்னை யாஶ்ரயித்தவர்கள் உதாரஸோமங்களின் ஸாஹாஸாஹங்களால்வரும் விகாரமற்றுத் தன்னைச்செறிந்தநுஸவிக்கையாகிற வின்னினைவு இவர்களுக்குண்டாம்படி பலதிருப்பதிகளிலு மவன்வருந்தி க்ருஷிபண்ணினபடியை யருளிச்செய்கிறார்-

(மணி) நீலமணிபோலே ஶ்லாக்யமாய், (திகழும்) ஒளிவிடுகிறவடிவையும், (வண்) அவ்வடிவை ஸம்ஸாரிகளுக்கு ஸர்வஸ்வதானம்பண்ணுகிற, (தடம்) சுற்றுடைத்தான, (கை) திருக்கைகளையுமுடையனான, (மால்) ஸர்வேஶ்வரன், (பயின்றது) சுவதாரங்கள் போலே தீர்த்தம்ப்ரஸாதியாதே நித்யவாஸம் பண்ணியருளிற்று, (அரங்கம்) கோயில், (திருக்கோட்டி) திருக்கோட்டியாகிற திருப்பதிகளிலே, (பன்னாள்) ஸர்வகாலம், (பயின்றதுவும்) செறிந்துவர்த்தித்ததுவும், (வேங்கடமே) திருமலையிலே, இப்படியே (பன்னாள்) ஸர்வகாலம், (பயின்றதுவும்) நெருங்கிவர்த்தித்ததுவும், (அணி) அழகு, (திகழும்) விளங்காநின்றுள்ள, (சோலை) சோலைகளையுடைத்தாய், (அணி) ஸம்ஸாரத்துக் காபரணமான, (நீர்மலையே) திருநீர்மலையிலே. இப்படியே க்ருதார்த்தமாக அவன்விரும்பிவர்த்திக்கிற திருப்பதிகளுக்கோரெல்லையில்லை கிடீரென்கை. (௪௬)

மூ—மாலையரியுருவன்பாதமலரணிந்து * காலைதொழுதெழுமின்
கைகோலி* ஞாலமளந்திடந்துண்டுமிழ்ந்த வண்ணலைமற்றல்லால்*
உளங்கிடந்தவாற்றாலுணர்ந்து. (௪௭)

## நாற்பத்தேழாம்பாட்டு.

அ—அவன் இப்படி யுங்களைப்பெறுகைக்காகப் பலதிருப்பதிகளிலும் புகுந்து செறிந்து க்ருஷிபண்ணும் ஸ்வாமியானபின்பு எல்லாரும் க்ருதஜ்ஞராயவனை யாச்ரயியுங்கோளென்கிறார்.

(ஞாலம்) பூமிப்பரப்படங்கலும், (அளந்து) ஸுநாயாஸேநவளந்து, (இடந்து) அழிந்ததசையிலே யிடந்தெடுத்து (உண்டு) அழிவதற்குமுன்னே திருவயிற்றிலே வைத்துநோக்கி (உமிழ்ந்த) பின்பு வெளிநாடுகாணப்புறப்பட வுமிழ்ந்து, இப்படி ஜகத்தை ஸ்வபாவமாக ரக்ஷித்தவனாய் இவ்விவசெயல்களாலே, (அண்ணலை) தானே ஸர்வஸ்வாமியென்று தோற்றவிருக்கிறவனை, (அல்லால்) இப்படி பொதுவாகப்பண்ணும் வ்யாபாரங்களொழிய, (மற்று) மற்றும் ஆச்ரிதவிஷயமாகச் செய்தவையாய், அவர்கள் இதொருநீர்மையே; யென்று நெஞ்சுளுக்கும்படி, (உளம்) ஹ்ருதயத்தை, (கிடந்த) பற்றிக்கிடக்கிற, (ஆற்றால்) ப்ராணவேஷ்டிதவ்யாபாரங்களோடே கூட, (உணர்ந்து) அறிந்தநுஸந்தித்துக்கொண்டு, (அரியுருவன்) ஆச்ரிதனுக்காகத் தன்னை யழியமாறிக்கொண்ட நரஸிம்ஹவேஷத்தையுடையனவனுடைய, (பாதமலர்) திருவடித்தாமரைகளிலே, (மாலை) செவ்விமாலைகளை, (அணிந்து) அழகுபெறச்சாத்தி, (காலை) ஸத்வோத்தரமான ப்ராஹ்மமுஹூர்த்தத்திலே, (கை) கையை (கோலி) கூப்பிக்கொண்டு, (தொழுது) ஆச்ரயித்து, (எழுமின்) உஜ்ஜீவியுங்கள். (௪௭)

## நாற்பத்தெட்டாம்பாட்டு.

அ—'உளங்கிடந்தவாற்றால்' என்று ஆச்ரிதருக்கு மறக்கவொண்ணாதபடியான நான்செய்த செயல்தானேதென்ன அதுக்கோரெல்லையில்லையென்கிறார்.

பா—உணர்ந்தாய்மறைநான்குமோதினாய்நீதி * மணந்தாய்மலர்மகள்தோள்மாலே *— மணந்தாய்போய்வேயிருஞ்சாரல் வியலிருஞாலம்சூழ் * மாயிருஞ்சோலை மலை. (சஅ)

(மறைநான்கும்) ஸ்ருஷ்டிவேளையிலே ஸம்கோசித்து ஸம்ஹாரகாலத்திலே கிடந்த நாலுவேதங்களையும், (உணர்ந்தாய்) ஸர்வஜ்ஞ ந்யாயத்தாலே வேதவாக்யங்களை விடாதபடி உணர்ந்தருளிச்செய்தாய், (நீதி) அந்தவேதார்த்தங்களை ஸம்ஶயவிபர்யயமற நயிப்பித்து விஶதீகரிக்கக் கடவ ஸ்ம்ருதீதிஹாஸபுராணங்களை, (ஓதினாய்) ருஷிகளான முனிவரை யுண்டாக்கிநின்றருளிச்செய்தாய், அந்த வேதங்களுக்கும் உபப்ரும்ஹணங்களுக்கும் ப்ரதிபாத்யனான தேவனாய், (மலர்மகள்) தாமரைப்பூவை இருப்பிடமாக வுடையவளான பெரியபிராட்டியாருடைய, (தோள்) திருத்தோளோடே (மணந்தாய்) 'ஸ்ரீயாஸார்த்தம் - ஜகத்பதி' என்னும்படி ஒருதேஶவிஶேஷத்திலே நித்யஸம்ஶ்லேஷம்பண்ணிக்கொண்டெழுந்தருளியிருந்தாய், (மாலே) அவள்பக்கலிலே பெரும்பிச்சனானவனே, ஓலைப்புறத்திலே கேட்டுப்போம்படி யெட்டாதநிலத்திலேயவளோடேகலந்து வர்த்திக்கிறவளன்றிக்கே ஸம்ஸாரிகளோடேகலந்து பரிமாறும்படி, (வேய்) மூங்கில்கள், (இரும்) நிறைந்த, (சாரல்) பர்வதபார்ஶ்வங்களையுடைத்தான, (வியல்) விஸ்மயநீயமாய், (இரு) பரப்புடைத்தான, (ஞாலம்) ஸம்ஸாரியிலுள்ளவர்களாலே, (சூழ்) சூழ்ந்தாஶ்ரயிக்கப்படுமதாய், (மா) உயர்ந்து, (இரும்) பரந்த, (சோலை) சோலைகளையுடைத்தான, (மலை) திருமலையை, (போய்) உகப்புடனேபோய், (மணந்தாய்) கலந்தாய். (சஅ)

## ❁ நாற்பத்தொன்பதாம்பாட்டு. ❁

அ—நெஞ்சே? அவன் இப்படி திருமலையிலே ஸந்நிஹிதனான பின்பு நமக்கொரு ப்ரதிபந்தகமுண்டென்றஞ்சாதே ஜமத்தடங்கலும் அதிரும்படி யவனைச்சொல்லிக் கூப்பிடுகிறார்—

மூ—மலைபேழும் மாநிலங்களேழுமதிரக் * குலைசூழ்குரைகடல்க ளேழும் *— முலைசூழ்ந்தநஞ்சுரத்துப்பெண்ணை நவின்றுண்டநாவ னென்று * அஞ்சாதென்னெஞ்சே? யழை. (சகூ)

அழைப்பன்திருமாலை யாங்கவர்கள்

மலையேழும்- ஸப்தகுலாசலங்களான ஸப்தபர்வதங்களும், மா- பரப்பையுடைத்தான, நிலங்களேழும்- ஸப்தத்வீபங்களும், குலை- கரையாலே, சூழ்- சூழப்பட்டு, அத்தை அதிக்ரமியாதே யதுக்குள்ளேகிடந்து, குரை- வொலிக்கிற, கடல்களேழும்- ஸப்தஸமுத்ரங்களும், அதிர- அதிரும்படி, முலை- முலையிலே, சூழ்ந்த- எங்கும்வ்யாபித்த, நெஞ்சு- விஷத்தாலுண்டான, உரத்து- மிடுக்கையுடைய, பெண்ணை- பேய்ப்பெண்ணை, முலைதந்த- ஸ்தந்யம்கொடுத்தோற்ற, நவின்று- நடுநடுவே சில ப்ரியஜல்பிதங்களைச் சொல்லிக்கொண்டு, உண்ட- முலையுண்டுமுடித்த, நாவனென்று- நாவையுடையவனென்று, என்- எனக்குவிதேயமான, நெஞ்சே- நெஞ்சே? அஞ்சாது- வ்யதிரேகத்தை நினைத் தஞ்சாதே, அழை- வாய்விட்டுக் கூப்பிடு. (சகூ)

## ஐம்பதாம்பாட்டு.

அ—இப்படி நெஞ்சைக்கூப்பிடச்சொல்லி நியமித்தவர் க்ருஷ்ணம் திருவாய்ப்பாடியிற் பெண்கள் அவன்திருநாமங்களை வ்யாமோஹத்தால்வந்த தளர்த்திதோற்றச் சொல்லுமாப்போலே நெஞ்சுக்குமுன்னே தாம் முற்பட்டுக்கூப்பிடுகிறார்-

இழைப்பரிய- ஆர்க்கும் ஸ்வயத்நத்தால் நினைக்கவரியனாய், ஆயவனேயென்றும்- பெண்பிறந்தாரைப் புண்படுத்து மிடையனானவனே யென்றும், யாதவனேயென்றும்- யதுகுலத்திலே ஸ்ரீவஸுதேவர் திருமகனாய்ப் பிறந்தவனே யென்றும், மாயவனேயென்றும்- ஆச்சர்யசேஷ்டிதங்களை யுடையவனேயென்றும், மதித்து- பஹுமானம்பண்ணிக்கொண்டு, (ஆங்கு) 'நெஞ்சுரத்து ப்பெண்ணைநவின்றுண்டநாவன்' என்று வ்யாமோஹமான வந்தத் திருவாய்ப்பாடியிலுள்ள, அவர்கள்- இடைப்பெண்களானவர்கள்

மூ—சொன்ன * பிழைப்பில் பெரும் பெயரேபேசி *—
இழைப்பரிய வாயவனேயாதவனே யென்றவனையார் முகப்பும்*
மாயவனேயென்று மதித்து. (ரு௦)

மதிக்கண்டாய்நெஞ்சேமணிவண்ணன்பாதம்*
மதிக்கண்டாய்மற்றவன்பேர்தன்னை *—
மதிக்கண்டாய்பேராழிநின்று பெயர்ந்துகடல்

சொன்ன- சொன்னதாய், பிழைப்பில்- உள்ளீடான ஜ்ஞாந வெஷிக்ஷ ஸாரஸ்யத்தாலே யநுஸந்தித்தார்க்குப் பிழைக்கவொண்ணாதபடி யிருப்பதாய், பெரும்- இரண்டுமூன்றக்ஷர மாயிருக்கச்செய்தே தளர்த்தியின் வசநத்தாலே சொல்லிமுடிக்கவொண்ணாத பெருமையையுடைத்தான, பெயர்- திருநாமங்களை, பேசி- சொல்லி, யார்முகப்பும்- உகப்பாரோடு உகப்பாதாரோடு வாசியற வெல்லார்முன்பும், திருமால்- ஸ்ரிய:பதியான, அவனை- அந்தஸர்வேஶ்வரனை, அழைப்பன்- அவர்களுக்கிரங்கினைப்போலே நம்பக்கலிலு மிரங்கக்கூடுமென்று கூப்பிடாநின்றேன். (ரு௦)

❁ ஐம்பத்தோராம்பாட்டு. ❁

அ—இப்படி அவன்திருநாமத்தைச்சொல்லுகைக்குத் தம்மீடுபாட்டை யநுஸந்தித்தவர் நெஞ்சே நீ முந்துறமுன்ன மென்னைப்போலே கலங்கித்தளராதே யவன் ஸௌந்தர்யாதிகளைத் தனித்தனியே யநித்துநின்று அநுஸந்திக்கப்பாரென்கிறார்—

(நெஞ்சே) நெஞ்சே, (மணி) நீலமணிபோலே இருண்டு குளிர்ந்த, (வண்ணன்) வடிவையுடையவன், (பாதம்) திருவடிகளை, (மதிக்கண்டாய்) அநுஸந்திபண்ணுகிடாய், (மற்று) அதுக்குமேலே, (அவன்) அந்தஸர்வேஶ்வரனுடைய, (பேர்தன்னை) அவ்வடிவழகுக்கு வாசகமான திருநாமங்களை, (மதிக்கண்டாய்) அநுஸந்திபண்ணுகிடாய், (பேர்) தன்படுக்கையான பெரிய, (ஆழிநின்று) திருப்பாற்கடலிலே நின்றும், (பெயர்ந்து) பெயர்ந்தெழுந்திருந்துநின்று, ப்ரயோஜநாந்தரபரர்க்கு அபேக்ஷிதஸம்விதாநம் பண்ணுகைக்காக, (கடல்) அந்தக்கடலை,

மூ—கடைந்த * நீராழிவண்ணன் னிறம். (௫௧)

நிறங்கரியன்செய்யநெடுமலராளமார்வன் *
அறம்பெரியனார்தறிவார் *—
மறம்புரிந்தவாளரக்கன்போல்வானை வானவர்கோன்தானத்து*

(கடைந்த) கடைந்தவனை, அப்போது ஒருவெண்கடலைக் கருங்கடல் கடைந்தாப்போலே ஸூக்ஷ்மமாய்த் தோற்றுகிற, (நீர்) நிறைந்தநீரையுடைய, (ஆழி) கடல்போன்ற (வண்ணண்) வடிவையுடையவன், (நிறம்) திருநிறத்தை, தேவர்களைப் போலே உப்புச்சாற்றைநச்சாதே, (மதிக்கண்டாய்) ஸாபிபண்ணிஅநுஸவிக்கப்பார் கிடாய். (௫௧)

## ஐம்பத்திரண்டாம்பாட்டு.

அ—திருவுள்ளத்துக் குவிதேஷிக்கவல்லரான தம்மைக் கலங்கப் பண்ணின ஸ்ரீயஃபதியுடைய வடிவழகையும் பிராட்டிஸம்ஸயத்தால்வந்த மிக்கஸெளசீல்யத்தையு மநுஸந்தித்து இதுஒருவருக்கும் நிலமல்லகிடீரென்கிறார்-

ஸூரிகளுடைய ஸக்ஷ்சதாவங்களும் போப்படி (நிறங்கரியன்) ஸ்ரீஹரமான கறுத்தநிறத்தையுடையனாய், (செய்ய) அந்நிறத்துக்கு ஸஹமான சிவந்தநிறத்தை யுடையளாய் (நெடு) பெரிய, (மலராள்) தாமரைப்பூவை யிருப்பிடமாகவுடையளான பெரியபிராட்டியாரை, (மார்வன்) திருமார்விலேயுடையனாய், (அறம்பெரியன்) அவளோட்டைத் தோயல்வாசியாலே ஸௌசீல்யம் மிக்கிருப்பானாய், (மறம்) திருவினைப்பிரிக்கையாகிற க்ரூரமானசெயலை, (புரிந்த) செய்த, (வாள்) ஸாயுதனான, (அரக்கன்போல்வானை) ராவணனோடொத்திருந்துள்ள ஹிரண்யனை அழியச்செய்யாமல், ஔதார்யம்ப்ரணம் பற்றுசாக ராஜ்யஸ்ரீபெண்ணினவ னிழக்கியது என்னென்று தன்னுடைய ஸௌசீல்யத்தாலே, (வானவர்) தேவர்களுக்கு (கோன்) நிர்வாஹகனான இந்த்ரனுடைய, (தானத்து) ஸ்வர்க்கம்போலே விலக்ஷணமாயிருக்கிற, பாதாளலோகத்திலே அவனைப்போலே பறிகொடுத்துக் கண்பிசையவேண்டாதபடி, (நீனி

மூ—நீளிருக்கைக் குய்த்தான்னெறி, (ருஉ)

நெறியார்குழல்கற்றைமுன்னின்றுபின்தாழ்ந்து* அறியாதிள ங்கிரியென்றெண்ணி *— பிரியாதுபூங்கொடிக்கள்வைகும்பொரு புனல்க்குன்றென்னும் * வேங்கடமேயாம்விரும்பும் வெற்பு (ருந)

ருக்கைக்கு) நெடுங்காலமிருக்கைக்கு, (உய்த்தான்) பண்ணிக் கொடுத்த ஸர்வேச்வரனுடைய, (அது) அந்த, (நெறி) ஸ்வா உபகாரத்தை, (ஆர்) ஆர்தான், (அறிவார்) அறிவார், ஒருவரு மறியப்போகாதென்றுகருத்து. (ருஉ)

❁ ஐம்பத்துமூன்றாம்பாட்டு. ❁

அ—இப்படி ஸ்வாவதாரங்களளவிலும் ஸந்நிஹிதனான ஸர்வேச்வரனுக்கும் கண்ணாலேகாணலாம்படி வந்து நித்ய வாஸம்பண்ணுகிற திருமலைகிடீர் நாங்களாதரிப்பதென்கிறார்—

(நெறியார்) திருமலையாழ்வாரே உபேயமாக வநுஸந்தி யித்து மற்றொன்றறியாதே வழிபட நெடுங்கால மாச்ரயிக்கிறவர் களுடைய, (குழற்கற்றை) குழற்கற்றையிலே, (முன்நின்று) முன்னேமுளைத்து, (பின்) பின்னாளவும்வரவளர்ந்து, (தாழ்ந்து) தாழவிழுந்து, மூச்சுவிடுதல் உடம்பசைத்தல் செய்யாதே யிருக்கிற விருப்பைக்கொண்டு, (அறியாது) சிலவேதநரென்ற றியாதே, (இளங் கிரியென்று) சிறுமலைகளாயிருக்கு மென்று, (எண்ணி) வ்யாஸிபண்ணி, (பிரியாது) அவ்விடத்தைவிட்டுநீங்கா தே, (பூ) கண்டவிடமெங்கும் பரந்துபூத்த, (கொடிக்கள்) கொடிகளானவை, (வைகும்) நித்யவாஸம்பண்ணும் ஸ்தலமாய், (பொரு) தன்னிற்றான் திரைபொராநின்றுள்ள, (புனல்) ஜலஸ ம்ருத்தியையுடைத்தாய், (என்னும்) ஸுப்ரஸித்தமான, (வேங்கட க்குன்றே) திருமலையே, (யாம்) நாங்கள், (விரும்பும்) ப்ராப்ய மாகப்பற்றியிருக்கும், (வெற்பு) மலை. (ருந)

❁ ஐம்பத்துநாலாம்பாட்டு. ❁

அ—இப்படி தாம் அவனுகந்துவர்த்திக்கும் திருமலையளவும் வி ரும்புகையாலே இவனும் தானுகந்துவர்த்திக்கிற விண்டுதிரும லைகளிற்பண்ணும் விருப்பத்தைத் தன்திருவுள்ள மொன்னிலும்

மூ—வெற்பென்றிருஞ்சோலை வேங்கடமென்றிவ்விரண்டும் * நிற்பென்றுநீமதிக்கும்நீர்மைபோல்:— நிற்பென்றுளங்கோயிலுள்ளம் வைத்துள்ளினேன் * வெள்ளத்திளங்கோயில்கைவிடேலென்று.

என்றுமறந்தறியே னேழ்பிறப்புமெப்பொழுதும் * நின்று நினைப்பொழியாநீர்மைபால் *— வென்றியடலாழிகொண்ட

---

பண்ணிக்கொண்டு மேலேவிழுகிறபடியை யருளிச்செய்கிறார்-

சோலையென்னும்- திருமாலிருஞ்சோலை மலையென்றும், வேங்கடமென்றும்- வேங்கடமென்னும் திருநாமத்தையுடைத்தான, இரும்வெற்பென்று- பெரியதிருமலையென்று சொல்லப்படுகிற, இவ்விரண்டும்- இவ்விரண்டுஸ்தாநமும், நிற்பென்று- நாமுகந்துவர்த்திக்கிற வாஸஸ்தாநமென்று, நீ- நீ, மதிக்கும்- ஸங்கல்பிண்ணியாதரிக்கும், நீர்மைபோல் ஸ்வபாவம்போலே, உளம்- என்னுடையஹ்ருதயமென்கிற, கோயில்- வாஸஸ்தாநமும், நிற்பென்று- நீயுகந்து நித்யவாஸம்பண்ணும் ஸ்தாநமென்று, உள்ளம்வைத்து- ஸங்கல்பண்ணி, என்னுடைய ஹ்ருதயத்தில் பண்ணுகிற ஸந்நிவேசாதிசய மிருந்தபடியா லவ்வவதிருமலைகளிலே நிலைநிற்கும்படியு மென்ஹ்ருதயம் திருந்துமளவும் வாஸஸ்தாநமாகக் கற்பித்ததான, வெள்ளம்- திருப்பாற்கடலாகிற, இளங்கோயில்- பாலாலயத்தையும் விடத்தேடுகிறுயோ? வென்றுநினைத்து, என்பக்கல்வருகைக்கு க்ருஷிபண்ணின அவ்விடத்தை க்ருதஜ்ஞதைதோற்றவு மென்னுகப்பைப்பற்றவும், கைவிடேலென்று- பிரானே கைவிடாதொழியவேணுமென்று, உள்ளினேன்- ப்ரார்த்தித்தேன். (ருச)

❁ ஐம்பத்தைந்தாம்பாட்டு. ❁

அ—இப்படி தேவரென்பக்கல் விருப்பத்தைப்பண்ணுகையாலே ஜ்ஞாநஸாஹத்தாற் குறைவற்றேன், தத்ஸமான ப்ராப்தியால்வரு மநோஹவத்தையும் தேவர்தாமே பண்ணித் தந்தருளவேணுமென்கிறார்—

வென்றி- ப்ரபலப்ரதிபக்ஷங்களை ஸநாயாஸேந போக்குகையால்வரும் வெற்றிபெற்றுடையனுப், அடல்- யுத்தஸாமர்த்யனை, ஆழி- திருவாழியை, கொண்ட- விரோதி

மூ—வறிவனை * இன்பக்கடலாழிநீயருளிக்காண். (௫௫)

காணக்கழிகாதல் கைமிக்குக்காட்டினால் * நாணப்படும்

---

நிரவதிகவமெயாலே எப்போதுங்கையிலே கொண்டிருக்குமவனைப் ஸஜ்ஞாநாஶக்திகளுக்குக் கொள்கலமான வென்னாலுன்னைப் பெறவொண்ணாது ஜ்ஞாநஶக்திகளாற் குறைவற்றவுன்னாலே வுன்னைப் பெறவேணுமென்னுமிடத்தை, அறிவனை- பத்தும்பத்தாக வறிந்திருக்கும் ஸர்வஜ்ஞனானவனே, நீ- இப்படியிருக்கிற நீ, ஏழுபிறப்பும்- எல்லாஜந்மங்களிலும், எப்பொழுதும்- எல்லாவவஸ்தைகளிலும், நின்று- எதிர்சூழல்புக்கு, நினைப்பு- இவன்நம்மை மறவாமற்பெற்றிடுவானுக்கென்று நினைக்கும் நினைவு, ஒழியா- ஒருநாளும் மாறாதேபோருகிற, நீர்மையால்- ஸௌஹார்த்தாலே, என்றும்- ஸர்வகாலத்திலும், மறந்தறியேன்- தேவரைமறந்தறியேன், இப்படி நீ- பேற்றுக்குறுப்பான ஜ்ஞாநத்திற் கண்ணழிவறுத்துத் தந்த நீ, ஜ்ஞாநஃலமாக ஒருதேஶவிஶேஷத்திலேபோந்து பரிபூர்ணமாக வுன்னை யநுபவித்துவிளையக்கடவ, இன்பக்கடலாழி- ஸுவரிஷ்டமான ஸுகஸந்தோஹத்தை, அருளிக்காண்- தந்தருளவேணுங் காண், கடலென்று மாழியென்றும் மாமிசைச்சொல்லாய்- மிகவும்நிரதிஶயாநந்தத்தைச்சொன்னபடி. (௫௫)

ஐம்பத்தாறும்பாட்டு.

அ—இப்படி பேறு அவனாலேயென்று நிஶ்சயித்தபின்பு அருளென்றுகொண்டுவடிம்பிட்டு நிர்ப்பந்திக்கக்கடவதோ வென்ன;ப்ரேமமடியாகவந்த விருட்சியுடையாருக்குப் பற்றுசுமங்கே யுண்டாயிருக்க அறியிருக்கப்போமோ வென்கிறார்-

காண- காணக்காண, கழி பழையநிலைகழிந்து, காதல்- மேன்மேலென வளர்ந்துவருகிற ப்ரேமமானது, என்னாலடைக்கவொண்ணாதபடி கைமிக்குக்காட்டினால்- கைகழிந்துவிட்டால், நாணப்படும்- அவனேவந்து மேல்விழுமளவும் நாம்பதறுகை ஸ்வரூபஹாநியென்று லஜ்ஜித்து ஓரிடத்திலே ஒதுங்கியிருக்க

மூ—என்றால் நாணுமே *— பேணிக்கருமாலைபொன்மேனி
காட்டாமுன்காட்டும் * திருமாலை நங்கள்திரு. (ருசு)

திருமங்கைநின்றருளும் தெய்வம் நாவாழ்த்தும் *
கருமங்கடைப்பிடிமின்கண்டீர் *—
உரிமையாலேத்திலும் பாதமிருந்தடக்கையெந்தை பேர்*

வேணும், என்றால்- என்றுவிசாரித்தால், நாணுமே- அப்படி முறைபார்த்து, 'தத்வஸ்வரூபஸம்ஸ்வேத' என்று ஆறியிருக்கப்போமோ, அதுக்குமேலே கறு- ச்லாக்யமான கறுத்தநிறத்தையுடைய, மால்- ஸர்வாதிகனாய், திருமால்- ச்ரிய:பதியானவன், பொன்- ஸ்ப்ருஹணீயமாய் ஸ்ப்ருஹணீயமான, மேனி- வடிவு, காட்டாமுன்- காட்டுவதுக்குமுன்னே, நங்கள்- நமக்கு ஸ்வாமினியான, திரு- பெரியபிராட்டியார், பேணி- ஆதரித்து, காட்டும்- கொண்டுவந்துகாட்டும், 'நகஶ்சிந்நாபராத்யதி' என்றுமேல்விழுந்து சேர்க்கும் புருஷகாரமுண்டான பின்பு முறைக்குச்சேராது பதறுகையென்று லஜ்ஜித்து ஆறியிருக்கப்போமோ வென்றபடி. கண்டல்லது கழியாத காதலென்னவுமாம். (ருசு)

❀ ஐம்பத்தேழாம்பாட்டு. ❀

அ—இப்படி பெரியபிராட்டியாரோடே கூடியிருந்துள்ளவன் கிடீர் ஸர்வஸமாச்ரயணீயனென்கிறார்.

திரு- ஸ்வஸம்பந்தத்தாலே அவனுக்கு ஸர்வாதிக்யத்தையு முண்டாக்கவல்ல ஸ்வபாவத்தையுடையளாய், மங்கை- ஸௌகுமார்யமான பருவத்தையு முடையளான பெரியபிராட்டியார், நின்றருளும்- 'இறையுமகலகில்லேன்' என்று இடைவிடாமலுறையும்படியிருக்கிற, தெய்வம்- ஸர்வாதிகனானவனை நா- நாவாலே, வாழ்த்தும்- ஸ்தோத்ரம்பண்ணுகை யாகிற, கருமங்கடை- கார்யத்திலே, படிமின்கண்டீர்- ஒருப்படுங்கோள் கிடிகோள், நாம்- முறையறிந்தாராமொழிய அவ்விஷயத்தைப்பற்றுகைக்கீடான நன்மைகளொன்றுமற்ற அயோக்யரான நாம், இரும்- படைத்து, தடம்- வளர்ந்த, கை- திருத்தோள்களையுடைய, எந்தை- என்ஸ்வாமியானவனுடைய, பாதம்- திருவடிகளை,

ம்—நாற்றிசையும் கேட்டீரேநாம். (௫௭)

நான்பெற்றநன்மையும்நாமங்கைநன்னெஞ்சத்து * ஓம்பியிருந்தெம்மையோதுவித்து *— வேம்பின்பொருள்நீர்மையாயினும் பொன்னாழிபாடென்று * அருள்நீர்மை தந்தவருள். (௫௮)

---

உரிமையால்- நமக்குவகுத்த சேஷியன்றோ வென்கிற ப்ராப்தியாலே, பேர்- அவன்திருநாமங்களைக்கொண்டு, ஏத்தினோம்- ஏத்தினோம், இவ்வர்த்தத்தை நால்- நாலுவகைப்பட்ட, திசையும்- திக்கிலுள்ளாரெல்லாரும், கேட்டீரே- கேட்டீர்களே, கடைப்பிடிமின்கண்டீர்- இத்தை லௌகிகவார்த்தையென்றிராதே ப்ரதிபத்திபண்ணுங்கோள் கிடிகோளென்னவுமாம். (௫௭)

## ஐம்பத்தெட்டாம்பாட்டு.

அ—நமக்கிந்த நன்மையெல்லாமுண்டாய்த்து ஸர்வேச்வரனுடைய கடாக்ஷத்தாலே யென்கிறார்—

வேம்பு- வேம்பாகிற, பொருள்- பதார்த்தத்தினுடைய, நீர்மை- ஸ்வபாவம்போலே. ஆயினும்- இவ்விஷயத்தை யேத்துகையாகிற இது ஸத்ருசவிரஸமாயிருந்ததே யாகிலும், பொன்- ஸ்ப்ருஹணீயமான, ஆழி- திருவாழியுங் கையுமான சேர்த்தியழகை, பாடென்று- வீதிக்குப்போக்குவிட்டுப் பாடென்று, நாமங்கை- ஸரஸ்வதியானவள், நமக்கு இருந்து திருந்துகைக்கு நல்லாச்ரமமாயிருந்ததென்று ஸூசிக்கும்படி, நல்- விலக்ஷணமான, நெஞ்சத்து- நெஞ்சிலே, உபவங்க்ருக நியமியாமல் நம்நினைவிலே தன்னையமைத்து, ஓம்பியிருந்து- ராஜபுத்ரர்களைப் பள்ளியோதுவிப்பாரைப்போலே ஸந்நிதித்துக்கொண்டிருந்து, எம்மை- நம்மை, ஓதுவித்து- சிந்தையிட்டோதுவித்து, நாம்- நாம், பெற்ற- ஸஹ்ருதயமாகப்பெற்ற, நன்மையும்- ஸந்தாபத்துக்குப் போக்குவீடாகக் கவிபாடுகையாகிற விந்த பரமோபகாரமும், அருள்- அருளுகையே, நீர்மை- ஸ்வபாவமாகவுடையனான ஸர்வேச்வரன், தந்த- நிர்ஹேதுகமாக ஸங்கல்பம்பண்ணின, அருள்- ப்ரஸாதமடியாக வந்ததாயிருக்கும். (௫௮)

மூ— அருள்புரிந்தசிந்தையடியார்மேல்வைத்து * பொருள்தெரிந்து
காண்குற்றவப்போது *— இருள்திரிந்துநோக்கினேன்நோக்கிநினைந்
தேனதொண்கமலம் * ஓக்கினேனென்னையுமங்கோர்ந்து. (௫௯)

## ஐம்பத்தொன்பதாம்பாட்டு.

அ— இந்த ஜ்ஞாநத்துக்கடியாக அடியிலே அவன் நிர்ஹேதுக மாகத் தம்மை கடாக்ஷித்தபடி சொல்லுகிறார்.

அருளியல்லது நிற்கவேண்டாதபடி, அருள்புரிந்த- அருளிலேநோக்கான, சிந்தை- தேவருடைய திருவுள்ளத்தை, அடியார்மேல்- அருளுகைக்கடியான ஶேஷத்வஜ்ஞாநத்தை யுடையரான எங்கள்மேலே, வைத்து- விஷயீகரணீயாகவைத்து, பொருள்- எங்களைபொரு வஸ்துஸத்தராக, தெரிந்து- நிரூபித்து, காண்குற்ற- கடாக்ஷித்தருளுகிற, அப்போது- க்ஷணத்திலே, இருள்- அஜ்ஞாநமாகிற விருளடங்கலும், திரிந்து- போனவழிதெரியாதபடி சிதறிப்போய், நோக்கினேன்- தேவர் ஶேஷீ நாம்ஶேஷம் என்று இருவருடைய ஸ்வரூபத்தையும் தெளியக்கண்டேன், நோக்கி- இப்படி இரண்டு தலையையும் யதாவாகஅநுஸந்தித்து, தேவருடைய, ஒண்- அழகிய, கமலம்- தாமரைபோலே நிரதிஶயபோக்யமான, அது- அந்தத்திருவடிகளை, நினைந்தேன்- ப்ராப்யமென்று அநுஸந்தித்தேன், அங்கு- என்னுடைனக்குரிமை யில்லாதபடி தேவர்க்கே அத்யந்தபார தந்த்ரமாயிருக்கிற படியை, ஓர்ந்து- உள்ளுற நிரூபித்து, என்னையும்- ஸ்வரக்ஷணத்திலிறங்குகைக்கு அநர்ஹனென் னையும், ஓக்கினேன்- தன்னைப்பெறுகைக்குத் தானே உபாய மான வந்தத்திருவடிகளிலே நிக்ஷேபித்தேன், உபாயமும் தேவர் திருவடிகளேயென்று அத்யவஸித்தேனென்றபடி. இத்தால் ஸ்வாப்ரிதஸௌஹார்த்தயனைக்கொண்டு தம்மை யவன் நிர்ஹேதுகமாக கடாக்ஷித்தபடியும் கடாக்ஷபலமாக ஸ்வரூபப்ராப்யப்ராபகங்களை உணர்த்தி, பதற்றம் துணிவுகள் தமக்குண் டானபடியுஞ்சொல்லித்தாய்த்து. அருளிலேநோக்கான திருவுள்ளத்தை எங்கள்மேலேவைத்து, அத்தாலேநாங்கள் பதார்த்தவி வேகம்பண்ணி அநுஸந்திக்கிறபோதென்னவுமாம். (௫௯)

மூ—ஒருருவனல்லையொளியுருவநின்னுருவம் * ஈருருவனென்பரிருநிலத்தோர் *— ஒருருவமாதியாம்வண்ண மறிந்தாரவர்கண்டீர் * நீதியாண்மண்காப்பார் நின்று. (௬௦)

### அறுபதாம்பாட்டு.

அ—இப்படி ஸர்வேச்வரன் தன்பெருமையைபாராதே எளியனுப் தம்மை விஷயீகரித்த நீர்மையை அநுஸந்திக்கையாலே "நிரஞ்ஜநஸ்வதந்த்ரனான மேன்மையன்று அவனுக்கு நிலைநின்ற வேஷம், ஆச்ரிதபாரதந்த்ர்யமே நிலைநின்றவேஷம்" என்றறிந்திருக்குமவர்கள் ஜகத்தை ஸர்வகாலமும் ரக்ஷிக்குமவர்களென்கிறார்-

உன்படிபார்த்தால், (ஓர்) என்றுமொருபடிப்படி ஸ்வதந்த்ரமாயிருப்பதொரு, (உருவனல்லை) ஸ்வபாவத்தை யுடையையல்லை 'ஸக்தாநாம்ஸுவ்யக்தாஸவெ' என்கிறபடியே உன்னை ஆச்ரிதரிட்டவழக்காக்கி, (ஒளி) அத்தாலே புகர்பெற்று உஜ்ஜ்வலமாயிருக்கிற, (உருவம்) ஸ்வபாவம், (நின்) உனக்கு, (உருவம்) நிலைநின்றஸ்வபாவம், இப்படியிருக்கிற வுன்னை (இருநிலத்தோர்) இந்த ஆச்ரிதபாரதந்த்ர்யத்தி னேற்றமறியாத ஸம்ஸாரவ்யாதியிலுள்ள வாய்கரையரானவர்கள், (ஈர்) நிரங்குசஸ்வாதந்த்ர்யமாகிற பெரிய, (உருவன்) ஸ்வபாவத்தை யுடையவன், (என்பர்) என்று இத்தைப் பெரியவேற்றமாகச் சொல்லாநின்றார்கள், 'ப்ரணதபாரதந்த்ர்யம்ஹரேஸ்' என்னும்படி, (ஓர்) ஆச்ரிதபாரதந்த்ர்யமாகிற ஒருபடிப்பட்ட, (உருவம்) ஸ்வபாவமே, (ஆதி) ஸர்வஸத்தாஹேதுவாய்க்கொண்டு, (ஆம்) ஆச்ரிதர்க்கு ஜீவநஹேதுவாயிருக்கும் (வண்ணம்) வ்யாபாரத்தை, (அறிந்தார்) உள்ளபடியறிந்திருக்கும், (அவர்கண்டீர்) ஸம்ஸாரிகளான அவர்கள்கிடீர், ஸர்வஜ்ஞனியனென்று ஜகத்தை வழிபடுத்துண்கிற வாய்கரையரைப்போலன்றிக்கே அவன் நீர்மையினேற்றத்தைச் சொல்லி, நீதியால் எல்லாரையும் ஸமவசவ்யவணராம்படி திருத்துகிற ந்யாயத்தாலே, (நின்று) உருவநின்று, (மண்) ஜகத்தை, (காப்பார்) தளிரும்முறியுமாம்படி

மூ—நின்றதோர்பாதநிலம்புதைப்ப * நீண்டதோள்சென்றளந்த தென்பர் திசையெல்லாம் *— அன்றுகருமாணியாயிரந்த

ரக்ஷிக்கிறவர்கள், அன்றிக்கே 'பஹுதா விஜாயதே' என்கிற படியே ஸ்ரீதாஸரதியாக அவதரித்த ஸமயத்திலே ஸம்ஹநநம் திருமேனியை யுடையையாகையாலே ஒருபடிப்பட்டதொரு விக்ரஹத்தையுடையையல்லை, *ஸஉ ஸ்ரேயாந் ஸ்வதிஜாயமா நః* இப்படி பலவடிவெடுத்துக் கொண்டு பிறந்த விடத்திலும் ஶௌஸீல்ய * ஐயமாய்க்கொண்டு நிரவதிக தேஜோரூபமாயி ருக்கு முன்திருமேனி, இப்படி ஸ்வாயாரணவிக்ரஹமும் அவ தாரவிக்ரஹமுமாகிற இரண்டுவிக்ரஹத்தையு முடையையா யிருப்புதி! என்று உன்னை நாட்டிலறிவுடையார் சொல்லாநின்றா ர்கள், ஐதரஸஜாதீயமா யவதரித்த அந்த அவதாரவிக்ர ஹமொன்றுமே 'க்ருஷ்ணவஹிலோகாநாம் உத்பத்திரபிவாவ்ய யஃ' என்கிறபடியே ஜகத்காரணமாயிருக்கிற வ்யக்தாரத்தை யறிந்தவர்கள் ஜகத்தை எப்போதும் ரக்ஷிக்குமவர்க ளென் றுமாம். (௬௦)

## அறுபத்தோராம்பாட்டு.

அ—கீழ்ச்சொன்ன ஸ்ரீதவாரதம்ஶ்ரும்தன்னை ஸநாதீத் துக்காட்டினபடியைச்சொல்லுகிறார்-

ஒருநினைவற்றிருக்கச்செய்தே, (நின்றதோர்) நின்றதொரு (பாதம்) திருவடிகள், (நிலம்; ஸமிபூமிப்பரப்பையடங்கலும், (புதைப்ப)புறம்தோற்றாதே தன்கீழேயடங்கும்படி அளந்துகொ ள்ள, (நீண்ட) ஸஹிதம்பெற்ற, ஸ்ரீதிவ்யக்ஷேத்த லே முசிவற வளர்ந்த, (தோள்) திருத்தோளானது, (திசையெல்லாம்) திக் குக்களெல்லாவற்றையும், (சென்று) சென்று, (அளந்தது) அள ந்துகொண்டது, (என்பர்) என்றுவிவக்ஷிதர் சொல்லாநின்றார் கள், (அன்று) இந்த்ரன் கண்ணுங்கண்ணீருமாய்க்கொண்டு திரு வடிகளிலேவந்து விழுந்தவன்று, (கரு) ஸ்ரீஹரமான கறுத்த நிறத்தையும், (மாணியாய்) இரப்பிலேதகணேறின ப்ரஹ்மசாரி வேஷத்தையு முடையனாய்க்கொண்டு, (இருந்த) மஹாபலியை

ழ—கள்வனே* யுன்னைப்பிரமாணித்தார்பெற்ற பேறு. (கூக)

பேறொன்றுமுன்னறியேன் பற்றறியேன் பேதைமையால்*
மாறென்றுசொல்லிவணங்கினேன் *— ஏறின்பெருத்தெருத்தம்
கோடொசிய ப்பெண்நசையின்பின்போய் *
எருத்திறுத்தநல்லாயரேறு. (கூ௨)

---

யை ஸவஹ்ஸாவஹாரம்பண்ணின, (கள்வனே) க்ருத்ரிமனே?
உன்னையழியமாறி மஹாவலிபக்கற்கிடந்த பூமியை மீட்டுக்
கொடுத்தவிது, உன்பக்கலிலே தங்கள்ஸாரத்தைப்புகட்டு, (உன்
னை) உன்னை, (பிரமாணித்தார்) விஶ்வஸித்திருந்த வாஶ்ரிதரான
வர்கள், (பெற்ற) நிர்பரராய் மார்விலே கைவைத்துறங்குப்படி
பெற்றதொரு, (பேறு) பேறன்றே, அவர்களுக்குவைத்த தண்
ணீர்ப்பந்தலன்றோ வென்றபடி. (கூக)

❁ அறுபத்திரண்டாம்பாட்டு. ❁

அ—இப்படி ஆஶ்ரிதவாத்ஸல்யனானவனே என் விரோதிவர்
க்கங்களைப்போக்கி அபேக்ஷிதத்தையும் தருவானென்று அவனை
ப்பற்றினேனென்கிறார்.

(ஏறின்) வ்ருஷபங்களுடைய, (பெருத்த) வளர்ந்த, (எருத்
தம்) ககுத்துக்களும், (கோடு) கொம்புகளும் (ஒசிய) முறியும்
படிக்கீடாக, (பெண்) நற்பின்னைப்பிராட்டிபக்க லுண்டான,
(நசையின்) ஆசையை, (பின்போய்) பின்சென்று, (எருத்து)
அந்தவ்ருஷபங்களுடைய கழுத்தை, (இறுத்த) திருகிப்புகட்ட
வனாய், (நல்) தன்னோடொத்த நல்லபருவத்தையுடைய, (ஆயர்)
இடைப் பிள்ளைகளுக்கெல்லாம், (ஏறு) தலைவனாகையால் வந்த
செறுக்கையுடையனான க்ருஷ்ணன், (மாறென்றுசொல்லி) நம்மு
டைய ப்ராப்திவிரோதிகமான கர்மங்களுக்கு ஶத்ருவாயி
ருக்குமவனென்று, (வணங்கினேன்) ஆஶ்ரயித்தேன், (முன்)
இதுக்குமுன்பு, (ஒன்று) இப்படியிருப்பதொரு, (பேறு) ஸாக்ஷா
த்காரமென்று, (அறியேன்) அறியவும் பெற்றிலேன், (பெற்றறி
யேன்) அத்தாலே இப்ஸாக்ஷாத்காரத்தைப் பெற்றநுபவிக்
கப்பெறுமல் இழந்துபோனேன், இதுக்கடி (பேதைமை) என்ன
றிவுகேடு, (ஆல்) ஐயா, அறிவுகேடு என்படுத்தாதுதான். (கூ௨)

மூ—ஏறேழும்வென்றடர்த்தவெந்தை * பெரியுருவத்தேறேறிப ட்டவிடுசாபம் *— பாறேறியுண்டதலைவாய்நிறையக் கோட்டங் கைபொண்குருதி * கண்டபொருள்சொல்லில் கதை. (சுரு)

❀ அறுபத்துமூன்றும்பாட்டு. ❀

அ—சுலிஜோநியானருத்ரனுடைய பாவத்தைப் போக்குகைபா லுமவனே சூராயணீயனென்கிறார்-

(ஏறேழும்) ஜ்ஷபங்களேழையும், (வென்று) ஜயித்து, (அடர்த்த) திருகிப்புகட்ட, (எந்தை) என்ஸ்வாமியான க்ருஷ்ணன், (எரி) நெருப்புப்போலே யேறிட்டுப் பார்க்கவொண்ணாத, (உரு வத்து) வடிவையுடையனுப் செருக்குக்குப் போக்குவீடாக, (ஏறு) ஜ்ஷபத்தை, (ஏறி) மேற்கொண்டு நடத்தக்கடவனுயான ருத்ரன், முன்பு தலையறுக்கிறவிடத்திலநீதிபண்ணியிருந்து பின்பு கூவிதனுப்கொண்டு, (விடு) ஸ்ரூஹ்மா 'சுவாமீகும்ஹ விஷ்ணுஸி' என்றுமபவிக்க, (பட்ட) பாவொவஹதனுய்க் கைபுந்தலையோடுமாய்க் கொண்டிரந்து திரியும்படி மறுபாடுரு வப்பட்ட, (சாபம்) வந்தேறியானபாவத்தை, (பாறு) கழுகும் பருந்தும் பாறுஎன்கிற விஸேஷமுடானவிவை, (ஏறி) மேல் விழுந்து, (உண்ட) ஜீவித்த, (தலை) தலையோடு, (வாய்) வாய ளவும், (நிறைய) நிறைந்து, 'ஷூடிதம் பஹுயா யாதம்' என்னும்படி சில்லுச்சில்லாக வெடித்துப்போம்படி, (கோடு) குவித்த, (ஒண்) அழகிய, (கை) திருக்கையாலே, திருமேனி யிலொருவஸ்ரத்தைக் கீறிவாங்கித்தெறித்த, (அம்) அழகிய (குருதி) ரத்தத்தாலே, (கண்ட) கையில்நின்றும் தவிழ்ந்துபோ ம்படிகண்ட, (பொருள்) இவ்வருத்தத்தை, (சொல்லில்) சொல் வழியில், (கதை) ஒருஹோஹாஸதத்தோடொக்கும், ஸம்ஸ்ரா ஞகவும்வேண்டா வாதகியாகவும்வேண்டா அங்கைமென்றது வாதகத்தைப் போக்கவல்ல வழகியகையென்றபடி. ஒண்குருதி யென்றது சுவதாரத்தின் மெய்ப்பாட்டாலே சுவஸ்ராக்ருதமான திருமேனியிலேநின்று முண்டானதாகையாலே யடிக்கழுஞ்சுபெ ற்ற குருதியென்றபடி. (சுரு)

மூ — கதையும்பெரும்பொருளும்கண்ணாநின்பேரே * யிதயமிருந்
தவையேயேத்தில் *— கதையும்திருமொழியாய்நின்றதிருமாலே*
உன்னைப்பருமொழியாற்காணப் பணி. (௯௪)

---

## ❁ அறுபத்துநாலாம்பாட்டு. ❁

அ—இப்படி ஸம்ஸாரிகளுக்கும் காயக்லேசஞ்செய்யக்கடவ நீ உன்னாலல்லது செல்லாத நானுன்திருநாமங்களைச் சொல்லி முழுமிடறுசெய்து ஸந்தோஷிக்கும்படி பண்ணியருளவேணுமென்கிறார்-

(கண்ணா) ஸர்வஸுலபனான க்ருஷ்ணனே? (கதையும்) ஸ்வமஹத்வத்தை க்ரமமேபோலே வகைவிட்டுப் பரக்கச்சொல்லுகிற, (பொருளும்) அர்த்தங்களும், (இதயம்) அந்த இதிஹாஸங்களின் தாத்பர்யமும், (இருந்தவையே) இருந்தபடியே (ஏத்தில்) அறிந்துகொண்டு ஸ்தோத்ரிக்கில், (நின்) உன்னுடைய, (பேரே) குணசேஷ்டிதங்களுக்கு வாசகமான திருநாமங்களேயாயிருக்கும், (கதையும்) உபநிஷத்ஸித்தமான வித்யாவிசேஷங்களில் க்ரமமேபோலேயவன்குணசேஷ்டிதங்களை விஸ்தரித்துச்சொல்லுகிற, (திரு) அழகிய, (மொழியாய்நின்ற) சப்தங்களுக்குள்ளீடான பொருளாய்க்கொண்டு நின்ற, (திருமாலே) ஸ்ரிய:பதியானவனே? (உன்னை) இப்படி ச்ருதிஸ்ம்ருதீதிஹாஸபுராணங்களாலே ப்ரதிபாதிக்கப்பட்ட ஸ்ரிய:பதியான வுன்னை, இப்படி சப்தராசி காண்கையன்றிக்கே ஒருதேசவிசேஷத்திலே வந்து ப்ரத்யக்ஷமாக, "ஸதாபச்யந்தி" என்றநுபவித்து ஸந்தோஷஜநிதவ்யாப்திக்குப் போக்குவிட்டு 'ஹாவுஹாவுஹாவு' என்று முழுமிடறுசெய்து பேசுகிற, (பருமொழியால்) ப்ரத்யக்ஷசப்தங்களாலே, (காண) கண்டநுபவிக்கும்படி, (பணி) திருவுள்ளமாயருளவேணும் கதையும்திருமொழியாய்நின்ற வென்கிறவிடத்திலே கதையென்று இதிஹாஸாதிகளையே சொல்லிற்றாகவுமாம். (௯௪)

## ❁ அறுபத்தைந்தாம்பாட்டு ❁

அ—இப்போதுமக்குச் செய்யவேண்டுவதொன்றுண்டோ? நீர்

மூ — பணிந்தேன்திருமேனி பைங்கமலங்கையால் * அணிந்தேனு ன்சேவடிமேலன்பாய் *— துணிந்தேன் புரிந்தேத்தியுன்னைப் புகலிடம்பார்த்து * ஆங்கேயிருந்தேத்திவாழுமிது. (ருடு)

எல்லாம்பெற்றீரேகாணுமென்ன; அந்தலாபத்தை யநுஸந்தித்து தத்நுரூபமாகப் பரிமாறுகிருர்-

'நநமேயம்' என்னும்படி ஸாதநாந்தராத்தாலே தலைவணக் கமற்றநான், (திரு) உன்னுடைய அழகிய, (மேனி) திருமேனி யை, (பணிந்தேன்) கண்டு ஆழங்கால்பட்டு வேரற்றமரம்போலே ஸாஷ்டாங்கமாக விழுந்தேன், அடிமைசெய்யாவிடில் தரிக்கவொண்ணாத சேஷத்வத்தையுடையனைக்கொண்டு, (உன்) வகுத்தசேஷியான வுன்னுடைய, (சே) சிவந்த, (அடிமேல்) திருவடிகளின்மேலே, (கையால்) எடுத்துக் கைநீட்டக்கண்ட கையாலே, (பை) அழகிய, (கமலம்) தாமரைப்பூக்களை, (அணி ந்தேன்) அழகுபெறச்சாத்தினேன், எழுந்தருளாநின்ருல் (புரி ந்து) முன்னே சேவித்துப்புரிந்து முன்புள்ளவழகைக் கண்டு களித்து, (உன்னை) உன்னை, (ஏத்தி) ஸ்தோத்ரம்பண்ணி, புக லிடம்) புக்கருளுகிறவிடத்திலே, (பார்த்து) பின்புள்ளவழகை க்கண்டு, கால்வாங்கமாட்டாதே (ஆங்கே) அவ்விடந்தன்னிலே (இருந்து) இருந்து, (ஏத்தி) தேவருடையஸம்ருத்தி இப்படியாரு தே செல்லவேணுமென்று புகழ்ந்து, (வாழும்) மங்களாசாஸ நம்பண்ணி இப்படி அநுபவித்து வாழுகையாகிற, (இது) இப் வ்யவஸாயத்திலே, (துணிந்தேன்) வ்யவஸிதனானேன், அங்ஙனன்றிக்கே புகலிடமென்கிறது அவதாரஸமாப்தியில்போய் புக்கருளும் ஸ்ரீவைகுண்டத்தையாய், ஆங்கே 'சூழ்ந்திருந் தேத்துவர்' என்கிறபடியே அவர்கள் நடுவேபுக்கிருந்து ஏத்திவாழ வேணுமென்னு மதிலே அத்யவஸித்தேனென்னவுமாம், இதுதிரு மலைநம்பிநிர்வாஹம். (ருடு)

❀ அறுபத்தாரும்பாட்டு. ❀

அ — ஹேயவஸ்துவாவணும்பெற்ற வளவமையும் அநர்த்தாவஹமான விஷயங்களின் தோஷத்தையநுஸந்தித்து அவற்றைவிபிறக்கையே வேண்டுவதென்கிருர்-

மூ—இதுகண்டாய்நன்னெஞ்சே இப்பிறவியாவது * இதுகண்டாயெல்லாம்நாமுற்றது *— இதுகண்டாய்நாரணன்பேரோதி நரகத்தருகணையாக் * காரணமும்வல்லையேற்காண். (௬௬)

கண்டேன் திருமேனியாங்கனவில் *

ஸம்ஸாரம்பொல்லாதென்றால் (நல்) அதுக்கிசைந்து என்னோடு ஒருமிடறானநல்ல, (நெஞ்சே) நெஞ்சே? இதுநிலைநிற்கும் ஸௌக்யமாயிருக்குமென்று நாட்டார் ப்ரமிக்கிற ஸம்ஸாரமன்றிக்கே ஸகலதுக்காஸ்பதத்தாலே உபலக்ஷிக்குமளவில், (இ) ஸமஸ்த தோஷதூஷிதமான இந்த, (பிறவியாவது) ஸம்ஸாரமாகிறது, (இதுகண்டாய்) ஸூத்ராஸ்ரவாதி தோஷதூஷிதமான இவ்வாகாரத்தோடேகூடினவிதுவே கிடாய், (எல்லாம்) முன்பநாதியானகாலமெல்லாம், நன்றாய்த்தோற்றுகிற வாகாரத்தாலே, (நாம்) நாம், (உற்றது) மறுபாடுருவ அநுபவாநுபவம்பண்ணிப்போந்தது, (இதுகண்டாய்) இதுகிடாய், (நாரணன்) வகுத்த ஶேஷியான நாராயணனுடைய, (பேர்) குணாதிகளுக்கு வாசகமான திருநாமங்களை, (ஓதி) நிரந்தரமாகச் சொல்லி, (நரகம்) ஸம்ஸாரமாகிற நரகத்தினுடைய, (அருகு) பக்ஷத்திலும், (அணையா) ப்ரவேசியாமைக்கு, (காரணமும்) காரணமும், (இதுகண்டாய்) ஸ்வஸ்த்ரவாதிதோஷங்களாலே த்யாஜ்யமென்னுமாகாரம் ப்ரத்யக்ஷிக்கலாம்படியிருக்கிற விஜ்ஞானஸம்ஶயம்கிடாய் மேலெழத் தோற்றுகின்ற நன்மையிற்பசையில்லை, தோஷமேவேஷமென்று இத்தைத்தப்பாதபடி, (வல்லையேல்) காணவல்லையாகில், (காண்) நாம்சொன்ன தொக்குமென்னுமிடத்தைக் கண்டுகொள்ளு. (௬௭)

## அறுபத்தேழாம்பாட்டு.

அ—இவர் திருவுள்ளத்தைக்குறித்து ஸம்ஸாரதோஷத்தைக்காணென்ற அநந்தரம் அவன் நிர்ஹேதுகமாகத் தன்னைக்கொண்டுவந்துகாட்ட அதில் தாம்கண்ட அம்சத்தை யருளிச்செய்கிறார்—

(யான்) நிர்ஹேதுகமாக அவனாலே அங்கீக்ருதனான நான், (கனவில்) இந்த்ரியஸாமாவிட்டு நீட்டிக்காண்கையன்றிக்கே

மூ—ஆங்கவன்கைக்கண்டேன் கனலுஞ்சுடராழிகண்டேன் *—
உறுநோய்வினையிரண்டு மோட்டிவித்துப் *
பின்னுமறுநோய்செறுவான் வலி. (௬௭)
வலிமிக்கவாளெயிற்று வாளவுணர்மாள * வலிமிக்கவாள்
வரை மத்தாக *— வலிமிக்கவாணாகஞ்சுற்றி

ஸ்வரூபமாய் அதிலும் விலக்ஷணமான ஸாந்நித்யமுடைமை
யிலே, (திரு) அழகிய, (மேனி) திருமேனியை, (கண்டேன்)
கண்டநுபவிக்கப் பெற்றேன், (அவன்) அப்படிப்பட்ட
அழகையுடையவன், (கை) திருக்கையிலே, (கனலும்) ஶத்ரு
வர்க்கத்தின்மேலே சீறுபாறென்னாநின்றுள்ள, (சுடர்) தேஜோ
ரூபமான, (ஆழி) திருவாழியை, (கண்டேன்) கண்டேன்;
(உறு) துறக்கவொண்ணாதபடி ஶரீரத்தோடேகூடி, (நோய்)
து:க்காவஹமான, வினை- புண்யபாபரூப கர்மங்கள்,
இரண்டும்- இரண்டையும், ஓட்டிவித்து- துரத்திவிட்டு, பின்
னும்- பின்னையும், மறு- மறுகிளைகிளர்ந்து வரக்கடவதாய்,
நோய்- து:க்கஹேதுவான வாஸநாருசிகளையும், செறு
வான்- செறுத்துமுடிக்குமவன், வலி- மிடுக்கையும், கண்டேன்-
காணப்பெற்றேன். (௬௭)

அறுபத்தெட்டாம்பாட்டு.

அ—ஶ்ரியபதியானவர் ஆயாகிலும் தன்னை வந்தடைந்தால்
வருந்தியு மவர்களபேக்ஷிதஸம்விதானம் பண்ணுமென்கிறார்—

வலிமிக்க- பெருமிடுக்கராய், வாள்- ஒளிவிடுகிற, பயிறு-
பயிற்றையுடையருமாய், வாள்- க்ரூரருமான, அவுணர்-
அஸுரர்ராக்ஷஸாதிகள், மாள- நஶிக்கும்படியாகவும், தான்
நெருக்கினவிடத்திலும் பிரிந்துபோகாதபடி, வலிமிக்க- கடி
னாதரமாய், வாள்- ஒளிவிடுகிற, வரை- மந்தரபர்வதம்,
மத்தாக- மத்தாகவும், வலிமிக்க- நெடும்போது இடவாய் வல
வாய்ச்சுற்றிக்கிடக்கிற வளவிலும் அற்றுப்போகாதபடியான மிடு
க்கையும், வாள்- மலையோடே தேய்ப்புண்கைபாலே வந்தவொ
ளியையுமுடைய, நாகம்- வாஸுகியாகிற பாம்பை, சுற்றி,

ரு—மறுகக்கடல்கடைந்தான் * கோணாகங்கொம்பொசித்த கோ*. கோவாகிமாநிலங்காத்து * நங்கண் முகப்பேமாவேகிச்செல் கின்றமன்னவரும் *— பூமேவுஞ்செங்கமலநாபியான் சேவடிக்கே யெழ்பிறப்பும் * தண்கமலமேய்ந்தார் தமர். (௬௯)

---

கடைகயிறுகச்சுற்றி, மறுக- கீழ்மண்கொண்டு மேல்மண்ணெ றியும்படி, கடல்- கடலை; கடைந்தான்- கடைந்தருளினவன், கோள்- ஸவ்ருக்கும் வேர்பற்றான தன்திறத்திலே நலியவந்த மிடுக்கையுடைய, நாகம்- குவலயாபீடத்தின், கொம்பு- கொம்பை ஒசித்த- ஸுநாயாஸேந முறித்துப்புகட்ட, கோ- ஸவஸ்வேஷிகிடீர், இத்தால் தம்விரோதியைப்போக்கித் தம் மையெழுதிக்கொண்டபடி சொல்லுகிறது. (௬௮)

❀ அறுபத்தொன்பதாம்பாட்டு. ❀

அ—ஸூஷ்த்தில் தேவர்களிவனைப்பற்றித் தங்கள் வுமியோஜநம் பெற்றவளவன்றிக்கே ஸூமலோகத்தில் ராஜாக்களு மிவனைப்ப ற்றித் தந்தாம்வுச்பெற்றுப் போகாநின்றார்கள் கிடீரென்கிறார்—

(கோவாகி) ஸவ்த்துக்கும் ஸ்வாமிகளாகமுடிசூடி, (மா) பரப்பையுடைத்தான, (நிலம்) ஸூமியை, (காத்து) சிறியதை ப்பெரியது நலியாதபடி ரக்ஷித்து, (நங்கண்முகப்பே) நங்கண் வட்டத்திலே, (மா) குதிரைமுதுகை, (எகி) படைவீடாகநட த்தி, (செல்கின்ற) செல்கின்ற, (மன்னவரும்) ராஜாக்களும், (பூ) ஸௌந்தர்யத்தை, (மேவும்) பொருந்தியிருந்துள்ள, (செம்) சிவந்த, (கமலம்) தாமரைப்பூவை, (நாபியான்) திருநாபியி லேயுடையனுப் அத்தாலே ஸவ்காரணஸூதனான ஸவேஸ்வ ரனுடைய, (சே) சிவந்த, (அடிக்கே) திருவடிகளிலே, (எழ் பிறப்பும்) ஜந்மங்கள்தோறும், (தண்) குளிர்ந்த, (கமலம்) தா மரைப்பூமுதலான புஷ்பங்களை, (ஏய்ந்தார்) சாத்தி ஆராயி த்த, (தமர்) ஆஸ்ரிதர்கிடீர், ஏய்ந்தாருடைய தமர்கிடீரென்னு தல், செங்கமலப்பூமேவும் நாபியானென்னவுமாம், 'பூவேகும் செங்கமலநாபியான்' என்று பாடமானபோது பூக்கள்தள்ளும் படியான செவ்வியையுடைய கமலத்தை நாபியிலேயுடையவ னென்று பொருளாகக்கடவது. (௬௯)

மூ—தமருள்ளம்தஞ்சைதலையரங்கந்தண்கால் * தமருள்ளுந்தண் பொருப்புவேலை *— தமருள்ளுமாமல்லைகோவல்மதிட்குடந்தை யென்பரே * ஏவல்லவெந்தைக்கிடம். (எ0)

## ❁ எழுபதாம்பாட்டு. ❁

அ—இப்படி வ்யவஸாயஜ்ஞரானவரை ஆச்ரயிக்கைபன்றிக்கே ஸுந்ந்யவஸாயரராய்த் தன்னை ஆச்ரயித்தவர்களுடைய திருவுள்ளத்தை உகந்தருளின திருப்பதிகளெல்லா மொருதட்டும் இதொருதட்டுமென்னும்படி ஒக்கவிரும்பி அவன்பரிமாறும்படியை யருளிச்செய்கிறார்-

(தமருள்ளம்) மேற்சொல்லுகிற திருப்பதிகளெல்லாவற்றிலும் வ்யவஸாயமான ஆச்ரிதருடைய ஹ்ருதயங்கள், (தஞ்சை) தஞ்சைமாமணிக்கோயில், (தலை) திருப்பதிகளெல்லாவற்றிலும் ப்ரதானமான, (அரங்கம், வாவைத்தோடே கூட வெண்ணலார்படியான கோயில், (தண்கால்) திருத்தண்கால் (தமர்) ஸ்ரீவைஷ்ணவர்கள், (உள்ளும்) தங்களுக்கு ஸவ்யூஹமாக வர்த்தமாநமாயிருக்கும், (தண்) ஸூகுமாரமான, (பொருப்பு) திருமலை, (வேலை) எல்லாவற்றுக்குமடியான திருப்பாற்கடல், (தமர்) ஆச்ரிதரானவைஷ்ணவர்கள், (உள்ளும்) தங்களுக்குவைஹஸ்யமாக வர்த்தமாநமாயிருக்கும், தறைக்கிடைக்கிடக்கும் (மா மல்லை) திருக்கடல்மல்லை (கோவல்) எங்கள்மூவரோடு டொக்கநெருக்கின திருக்கோவலூர், (மதில்) அரணான மதிள்களையுடைத்தாய், (குடந்தை) திருமழிசைப் பிரானுகந்த திருக்குடந்தையாகிற இவ்விவ திவ்யதேசங்களெல்லாம், (ஏவல்ல) வ்யதிவக்ஷத்தையெய்து விழவிடவல்ல, (எந்தைக்கு) என்ஸ்வாமியான தசரதாத்மஜனுக்கு (இடம்) வாஸஸ்தானமாக, (என்பர்) அறிவுடையார் சொல்லாநின்றார்கள், (ஏவல்லவெந்தை) எய்கைக்குவல்லனான வென்ஸ்வாமியென்றபடி. (எ0)

## ❁ எழுபத்தோராம்பாட்டு. ❁

அ—ஸர்வேச்வரன் ஆச்ரிதார்த்தமாகத் திருவுலகளந்தருளின தேசத்திலே வர்த்தமாநத்து நித்யஸூரிகள் அநுஷ்டேயஸமஷ்டிபண்ணிப் படும்பாடுசொல்லுகிறார்—

மூ—இடங்கைவலம்புரிநின்றார்ப்ப * எரிகான்றடங்கா ரொடுங் குவித்ததாழி *—விடங்காலுந்தீவாயரவணைமேற்றோன்றல்திசை யளப்பான் * பூவாரடிநிமிர்த்த போது. (எக)

போதறிந்துவானரங்களபூஞ்சுனைபுக்கு * ஆங்கலர்ந்த

பரிவின்வநத்தாலே ஸ்ரீ திகூவர்மேலே, (விடம்) விஷயத்தை, (காலும்) உமிழாநின்றுள்ள, (தீ) பயங்கரமான, (வாய்) வாயையுடைய, (அரவணைமேல்) திருவனந்தாழ்வான் மேலே சாய்ந்தருளக்கடவ, (தோன்றல்) ஸௌசீல்யத்தில் ஸ்ரீயாநனவன், (திசை) காடுமேடையான திக்குக்களோடேகூடின ஸ்ருஷ்டியை, (அளப்பான்) அளக்கைக்காக, (பூவார்) பரிவஷ்ஸௌகுமார்யமான, (அடி) திருவடிகளை, (நிமிர்ந்த) வளர்த்தருளின, (போது) காலத்தில், (இடங்கை) இடத்திருக்கையிலே, (வலம்புரி) ஸ்ரீபாஞ்சஜந்யமானது, (நின்ற) அப்போதப்போதுபிறந்த விஜயத்தை யநுஸந்தித்த ஹர்ஷத்தாலே ஸ்ரீ திகூவர் மண்ணுண்ணவும் சுநுகூவர் கொந்தளிக்கவும், (நின்று) ஒருபடிப்பட்டுநின்று, (ஆர்ப்ப) முழங்க, (ஆழி) திருவாழியானது, அஞ்சனூர்த்துக்கொள்ள சுவஸரமற்று (எரி) நெருப்பை, (கான்று) உமிழாநின்றுகொண்டு, (அடங்கார்) ஶத்ருக்களான நமுசிப்ரப்ருதிகளை, (ஒடுங்குவித்தது) வாய் வாமென்று முடங்கப்பண்ணிற்று. (எக)

## ❁ எழுபத்திரண்டாம்பாட்டு. ❁

அ—அளவுடையரான நித்யஸூரிகளும் இப்படிபடுகிற விஷயத்தை நமக்குச்சென்றாஶ்ரயிக்கப்போமோவென்று பிற்காலிக்கிற திருவுள்ளத்தைக்குறித்து திர்யக்குக்களுக்கு மாஶ்ரயிக்கலாம்படி ஸுலபனானபின்பு நீயுமதிலேயொருப்படென்கிறார்—

வானரங்கள்- குரங்குகளானவை, போதறிந்து- ருஷிகள் ப்ராஹ்மமுஹூர்த்தத்திலே வுணருமாப்போலே காலமறிந்துணர்ந்துபோய், பூ- பரப்புமாறப்பூத்த, சுனை-சுனைகளிலே, புக்கு- ருஷிகள் சுவகாஹநம் பண்ணும்போலே சென்றுபுக்கு, ஆங்கு- அவ்விடத்தில், அலர்ந்த- கழியவலருதல், கடுமொட்டாதன்றிக்கே

மூ—போதரிந்துகொண்டேத்தும் போதுள்ளம் *—
போதுமணிவேங்கடவன் மலரடிக்கேசெல்ல *
அணிவேங்கடவன்பே ராய்ந்து. (எஉ)

ஆய்ந்துரைப்பனுயிரம்பே ராதிநடுவந்திவாய் * வாய்ந்த

அப்போதலர்ந்த, போது- செவ்விப்பூக்களை, அரிந்துகொண்டு- பறித்துக்கொண்டு, ஏத்தும்- ஜாத்யுசிதமான ஏதேனுமொன்றைச்சொல்லி ஸ்தோத்திதுக்கொண் டாஸ்ரயியா நிற்கும், உள்ளம்- ஹே நஸ்ஸே? போது- நீயும்பிற்காலியாதே போது, போந்த வநஸ்ரம். வேங்கடவன்- திருவேங்கடமுடையானுடைய, பேர்- ஸ்ரீஅழிருணங்களுக்கு வாசுகமான திருநாமங்களை, ஆய்ந்து- அநுஸந்தித்துக்கொண்டு, மணி- நீலரத்னம்போலே ஸ்ரீமானமான வடிவையுடையனான, வேங்கடவன்- திருவேங்கடமுடையானுடைய, மலர்- பூப்போலே ஸுகுமாரமான அடிக்கே- திருவடிகளுக்கே, செல்ல- சென்றுகிட்டும்படி, போது- செவ்விப்பூக்களை அழகுபெறச்சாத்தி, அடி- ஆஸ்ரயிக்கப்பார், அன்றிக்கே ஸம்ஸாரத்துக்காரணமான திருவேங்கடமுடையானென்றுப் வேங்கடவன் மலரடிக்கே செல்லப்போது போதுமடியென்றுமாம். (எஉ)

❁ எழுபத்துமூன்றும்பாட்டு. ❁

அ—ஸர்வஸமாஸ்ரயணீயனான வவன் நிலையை அநுஸந்தித்து அவன்திருவடிகளிலே தாம் நித்யகைங்கர்யம் பண்ணுவதாக அத்யவஸித்தபடியை யருளிச்செய்கிறார்-

பிறை- பிறையோடு, ஏய்ந்த- ஒத்திருந்துள்ள, கோடு- கொம்புகளையும், செம்- அழகிய, கண்- கண்களையுமுடைத்தான, கரி- ஸ்ரீகஜேந்த்ராழ்வானை, விடுத்த தறையிலொரு பூவிழாதபடி முதலைவாயில்நின்று மொள்ளவிடுவித்தருளின, பெம்மான்- ஸர்வேஸ்வரனான, இறைக்கு- என்னாயனுக்கு, ஆள்பட- அடிமைசெய்கையிலே, துணிந்த- அத்யவஸித்த, நான்- நான், ஆதி- முதலும், நடு- நடுவும், அந்திவாய்- அந்தியுமான, வைகலும்- ஸர்வகாலங்களிலும், வாய்ந்த- ஏதேனுமாகக்கட்டின,

மூ—மலர் தூவிவைகலும் *— ஏய்ந்தபிறைக்கோட்டுச்செங்கண் கரிவிடுத்தபெருமான் * இறைக்காட்படத்துணிந்தயான். (எந)

யானேதவஞ்செய்தே னேழ்பிறப்பு மெப்பொழுதும்* யானேதவமுடையேனெம்பெருமான் *— யானேயிருந்தமிழ்நன் மாலையிணையடிக்கேசொன்னேன் * பெருந்தமிழன்

மலர்- பூக்களை, தூவி- அடைவுகெடப்பணிமாறி, இன்னதிருநாமமென்றொரு நியதியற, ஆயிரம்பேர்- ஸ்ரீணவெஷ்டிதாதிகளுக்கு வாசகமான ஆயிரம் திருநாமத்தையும், ஆய்ந்து- அநுஸந்தித்துக்கொண்டு, உரைப்பன்- சொல்லிநிற்பன், ஆன்றிக்கே சேர்ந்தபிறைபோலே யிருந்துள்ள கொம்புகளையும் சிவந்தகண்களையு முடைத்தான குவலயாபீடத்தை நிரஸித்தபடியாகவுமாம், அப்போது தம்விரோதியை நிரஸித்தபடிக்கு உத்தேஸம், மற்றப்போது மற்றுள்ள ஸூரிதவிஷயத்தில் வஸ்துனைப் அவர்களாபத்தை நீக்கும்படிக்கு உத்தேஸம். (எந)

❁ எழுபத்துநாலாம்பாட்டு. ❁

அ—இப்படி கைங்கர்யம்பண்ணுகையால் வந்த ஹர்ஷத்தாலே யவனுக்கு ஸத்ருசமாகக் கவிபாடும்படியான ஸௌகர்யம்பண்ணினேன்நானேயென்கிறார்—

எம்பெருமான்- இவ்வாத்மாவை ஸ்வரூபானுரூபமாகத் திருவடிகளிலே அடிமைகொள்ளுகைக்குரிய வென்னுடைய நிரவதிகஸேஷியானவனே? எழ்பிறப்பும்- ஸகலஜந்மங்களிலும், எப்பொழுதும்- அதுதன்னில் எல்லாவவஸ்தைகளிலும், தவம்- உன்திருவடிகளிலே வாசிகைங்கர்யம் பண்ணுகையாகிற விப்பேற்றுக்கடியான தபஸ்ஸை, செய்தேன்- பண்ணினேன், யானே- நானே, அந்த தபஃபலமாகவந்த, இரும்- லக்ஷணலக்ஷ்யங்களிற் குறைவற்றிருக்கும் பெருமையையுடைத்தாய், நல்- ஸர்வாதிகாரயாய் ஸுதர்ஸவிலக்ஷணயான, தமிழ் மாலை- த்ராவிடஸந்தர்ப்பங்களை, இணை- சேர்த்தியழகையுடைத்தான, அடிக்கே- தேவர்திருவடிகளுக்கே, சொன்னேன்- சொல்லப்பெற்றேன், யானே- நானே, பெருந்தமிழன்- த்ராவிடஸாஸ்

மூ—நல்லேன் பெருகு.                                                  (எச)

பெருகும்மதவேழம் மாப்பிடிக்குமுன்னின்று*
இருகணிளமூங்கில்வாங்கி *— யருகிருந்ததேன்கலந்துநீட்டும்
திருவேங்கடங்கண்டீர் * வான்கலந்த

த்திலென்றனை சுவமாஹித்தாரில்லையென்னும்படி அதில் ஜெமி
கனுபிருப்பானொருத்தன், அவ்வளவன்றிக்கே 'வடதஷாஜாய
ஹாஜெஷு' என்று பாங்கானநிலத்திலேயிருந்து பாடியாடி யடிமை
செய்யக்கடவ நித்யஸூரிகளைப்போலன்றிக்கே இங்கேயிருந்து
கவிபாடப் பெறுகையாலே அவர்களிலும், பெருகு- மிகவும்,
நல்லேன்- நல்லனாயிருப்பானொருத்தன்.                              (எச)

❁ எழுபத்தைந்தாம்பாட்டு. ❁

அ—பெருகுநல்லனென்று கொண்டாடிச் சொன்னீர், இப்படி
பெருமதிப்பராயிருக்கிற நீர்தாமொருகவிசொல்லிக் காணீரென்
ன, அப்போது விண்ணப்பஞ்செய்த கவிதன்னைச்சொல்லுகிறார்—
பெருகு- திருமலையிற்றிருவருவிகள் பெருக்கெடுக்குமாப்
போலே மேன்மேலெனப் பெருகாநின்றுள்ள, மதம்- மதத்
தையுடைத்தான, வேழம்- ஆனையானது, எல்லாவளவிலும் தன்
னையேவிக் காரியங்கொள்ளவல்ல, மா- ஸ்ரீலாவண்யமான, பிடிக்கு-
பிடிக்கு, நான் இக்குத்தைக்குச் செய்யக்கடவ பணிவிடைகளை
கற்பிக்கலாகாதோவென்று, முன்னின்று- விநயந்தோற்ற முன்
னேவந்துநின்று, இரு- இரண்டு, கண்- கண்ணேறி, அதுக்குத்
தக்கமுற்றினவுமின்றிக்கே, இளம்- இளையதாயிருக்கிற, மூங்கில்-
மூங்கில்குருத்தை, வாங்கி- செவ்விகுன்றாதபடி ஸாவயாநமாக
வாங்கி, அருகு- அருகில், இருந்த- மலை முழைஞ்சுகளிற்கூட்டி
லே நிறைந்திருக்கிற, தேன்- தேனிலே, கலந்து- மூங்கில்குருத்
தும் தேனும் தன்னிலேயொன்றி ஒருநீராம்படி. தோய்த்து,
உனக்கு வேண்டுவார்க்குக் கொடாயென்று அது ஸநாதரித்து
நிற்க, நீட்டும்- இத்தனையு ஸ்வீகரிக்கவேணுமென்று ஸாதர
மாகக்கொடுக்கும், திரு- சிறப்பையுடைத்தான, வேங்கடங்கண்
டீர்- திருவேங்கடங்கிடீர், வான்- தேவத்தோடு, கலந்த-

மூ—வண்ணன் வரை. (௭௫)

வரைச்சந்தனக்குழம்பும் வான்கலனும்பட்டும் * விரைப்பொ
லிந்தவெண்மல்லிகையும் *— நிரைத்துக்கொண்டாதிக்கணிந்த
வறிவனடியிணையே * யோதிப்பணிவதுறும். (௭௬)

ஸ்ப்ருஹமாய்ச்சேர்ந்த, வண்ணன்- வடிவையுடையவன்வர்த்தி
க்கிற, வரை- மலை. (௭௫)

## ❁ எழுபத்தாறும்பாட்டு. ❁

அ—இப்படி வாசிகமாக கவிபாடி யுகப்பித்த வளவன்றிக்கே
அடிமைக்கீடான உபகரணங்களைத் தேடிக்கொண்டு வகுத்த
சேஷியான அவன்திருவடிகளிலே அடிமைசெய்யுமதுவே இவ்
வாத்மாவுக்கு ஹிதமென்கிறார்.

வரை- நல்ல ஆகாரத்திலுண்டான, சந்தனக்குழம்பும்-
சந்தநக் குழம்பும், அங்குத்தைக்கு ஸ்ப்ருஹமாம்படி யடைவே
யெடுத்து, வான்- பெருவிலையனான, கலனும்- ஆபரணங்க
ளும், பட்டும்- திருவரைக்குத்தகுதியான நல்லபரிவட்டங்களும்
விரை- பரிமளம், பொலிந்த- மிக்கிருப்பதாய், வெண்- கண்
ணுக்காகர்ஷகமான வெளுத்தநிறத்தை யுடைத்தான, மல்லி
கையும்- மல்லிகையுமாகிற விவற்றை, நிரைத்துக்கொண்டு-
உபாதேயமாம்படி வரைய அடைவேயெடுத்துக்கொண்டு, ஆதி
க்கண்- இவையழிந்துகிடக்கிற ஆதிகாலத்திலே, நின்ற- காரண
மாய்க்கொண்டு நின்றவனாய், அறிவன்- தன்பக்கல் இவன்
பண்ணின ஸுக்ருதலேசத்தை ஸர்வகாலம் நினைத்திருக்கும்
ஸர்வஜ்ஞனானவனுடைய, இணை- ஒன்றுக்கொன்று ஒப்பான, அ
டியே- திருவடிகளையே, ஓதி- வாயாறஸ்தோத்ரம்பண்ணி, பணி
வது- தலையாரவணங்குவது, உறும்- இவ்வாத்மாவுக்கு மிகவும்
சீரியது. (௭௬)

## ❁ எழுபத்தேழாம்பாட்டு. ❁

அ—இப்படி ஆச்ரயணத்திலே ஒருப்பட்டவர் அது தமக்கினிதாயி
ருக்கையாலே ஸம்ஸாரஸம்பந்தம் ஸாதநதசையிற் காட்டிலும் ஸாத்யதசை
யிற்சிறக்கும் ரஸமே யமையுங்கிடாய்நெஞ்சே? யென்கிறார்.

மூ—உறுங்கண்டாய்நன்னெஞ்சேயுத்தமன்நற்பாதம்* உறுங்கண்டாயொண்கமலந்தன்னால் *— உறுங்கண்டாயேத்திப்பணிந்தவன்பேரீரைஞ்ஞூறெப்பொழுதும் * சாற்றியுரைத்தல் தவம். (எஎ)

தவஞ்செய்து நான்முகனேபெற்றான் *
தரணிநிவர்ந்தளப்ப நீட்டியபொற்பாதம் *—
சிவந்ததன்கைபணைத்து மாரக்கழுவினான் * கங்கை நீர்

---

நல்- எனக்குமுன்னே பதறிவிழுகிநல்ல, நெஞ்சே- நெஞ்சே? நாம் விஊவரானஉமெயிலும் நம்மைநோக்கி இப்போது தன்னதுபேறாக வடிமைகொள்ளக்கடவ, உத்தமன்- வஉஷாதமனுடைய, நல்- யொமூரயொமூரென்று தரம்வையாதே எல்லாருக்கும் பற்றலாம்படியான நன்மையையுடைய, பாதம்- திருவடிகள், உறுங்கண்டாய்- சாலச்சீரியதொன்றுகிடாய் இப்படியிருக்கிற வவனுடைய திருவடிகளை, ஒண்- அழகிய, கமலந்தன்னால்- தாமரைப்பூவாலே, உறுங்கண்டாய்- வருத்தமறக்கிட்டி சூஷியிக்கலாம்கிடாய், ஏத்தி- வாயாலேஷூதித்து, பணிந்து- தலையாலேவணங்கி, அவன்- அவனுடைய, ஈரஞ்ஞூறுபேர்- மணவெஷிதாதிகளுக்கு வாசகமான ஆயிரம்திருநாமங்களையும், எப்பொழுதும்- ஸவகாலத்திலும், சாற்றி- எங்கும்வ்யாபிக்கும்படி, உரைத்தல்- சொல்லுகையாகிற, தவம்- தவஸு, 'ஸவஸவஸஙுதம்' என்னும்படி சுத்தஸாஸமாயிருப்பதொன்றாகையாலே, உறுங்கண்டாய்- மிகவும்சீரியதுகிடாய், திருநாமஞ்சொல்லுகையை தவமென்கிறது ஸவஸ்ஞன் கருத்தாலே. (எஎ)

## ❁ எழுபத்தெட்டாம்பாட்டு. ❁

அ—இப்படியிருக்கிற தவமெல்லாம் அநுஷ்டித்து ஸவெஸ்வரன் திருவடிகளை வருத்தமற ஷேிக்கப்பெற்றான் உதாசீனவனொருவனுமே கிடீ ரென்கிறார்-

தரணி- ஹூமியை, நிவர்ந்து- வளர்ந்து, அளப்ப- அளக்கைக்காக, நீட்டிய- நீட்டின, பொன்- ஸ்ரூவயமான, பாதம்- திருவடிகளை, கங்கைநீர்- 'ஸ்ரூஹீகாயசீவாநீயம்' என்கிற

மூ—பெய்தனைத்துப்பேர்மொழிந்துபின். (எஅ)
பின்னின்றுதாயிரப்பக் கேளான் *
பெருப்பணைத்தோள்முன்னின்றுதானிரப்பாள்

படியே ஹமவஷ்க்கியாலே யருகிலிருந்த யஉேயமான ஹம்ராஜத்தை, பெய்து- பணிமாறி, அனைத்து பேர்- அவனுடைய வெல்லாத்திருநாமங்களையும், மொழிந்து- வாய்படைத்த ப்ரயோஜநம்பெறச்சொல்லி, தன்- தன்னுடைய, சிவந்த- சிவந்தழகிய, கை. கைகள், அனைத்தும்- அடங்கலும், ஆர- உத்திவ்ருத்தப்ரயோஜநம்பெற்று வடிணமாம்படியாக, கழுவினன்- விளக்கினன், திருவடிகளை விளக்கப்பெற்றபின்பு ஹமவஷிநாமஸம்கீர்த்தநமாகிற இனிய தவமெல்லாக் குறைவறவநுஷ்டித்து வதாருவனொருவனுமே யதுஸமத்தோடே ப்ராப்யமாகப்பெற்றான் இவன் இனியதுசெய்ய அவன்தவமென்றிருக்கும் 'வணக்குடைத்தவநெறி' என்னக்கடவதிறே. (எஅ)

❋ எழுபத்தொன்பதாம்பாட்டு. ❋

அ—ஜமத்தையளந்துகொண்டு செயலையுடையனான ஸ்ரீவாமநனுடைய வ்ருத்தாந்தமானது தாயாரபேக்ஷிக்க மறத்துக்காட்டேறப்போன தசரதாத்மஜத் திருமகனுடைய இத்தன்மைக்கொக்குமென்கிறார்-

(தாய்) தாயாரான ஸ்ரீகௌஸல்யையார், (பின்நின்று) பின்றுடர்ந்துநின்று, (இரப்ப) வாக்வாத்ஸல்யையான நானுன்னைப்பிரிந்தால் ஜீவித்திருக்கவல்லேனோ! நீ காட்டுக்குப் போகவேண்டா? வென்றபேக்ஷிக்க, (கேளான்) அத்தைக் கேளானுமாய், அதுக்குமேலே (பெரும்) நீண்டு, (பணை) சுற்றுடைத்தான, (தோள்) தோளையுடையளாய், (மொய்) அழகிய, (மலராள்) பூவையிருப்பிடமாக வுடையளாகையாலே நிரதிஶயஸௌகுமார்யையான பிராட்டியானவள், (தான்) தான், (முன்நின்று) 'அக்ரதஸ்தே கமிஷ்யாமி' என்கிறவடியே முற்பட்டுநின்று, (இரப்பாள்) கருமுகையாலையைச் செவ்விபெறுத்தவென்று னெருப்பிலே யிடுமாப்போலே இந்த ஸுகுமாரமான திருமேனி

மூ—மொய்ம்மலராள் *— சொல்நின்றதோள்நலந்தான் நேரில்லாத் தோன்றல் * அவனளந்தநீணிலந்தா னத்தனைக்கும் நேர். (எசு)

கொண்டேகாட்டேறப்போகிறவின்று உம்மைப் பிரிந்திருக்கமாட்டேன், உமக்குமுன்னே போகக்கடவேனென்று ப்ரார்த்தியா நிற்க அத்தையும் கேளாதவனாய்த் தானோ? வென்றால் சொல்—'ஸ்ரீராமாயணம்' என்கிற ப்ரபந்தத்துக்கு, (நின்று) நேரே ப்ரதிபாத்யமாய்க்கொண்டு நின்று, (தோள்) தோளையுடையனாய், (நலம்) ஸௌகுமார்யத்தில் வந்தால், (நேரில்லா) தன்னையெண்ணினால், பின்னை இரண்டாம்விரலுக்காளில்லாதபடி ப்ரதாநனுமாயிருக்க, இவையித்தனையும் பாராமல் காட்டில் மிறுக்கையுங் கடைக்கணியாமல், (தோன்றல்) காட்டேறப்போன சக்ரவர்த்தித்திருமகனுடைய, (அத்தனைக்கும்) அந்தஸ்ஸாஹஸமெல்லாவற்றுக்கும், (அவன்) ஸ்ரீராமனானவன், (அளந்த) தானளந்துகொண்ட, (நீள்) பரப்பையுடைத்தான, (நிலம்) பூமி, (நேர்) ஒப்பாகப்போரும், அதாவது மாத்ருவசநத்தை மறுத்து பிராட்டியிரப்பைத் திரஸ்கரித்து, தன் ஸௌகுமார்யத்தைப் புரிந்துபாராமல் போகிறகாட்டில் மிறுக்கைக் கடைக்கணியாமல் பித்ருவசநபரிபாலநத்தையே புரஸ்கரித்து, மன்னும் வளநாடுகைவிட்டுக் காட்டையுகந்த சக்ரவர்த்தித்திருமகன் செயல்களுக்கு 'இடங்கை வலம்புரிநின்றார்ப்ப' இத்யாதிப்படியே ஸநகஸௌநகப்ரமுகரான ஸூரிகள் வயிறெரிச்சலையும் தன்திருவடிகள் ஸௌகுமார்யத்தையும் காடுமேடுமான அளக்கிற பூமியினுடைய கொடுமையையும் ஶுக்ரப்ரப்ருதிகளான நமுசிப்ரப்ருதிக ளெலைச்சலையும் பாராமல் ஆச்ரிதனான இந்த்ரன் ப்ரார்த்தனையைத் தலைக்கட்டுகைக்காகக் கல்லுங்கரடுமான வன்மாவையத்தை யளந்துகொண்ட ஸ்ரீவாமநனுடைய செயலானது ஸத்ருசமாமித்தனையென்கை. (எசு)

## எண்பதாம்பாட்டு.

அ—இப்படிப்பட்டுள்ள வவன்திருவடிகளி லடிமை ஸாதித்து ஸாதராதரத்தாலே நானங்கே ப்ரவணமானபடிகண்டால் பண்டு

மூ—நேர்ந்தேனடிமைநினைந்தேனதொண்கமலம் * ஆர்ந்தேனுன் சேவடிமேலன்பாய்*— ஆர்ந்தவடிக்கோலங்கண்டவர்க்கென்கொலோ * முன்னைப்படிக்கோலங் கண்டபகல். (அ௦)

அவன் வடிவழகைக்கொண் டநுபவிக்கப் பெற்றவர்கள் அப்போது என்பட்டார்களோவென்கிறார்-

(அடிமை) தேவர் திருவடிகளிலே ஸர்வவித கைங்கர்யத்திலே, (நேர்ந்தேன்) ஸ்வயமாகவே ஸமாஹிதமாக நேர்பட்டேன், அந்த கைங்கர்யத்துக்கு ப்ரதிஸம்பந்தியாய், (ஒண்) அழகிய, (கமலம்) தாமரைப்பூப்போலே நிரதிசயபோக்யமாயிருக்கிற, (அது) அந்தத்திருவடிகளை, (நினைந்தேன்) உபாஸநத்தாலேயநுஸந்தித்தேன், (அன்பாய்) நினைத்தபோதத்திலே பெருகிவருகிற ப்ரேமத்தையுடையேனாய், (உன்) வகுத்தசேஷியான தேவருடைய, (சே) சிவந்த, (அடிமேல்) திருவடிகளின்மேலே, (ஆர்ந்தேன்) பிரிக்கவொண்ணாதபடி பொருந்தினேன், (ஆர்ந்த) பூர்ணமான, (அடி) திருவடிகளின், (கோலம்) அழகிய, (கண்டவர்க்கு) கண்டநுபவித்தவர்களுக்கு, (முன்னை) இதுக்குமடியான, (படிக்கோலம்) வடிவழகை, (கண்ட) ஒன்றொழியாதபடி முழுநோக்குச்செய்து அநுபவிக்கப்பெற்ற, (பகல்) போது, (என்கொலோ) என்னாய்த்தோ, என்பட்டார்களோ! வென்கை. அன்றிக்கே ஆர்ந்தவடிக்கோலங்கண்டவராகிறார் சேஷபூதரானதாமாய், நான் திருவடிகளினழகைக் கண்டுபட்டபடிகண்டால் முன்பு இவ்வடிவழகைக் கண்டநுபவிக்கப்பெற்றவர்கள் என்படார்களோ வென்றுமாம், ஆர்ந்தவடிக்கோலத்ரிவிக்ரமத் திருவுலகளந்தருளின திருவடிகளைக்கண்டவர்களுக்கு முன்பு ஸாதாரணமான வொப்பனைகண்ட காலமன்றோவென்னுமாம், ஆர்ந்தேனுன்சேவடிமேலன்பாயென்று திருவடிகளிலே ஸ்நேஹத்தையுடையேனாய் அத்தாலே பரிபூர்ணனானேனென்னவுமாம்.

❁ எண்பத்தோராம்பாட்டு. ❁

அ—பண்டு அவனைக்கண்டநுபவிக்கப் பெற்றவர்களென்பட்

மூ—பகல்கண்டேன் நாரணனைக்கண்டேன் * கனவின்மிகக்கண்
டேன்மீண்டவனைமெய்யேமிகக்கண்டேன் *— ஊன்திகழுநேமி
ஒளிதிகழுஞ்சேவடியான் * வான்றிகழும் சோதிவடிவு. (அக)

டார்களென்று பழங்கிணறுவாருகிறதென்? இப்போது அவனைக்
கண்டு நான்றான்படுகிற பாட்டைப் பார்க்கமாட்டீர்களோ வெ
ன்கிறார்-

இது நெடுங்காலம் பகல்விரவாத ஸம்ஸாரகாளராத்ரியிலே
கண்கெட்டு முன்னடிதோற்றாதே திரிந்தநான் இப்போது 'ஸூர்ய
ஸஹஸ்ரஸந்நிபா' என்னும்படி, (பகற்கண்டேன்) இரவுவிர
வாத பகலாய்ச் சொல்லும்படியானதொரு நல்விடிவைக் கண்
டேன், ஸமவசாமெஜ்ஜுக்கு ஸயப்பட்டு மூப்பதுவிடத்திலே
போவதுவருவதாய்த் திரிகிற ப்ராதேஸிகனான ஆதித்யனன்றி
க்கே ஒருகாலத்திலும் போக்குவரத்தன்றிக்கே 'ஸாஸ்தாஜநாநாம்'
என்னும்படி. ஸர்வத்தையும் நியமித்துக்கொண்டு, (நாரணனை)
உபயவிபூதியாஜ்ஞையாலே ஸர்வஸ்ரீகனான நாராய
ணனாகிற வஸ்துவை, (கண்டேன்) கண்டேன், இந்த்ரியங்கள்
துணைசெய்யக்காண்கிற காட்சியன்றிக்கே (கனவில்) 'ஸ்வப்ந
யிதவ்யம்' என்னும்படி நேர்கொடுநேரே நெஞ்சாலேகாணப்படும்
ஸ்வப்நாவஸ்தையிலுங்காட்டில், (மிக) விஸதமாய், (மெய்யே)
ப்ரத்யக்ஷ ஸமாநாகாரமான மாநஸஜ்ஞாநத்தாலே, (மீண்டு)
இந்த்ரியங்களால் கலக்கவொண்ணாதபடி அழகியதாக மீண்டு,
(அவனை) அவனை, (கண்டேன்) கண்டேன், (உன்) வடிவழகு,
(திகழும்) விளங்காநின்றுள்ள, (சே) சிவந்த, (அடியான்) திரு
வடிகளையுடைய ஸர்வேஸ்வரனுடைய, (வான்) பரமாகாச
ஸப்தவாச்யமான பரமபதத்திலே, (திகழும்) விளங்காநின்று
ள்ள, (சோதி) தேஜஸ்ஸையுடைத்தான, (வடிவு) வடிவழகை
(கண்டேன்) ப்ரத்யபிஜ்ஞாஸமமாம்படி யழகிதாகக் கண்டேன்,
வான்றிகழுமென்றது தேஹத்தோடொக்க விளங்காநின்றுள்ள
திருவாழி யென்னவுமாம், ஸத்ருஸரீரத்திலே விளங்குமெ
ன்னுதல். (அக)

மூ—வடிக்கோலவாள் நெடுங்கண் மாமலராள் * செவ்விப்படிக் கோலங்கண்டகலாள்பன்னாள் *— அடிக்கோலிஞாலத்தாள்பின்னும் நலம்புரிந்ததென்கொலோ * கோலத்தாலில்லை குறை. (அஉ)

❁ எண்பத்திரண்டாப்பாட்டு. ❁

அ—வெறும் நாராயணனைக் கண்டோருமன்றிக்கே ஸ்ரீமானான நாராயணனைக் காணப்பெற்றேனென்கிறார்-

நாட்டிலழகடங்கலும் கோதாம்படி யழகுபடைத்த அவனாகிற கோதுகலவாத, (வடி) வடித்த, (கோலம்) அழகையும் வடிவிலேவடிவாய், (வாள்) ஒளிபெற்று, (நெடும்) ஸௌகுமார்யத்தளவிட வொண்ணாத மிக்க ஸௌந்தர்யத்தையுடைத்தான, (கண்) திருக்கண்களையுமுடையளாய், (மா) ஶ்லாக்யமான, (மலராள்) தாமரைப்பூவைப் பிறப்பிடமாக வுடையளாகையாலே ஸௌகுமார்ய ஸௌகந்த்யாதிகளைக் குறைவற வுடையளுமான பெரியபிராட்டியாரும், (செவ்வி) 'பிணையலரை' என்கிறபடியே செவ்வியே ஸ்வபாவமான, (படிக்கோலம்) அவன் வடிவழகை, (கண்டு) கண்டநுபவித்து, கண்ணைமாறவைத்தல் கால்வாங்குதல் செய்யமாட்டாதே யவ்வழகுவெள்ளத்திலே யாழங்காற்பட்டு, (பன்னாள்) 'இறையுமகலகில்லேன்' என்னும்படி காலதத்வமுள்ளதனையும், (அகலாள்) க்ஷணகாலமும் விஶ்லேஷிக்க க்ஷமையன்றிக்கே யிராநின்றாள், (ஞாலத்தாள்) க்ஷமையேவடிவான ஸ்ரீபூமிப்பிராட்டியானவள், (பின்னும்) தலைநீர்பாட்டிலே அநுபவிக்க இட்டுப்பிறந்த பேறளவுடையளான அவள் ஆழங்காற்பட் டழுந்துகிற படியைக் கண்டிருக்கச்செய்தேயும் அவளுமவனுமான சேர்த்தியைக் கண்ணழிவற அநுபவிக்கைக்கு அநுகூலமாக, (அடிகோலி) இலையகலப்படுத்துப் பாரித்து, (நலம்புரிந்தது) ஆசையைப்பண்ணிக்கொண்டு செல்லுகிறவிது, (என்கொலோ) ஏதாயிருக்கிறதோ, இதுக்கடி யிருவர்க்கும் பாற்றம்பொராமல் சேறுபாறு என்னவேண்டும்படி ஸௌந்தர்யவளவுபட்டிருக்கிற க்ஷுத்ரவிஷயங்கள் போலன்றிக்கே திரள்திரளாக விழிந்தாலும் குமிழ்நீருண்ணும்படி, (கோலத்தால்) அழகால், (குறை) குறைவு, (இல்லை) அற்றிருக்கைபிறே (அஉ)

மூ—குறைபாகவெஞ்சொற்கள் கூறினேன்கூறி *
மறையாங்கெனவுரைத்தமாலை *—
யிறையேனுமீயுங்கொலென்றேயிருந்தேனெனைப்பகலும் *

## ❁ எண்பத்துமூன்றாம்பாட்டு. ❁

அ—'பெருந்தமிழனல்லேன்பெருகு' என்று அவனுக்குக் கவி பாடப்பெற்ற பெருமதிப்பாலே முன்புசெருக்கி வார்த்தை சொன்னவர் இப்போது நாய்ச்சிமாரும் தானும் சேர்ந்திருக்கிற பெரியமேன்மையைக் கண்டுகூசி நாமிவ்விஷயத்தையோ கவிபாடப் பெருமதிப்பாலே யழிந்தது என்னஸாஹஸிகனோ! வென்று கீழ்ச்செய்தசெயலுக்கு அநுதபிக்கிறார்-

(மறை) அவன்படிகளையுள்ளபடி தறைகண்டு பேசவொருப்பட்ட வேதங்களானவை, (ஆங்கென) அதுவென்றுசொல்லுமித்தனைபோக்கி, (உரைத்த) இதமித்தமென்று வரிசெழுதிச் சொல்லமாட்டாத, (மாலை) பெருமையையுடைய ஸர்வேச்வரனை (குறையாக) அவாரிவாரணமாம்படியாக, வேதம்வழிந்த செவிக்கினிய செஞ்சொலன்றிக்கே (வெம்) கேட்டார் செவிவெடிக்கும்படியிருக்கிற வெட்டிய (சொற்கள்) சொற்களாலே, (கூறினேன்) சொன்னேன், (கூறி) இப்படிச்சொல்லி, விஷயவைலக்ஷண்யத்தைப் பார்த்தும் சொற்களின் வெம்மையைப் பார்த்தும் அநுதபிக்க வேண்டியிருக்க அது செய்யாத வளவன்றிக்கே (மாயன்கண்) ஆச்சர்யமான குணசேஷ்டிதங்களை யுடையவனானவனிடத்தில்நின்றும், (சென்று) உண்டாய்வரக்கடவதான, (வரம்) ப்ரஸாதமானது, (கருதி) பண்டு கவிபாடினவர்களுக்கு அவன் கொடுத்துப்போரும்படியை நினைத்து நான்பாடின கவிக்குப்பரிசிலாக, (இறையேனும்) ஏதேனும் சிறிதாகிலும், (ஈயுங்கொலென்று) தாராதோவென்று, (எனைப்பகலும்) அநேககாலமெல்லாம், (இருந்தேன்) ப்ரதீக்ஷித்துக் கொண்டே யிருந்தேன், விஷயவைலக்ஷண்யத்தையும் சொல்லின் பொல்லாங்கையும் பச்சையைநச்ச விருந்தபடியையும் நினைத்து என்னஸாஹஸிகனோ! என்று அநுதபிக்கிறார், பின்னை இவ

மூ—மாயன்கண்சென்றவரம். (அங)

வரங்கருதித்தன்னைவணங்காதவன்மை * யுரங்கருதிமூக்கத்தவனை *— நரங்கலந்தசிங்கமாய்க்கீண்ட திருவடி

ரொருவ்யாஜநத்துக்குக் கவிபாடினவரோ வென்னில்? இக்கவிபாட்டுக்காக அவனொருக்காலேறிட்டுகூடாக்ஷிக்குமாகில் அதுவும் ஸ்வரூபத்துக்குச்சேர்ந்த பெரியபேறென்றிருப்பாரொருத்தரிறே; அத்தாலே குறையில்லை. (சென்றவரம்) அவன்பக்கல் சென்றுபிறக்கக்கடவ வார்த்தை, அவனிறையேனும் ஈயுங்கொலென்று இருந்தேனென்றுமாம், (மறையாங்கென வுரைத்தமாலை) 'வாஸுதேவஸ்ஸர்வம்' என்கிறபடியே சொல்லும்வார்த்தைபெல்லாம் மறையென்னலாம்படி சொல்லுமவனென்னவுமாம்; இத்தால் அகஞ்செறிவில்பொல்லாங்கறியாதானொருவனைச் சொல்லப் பெற்றதோ ஸ்வரூபஜ்ஞனையிறே நான் மருட்டிச்சொல்விற்றென்கை. (அங)

❁ எண்பத்துநாலாம்பாட்டு. ❁

அ—விஷயவைலக்ஷண்யஞ் சொல்லில் பொல்லாங்கு முதலானவையெல்லாங்கிடக்கிடீர் விஷயத்தினுடைய ரஸ்யதையைப்பார்த்தால் சொல்லியல்லது நீக்கப்போமோ!வென்கிறார்-

(வரம்) தேவர்கள்பக்கல் பெற்றவரத்தை, (கருதி) தனக்கறுதியாகநினைத்து, (தன்னை) அந்த தேவர்களுக்கு மடியானபெருமையையுடையனான தன்னை, (வணங்காத) 'நநமேயம்' என்னும்படி வணங்காதே போந்தவனாய், (வன்மை) அந்ததேவர்கள்வரத்தால்வந்த மிடுக்கையும், (உரம்) தன்தோளாலேயெறிந்துகொண்ட மிடுக்கையும், (கருதி) தனக்குவகாரணமாகவுண்டென்றுகருதி, (மூக்கத்தவனை) அத்தால்வந்த மேனாணிப்பையுடையனான ஹிரண்யனை, (நரங்கலந்தசிங்கமாய்) சேராச்சேர்த்தியான நரஸிம்ஹங்களோடே கூடின வடிவையுடையனாய்க்கொண்டு, (கீண்ட) கிழித்துப் புகட்டவனாய், வாஸுவிஸதமான விரண்டுவடிவை யெடுத்துக்கொண்டவளவிற் பொல்லாதாயிருக்கை யன்றிக்கே (திருவன்) சேர்பாலுங்கண்ட

மூ—யிணையே * அங்கண்மாஞாலத்தமுது. (அச)

அமுதென்றும் தேனென்றுமாழியானென்றும் *
அமுதன்று கொண்டுகந்தானென்றும் *— அமுதன்னம்

சர்க்கரையும் கலந்தாப்போலே ஸுஸ்பர்ஸமான வழகை யுடையவனுடைய, (இணை) சேர்த்திபழகை யுடைத்தான, (அடியே) திருவடிகளே, ஸமுத்ரத்தில் தேவபோக்யமான அம்ருதம் போலன்றிக்கே, (அம்) அழகிய, (கண்) இடமுடைத்தான, (மாஞாலத்து) மஹாப்ருதிவியிலே, (அமுது) ஸர்வாத்மாக்களுக்கு புஜிக்கலாம்படி நிரதிஶயபோக்யமான அம்ருதம் 'மூர்க்கத்தவனை' என்று வாமனனபோது மஹாபலி ஹிரண்யனையென்றபடி. (அச)

❁ எண்பத்தைந்தாம்பாட்டு. ❁

அ—அவனுடைய ரஸ்யதையை அநுஸந்தித்தவாறே 'அமுதன்ன சொன்மாலையேத்தித் தொழுதேன்' என்கிறார்—

(அமுதென்றும்) நித்யபோக்யமான அம்ருதமென்றும்; (தேனென்றும்) ஸர்வரஸஸமவாயமான தேனென்றும், (ஆழியானென்றும்) நிரதிஶயபோக்யமான திருவாழியை யுடையனென்றும், (அன்று) அஸுரரையஞ்சி தேவர்கள் ஶரணம்புக்கவன்று, (அமுது) கடலில் ஸாரமான அம்ருதத்தை; (கொண்டு) அந்தக்கடலைக்கடைந்து வாங்கிக்கொண்டுகொடுத்து (உகந்தானென்றும்) இதுக்காகவாகிலும் நம்மைவந்து அடுக்கப்பெற்றோமே என்று ப்ரீதனானனென்றும், (நல்) 'ரஸோ வை ஸ:' 'ஸர்வரஸ:' 'ஸர்வகந்த:' 'யதஶ்சாவக்ர:' என்கிற ஶ்ருதிவாக்யங்களாலே சொல்லப்பட்ட விலக்ஷணனை; (மாலை) ஸர்வேஶ்வரனை, (ஏத்தி) ஆஶ்சர்யந் தோற்றப் புகழ்ந்து, (நவின்று) சொல்லி, எல்லாபோக்யதையும் தன் போக்யதையிலே பொதிந்திருக்கையாலே அமுதென்றுசொல்லப்படுகிற வவனையும் பொதிந்துகொண்டிருக்கையாலே, (அமுதன்ன) அம்ருதம்போலே நிரதிஶயபோக்யமா யிருந்துள்ள,

மூ—சொன்மாலையேத் தித்தொழுதேன் சொலப்பட்ட *
நன்மாலையேத்தி நவின்று. (அரு)

நவின்றுரைத்தநாவலர்கள் நாண்மலர்கொண்டு*
ஆங்கேபயின்றதனல்பெற்ற பயனென்கொல் *—
பயின்றார்தம்மெய்த்தவத்தால் காண்பரியமேகமணி
வண்ணனை * யான்எத்தவத்தால்காண்பன் கொலின்று. (அசு)

---

(சொன்மாலை) ஸூக்தங்களாலே, (ஏத்தி) புகழ்ந்து, (தொழுதேன்) திருவடிகளில் நிர்மலனாய்விழுந்தேன். (அரு)

❁ எண்பத்தாறும்பாட்டு. ❁

அ—அவன்தானே காட்டக்கண்ட வென்னோடொப்பர்களோ ஸாயநாநுஷ்டாநம்பண்ணிக் கண்டவர்களென்கிறார்—

(நவின்றுரைத்த) அவன்றிருநாமங்களை யாவரந்தோற்றப் பலகாலுஞ்சொல்லிக்கொண்டு, (நாவலர்கள்) ஸூஷ்மஸம்பயமறிந்து கவிபாடவல்ல ப்ரயோஜநாந்தரபரரான கவிகள், (நாண்மலர்) செவ்விப்பூக்களை, (கொண்டு) ஸம்பாதித்துக்கொண்டு, (ஆங்கே) அந்த ஸர்வேச்வரனிடத்திலே, (பயின்று) நெருங்கியாச்ரயிக்க, (அதனல்) அத்தால், (பெற்ற) பெற்ற, (பயன்) ப்ரயோஜநம், (என்கொல்) ஏதோ, (பயின்றார்தம்) இப்படிநெருங்கி ஸாயநாநுஷ்டாநம் பண்ணினருடைய, (மெய்) ஶரீரத்தை யொறுத்துப்பண்ணின, (தவத்தால்) தவஸ்ஸால், (காண்பரிய) காணவரியனைப், (மேகம்) மேகம்போலேயும், (மணி) நீலமணிபோலேயும் ச்யாமமான, (வண்ணனை) வடிவையுடையனுமான ஸர்வேச்வரனை, (யான்) அகிஞ்சனன் நான், (இன்று) இன்று, (எ) எந்த, (தவத்தால்) தவஸ்ஸாலே, (காண்பன்) கண்டநுபவிக்கப்பெற்றேன், அவன் காட்டக்கண்டேனித்தனையிறே யென்று கருத்து. (அசு)

❁ எண்பத்தேழாம்பாட்டு. ❁

அ—உம்முடைய பேற்றுக்கேற்றமென்னென்னில் நான் மஹா ஸூஜன காலமேதுடங்கி அடிமைச்சுவட்டோடுகூட வவன்படிகளை யநுபவிக்கப்பெற்றவனன்றோ வென்கிறார்—

மூ—இன்றுவறிகின்றேனல்லேன் * இருநிலத்தைச்சென்றுங்களந்ததிருவடியை *— அன்றுகருக்கோட்டியுள்கிடந்துகைதொழுதேன்கண்டேன் * திருக்கோட்டியெந்தைதிறம். (அஎ)

திறம்பிற்றினியறிந்தேன் தென்னரங்கத்தெந்தை *
திறம்பாவழிசென்றார்க்

---

(அன்று) ஒருவ்யாபாரத்தை யறிந்து அநுஸந்திக்கைக்கு யோக்யதையுங்கூட வில்லாதவன்று, (கருக்கோட்டியுள்) மஹாப்ரளய ஸமயத்துக்குள்ளே, (கிடந்து) கிடந்து, (திருக்கோட்டி) நீர்மைக்கெல்லை நிலமான திருக்கோட்டியூரிலே ஸந்நிஹிதனாய், ஸர்வஜ்ஞனான வென்னுடைய ஜாயமானகடாக்ஷத்தைக்கொண்டு நிர்ஹேதுகமாக விஷயீகரித்த, (எந்தை) என்ஸ்வாமியுடைய (திறம்) குணசேஷ்டிதாதிகளாகிற வ்யாபாரத்தை, (கண்டேன்) கண்டநுபவிக்கப்பெற்றேன், (கைதொழுதேன்) அநுபவத்துக்குப் போக்குவீடாகக் கைதொழுகைமுதலான அடிமைத்தொழிலிலு மந்வயிக்கப்பெற்றேன்; ஆனபின்பு, (இரு) பரப்பையுடைத்தான, (நிலத்தை) பூமியை, ஒருவரிரக்கவன்றிக்கே, (ஆங்கு) அங்கே, (சென்று) தானேசென்று, (அளந்த) அளந்துகொண்ட, (திருவடியை) திருவடியை, (இன்று) இன்றாக, (அறிகின்றேனல்லேன்) அறிகிறேனல்லேன். (அஎ)

## ❁ எண்பத்தெட்டாம்பாட்டு. ❁

அ—அவன்றானே விஷயீகரித்தார்க்கு அவனைக்கிடைக்குமித்தனை வேறுசிலர்க்குக் கிடையாதென்கிறார்-

திருத்தேர்த்தட்டிலே அர்ஜுநனொருவனுக்கு மொருகால் 'மாமேகம்' என்றுசொன்ன தம்முடைய நிரபேக்ஷோபாயபாவத்தை ஸர்வகாலத்திலும் ஸர்வர்க்கும் தூயம்செலுத்திக்கொண்டு, (தென்) அழகிய, (அரங்கத்து) கோயிலிலே, (எந்தை) அவதாரவசான ஸௌலப்யஸ்வாமியைக்கொண்டு பள்ளிகொண்டருளுகிற வென்ஸ்வாமியான பெரியபெருமாளுடைய, (திறம்பா) மற்றொன்றால் வஶிப்பிக்கவொண்ணாத, (வழி) நிரபேக்ஷோபாயமாகிற உபாயத்தைப்பற்றி, (சென்றார்க்கு) நடக்கு

மூ—கல்லால் *— திறம்பாச்செடிநரகை நீக்கித்தான் செல்வதன்
முன் * வானோர்கடிநகரவாசற் கதவு. (௮௮)

கதவிக்கதஞ்சிறந்தகஞ்சனை முன்காய்ந்து *
அதவிப்போர்யானையொசித்து *— பதவியாய்ப்

மவர்களுக்கு, (அல்லால்) ஒழிய, (திறம்பா) ஸங்கல்பத்தாலும் தொலைக்கவொண்ணாதபடி அபரிஹார்யமாய், (செடி) அடிதலைகண்டறுக்க வொண்ணாதபடி தூறுமண்டிக்கிடக்கிற, (நரகை) ஸம்ஸாரமாகிற நரகத்தை, (நீக்கி) தங்கள் ஸாதநாநுஷ்டானத்தாலே போக்கி, (தாம்) தாங்கள், (செல்வதன்முன்) சென்றுகிட்டுவதுக்குமுன்னே, (வானோர்) நித்யஸூரிகள் நித்யாநுபவம்பண்ணி வாழுகிறஸ்தலமாம், (கடி) ஸ்வயத்நஸாத்யமல்லாத அரணையுடையத்தான, (நகரம்) கலங்காப்பெருநகரின், (வாசற்கதவு) வாசலிற்கதவு, (திறம்பிற்று) தப்பிற்று, (இனி) இப்போது, (அறிந்தேன்) இத்தை நிரூபித்தறிந்தேன், (கடியென்று) பரிகைமாய், ஹேயதை விஞ்சின நரகமென்றுமாம், இத்தால் பகவத்க்ருதிஸாத்யம் பரவேசம், ஸ்வயத்நஸாத்யமன்றென்றபடி. (௮௮)

❁ எண்பத்தொன்பதாம்பாட்டு. ❁

அ—நீர் இப்படி சொல்லுகைக்கு நம்மைப்பற்றினார்க்கு நாமெங் கேயுதவக்கண்டீரென்ன விரோதியைப் போக்கியும் விரகாலே ஆச்ரிதர் காரியஞ்செய்யும்படியும் சொல்லி இதுவன்றோ வுன் படியென்கிறார்-

(சிறந்த) மிக்க, (கதம்) சீற்றத்தையுடையனை, (கஞ்சனை) கம்ஸனை, (கதவி) சீறி, (முன்) அவன் ஸந்நிதியிலே, (காய்ந்து) தன்கொலைதானே காணும்படிமுடித்து, (அதவி) தப்பிப்பிழைக்க விடமறும்படி யடர்த்து, (போர்) யுத்தோத்யுக்தமான, (யானை) குவலயாபீடத்தை, (ஒசித்து) அநாயாஸேந முறித்து விழவிட்டு, இப்படி மிடுக்குக்கொண்டு வ்யாவர்த்திக்க வொண்ணாதபடி ஔதார்யமென்பதொரு குணமெல்லாங்கிடைக்கையாலே, (பதவியாய்) நீர்மையை யுடையையாய்க்கொண்டு,

மூ—பாணியால் நீரேற்றுப் பண்டொருகால் மாவலியை *
மாணியாய்க் கொண்டிலையே மண். (அகூ)

மண்ணுலகமாளேனே வானவர்க்கும்

(பாணியால்) கொடுத்துவளர்ந்த கையாலே, (நீர்) உதகஜலத்தை, (ஏற்று) ஏற்றுவாங்கி, (பண்டொருகால்) முன்பொருகாலத்திலே, (மாவலியை) கொடுக்கையிலே தீக்ஷித்திருந்த மஹாபலியை, (மாணியாய்) இரப்பிலேதகணேறின ப்ரஹ்மசாரியாய்க்கொண்டு, (மண்) பூமியை, (கொண்டிலையே) அவன்பக்கல்நின்றும் வாங்கிக்கொண்டிலையோ, உன்னையாஶ்ரயித்தவஸுதேவர் தேவகியார் ஐவர் இவர்களுக்கு விரோதியைப்போக்கி காயஞ்செய்துகொடுத்திலையோ வென்றபடி, (கதவுகை) சிறுகை, (அதவுகை) நெருக்குகை 'கதவிக்கதஞ்சிறந்து' என்றுவாங்யானபோது கோபத்தாலே சிறந்து அழகியனுயென்று பொருளாகக்கடவது, பதவியென்றது (பதவியென்று) வழியாய் கம்ஸனைக்கொன்றாற்போலே மூலையடியேயன்றிக்கே வழிகொடு வழியென்னவுமாம். (அகூ)

❀ தொண்ணூறுப்பாட்டு. ❀

அ—நாம் ஆஶ்ரிதருக்குச்செய்த காரியங்களை வகைபிட்டுச்சொல்லுகிறதென் உமக்குப்பெறவேண்டுவது சொல்லீரென்ன உன்னையாஶ்ரயித்தபோதே யெல்லாவபேக்ஷிதங்களும் பெற்றேனன்றோவென்கிறார்—

திருமாலை- ஸ்ரீய:பதியாய், செம்- வாத்ஸல்யாதிஶயத்தாலேயானசிவந்த, கண்- திருக்கண்களையுமுடையனைப், நெடியானை- 'ஸ்ணம்வுஹ்வஹம்' என்னும்படி ஆஶ்ரிதவிஷயத்திலெல்லாஞ்செய்தாலு மொன்றும் செய்யப்பெற்றிலோ மென்றுருகி செஞ்சுபதண்பதமென்றிருக்குமவனைப், எங்கள்- எங்களுக்கு, பெருமானை- ஸ்வாமியானவனை, நண்ணி- கிட்டி, கைதொழுதபின்- அஞ்ஜலிபந்தத்தைப்பண்ணி ஆஶ்ரயித்தபின்பு, மண்உலகம்- ஸம்ஸாரவர்த்திதயான லீலாவிபூதியை, ஆளேனே- நானிட்டவழக்காக நிர்வஹியேனோ, வானவர்க்கும்- நித்யஸூரி

மு—வானவனைப் * விண்ணுலகம் தன்னகத்துமேவேனே *—
நண்ணித்திருமாலைச்செங்கணெடியானை *
எங்கள்பெருமானைக் கைதொழுத பின். (சுo)

பின்னால்நரகம் சேராமல்பேதுறுவீர் * முன்னால்வணங்க
முயல்மினோ *—பன்னூல்அளந்தானைக்கார்கடல்சூழ்ஞாலத்தை*
எல்லாம் அளந்தானவன் சேவடி. (சுக)

களுக்கும் அவ்வருகான, வானவனை- பெருமையையுடைய
னைக்கொண்டு, விண்ணுலகத்து- பரமபதத்திலே. மேவே
னே- காமதகமுள்ளதனையும் ஸம்பாதனைப் பொருந்தி
யிரேனோ உன்னளவில் சுருஷிபண்ணினால் மண்ணோ
டேவிண்ணுமாளுகை பெரியபணிபோவென்றபடி. (சுo)

❁ தொண்ணூற்றோம்பாட்டு. ❁

அ—ஆச்ரயியானபின்பு ஸ்ரீவிச்லேஷ ஸம்பந்தம்
நரகமொருவகைத்தப்பாது ஆனபின்பு அவன்றிருவடிகளைவண
ங்கப்பாருங்கோளென்கிறார்-

பல்- ச்ருதிஸ்ம்ருத்யாதிகளான பலவகைப்பட்ட, நூல்-
சாஸ்த்ரங்களாலும், அளந்தான்- யதாவாக வறுதியிடப்பட்டிருக்
குமவனை, கார்- கறுத்த, கடல்- கடலாலே, சூழ்- சூழப்பட்
டிருக்கிற, இ- இந்த, ஞாலத்தையெல்லாம். ப்ருதிவியையெல்லாம்,
அளந்தானவன்- அளந்துகொண்ட ஸௌலப்யத்தை யுடையனா
னவனுடைய, சே- சிவந்த, அடி- திருவடிகளை, பின்னால். ஸ்ரீ
ரவிச்லேஷத்துக்குப்பின்பு- அரு- பொறுக்கவொண்ணாத, நர
கம்- நரகங்களில், சேராமல். சென்றுகிட்டாதபடியாக வா
வமமான நரகம் வரிச்செய்வதென்னென்று அஞ்சி, பேது
றுவீர்- அறிவுகலங்குகிறீங்கள், பின்னைச்செய்கிறோமென் றாறி
யிராமல், முன்னால்- ஒருக்ஷணமாகிலும் முற்பட, வணங்க –
ஆச்ரயிக்க, முயன்மின்– உத்ஸாஹியுங்கோள். (சுக)

❁ தொண்ணூற்றிரண்டாம்பாட்டு. ❁

அ—அவனையாச்ரயிக்க வுங்களுக்கபேக்ஷிதமான புருஷார்
த்தங்களெல்லாங்கிடைக்கும் ஆச்ரயியுங்கோளென்கிறார்–

மூ— அடியால் முன்கஞ்சனைச்செற்று * அமரரேத்தும் படியான் கொடிமேல்புள்கொண்டான் *— நெடியான்றன் நாமமேயேத்துமின்களேத்தினால் * தாம்வேண்டுங்காமமேகாட்டுங்கடிது. (௯௨)

கடிதுகொடுநரகம்பிற்காலும் செய்கை *

அடியால்- 'பாதபங்கயமே தலைக்கணியாய்' என்று என்போல்வார் ஆஶ்ரயித்துக்கிடக்குமதாய் நிரதிஶயபோக்யமான திருவடிகளாலே அவன்நினைத்தவஞ்சனமவனோடேயாம்படி, முன்- ஏற்கவே, கஞ்சனை- கம்ஸனை, செற்று- உதைத்துமுடித்து, அந்தஸ்வபாவத்துக்குத் தோற்று, அமரர்- ப்ரஹ்மாதிதேவர்கள், ஏத்தும்- தேவராலே எங்கள்குடியிருப்புப்பெற்றோம் என்று வாய்விட்டுப்புகழும்படியான, படியான்- ஸ்வபாவத்தையுடையனாய், கொடிமேல்- ரக்ஷணத்துக்குக் கட்டின கொடிமேலே, புள்கொண்டான்- ஸாமயஜ்ஜன் என்னும்படியெடுக்கப்பட்ட பெரியதிருவடியையுடையனாய், நெடியான்றன்- தன்பக்கலோரடிவர நின்றவர்களை நெடுகநினைத்துக்கொண்டிருக்கும் ஸ்வபாவனானவனுடைய, நாமமே- திருநாமங்களையே, ஏத்துமின்கள்- சொல்லிவாய்விட்டுப் புகழுங்கோள், ஏத்தினால்- இப்படி புகழ்ந்தால், தாம்- தந்தாமுக்கு, வேண்டும்- அபேக்ஷிதமான, காமம்- ஐஶ்வர்யகைவல்ய பகவல்லாபங்களாகிற ஸகலபுருஷார்த்தங்களையும் ஏத்தின வாய்மூடுவதுக்குமுன்னே, கடிது- ஶீக்ரமாக, காட்டும்- கைப்படும்படி காட்டித்தரும், கடிதேத்துமினென்றுமாம். (௯௨)

## தொண்ணூற்றுமூன்றாம்பாட்டு.

அ— க்ரூரமான நரகம் வந்துகிட்டுவதுக்குமுன்னே நிரதிஶயபோக்யனாய் ப்ரதிகூலஹந்தாவானவனை விரும்பியேத்துங்கோளென்கிறார்-

கொடு- க்ரூரமான, நரகம்- நரகம், கடிது- முதலிலேகண்கொண்டு காணவொண்ணாதபடி சாலவெவ்வியதாயிருக்கும், பிற்காலும்- பின்னும், செய்கை- க்ரூராநுஷ்டானமாக; 'சேவதக்குவார்போலப்புகுந்து' என்கிறபடியே யமபடர் பண்ணக்-

ழ்—கொடிதென்றது கூடாமுன்னம் *—
வடிசங்கம்கொண்டானைக் கூந்தல்வாய்கீண்டானை *
கொங்கைநஞ்சுண்டானையேத்துமினோ வுற்று. (௯௩)

உற்றுவணங்கித்தொழுமின் *
உலகேழும் முற்றும் விழுங்கும் முகில் வண்ணன் *—
பற்றிப்பொருந்தாதான் மார்விடந்துபூம் பாகடத்துள்

---

சடவநலிவுகள், கொடிதென்று- மிகவும் துஸ்ஸஹமாயிருக்குமென்று அவற்றையநுஸந்தித்து, அது- நரகவாஸமும் அவர்கள்பண்ணும் நலிவும், கூடாமுன்னம்- வந்துகிட்டுவதுக்குமுன்னே எதிரிகளைமுடிக்கும், படி- ஸௌர்யாதியையுடைய, சங்கம்- ஸ்ரீபாஞ்சஜந்யத்தை, கொண்டானை- உடையனாய், கூந்தல்- கேஸியினுடைய, வாய்- வாயை, கீண்டானை- கிழித்துப்புகட்டவனாய், கொங்கை- பூதனையினுடையமுலையில், நஞ்சு- நச்சுப்பாலை, உண்டானை- உண்டு அவளைமுடித்துப்புகட்டவனை, உற்று- மேலெழவன்றிக்கே ஸூக்ஷ்மமாக வுறைத்துநின்று, ஏத்துமின்- ஸ்தோத்ரம்பண்ணுங்கோள், வடிசங்கம்- அழகியஸங்கமென்னவுமாம். (௯௩)

❀ தொண்ணூற்றுநாலாம்பாட்டு. ❀

அ—என்னுடைய நெஞ்சுகண்டவர்களே ஏத்துகிறபடி அப்படியே நீங்களும் ஜகத்ரக்ஷணஸ்வபாவனாய் நிரதிஸயஸௌஹார்த்தனானவனை ஏத்துங்கோளென்கிறார்-

உலகேழும்- ஸப்தத்வீபாதிகளான ஸகலலோகங்களையும், முற்றும்- ஒன்றும் பிரிகதிற்படாதபடி, விழுங்கும்- திருவயிற்றிலே வைத்துநோக்கும் ஸ்வபாவனாய், அத்தால்வந்த ஹர்ஷமும் நிழலிட்டுத்தோற்றும்படி யிருக்கிற, முகில்வண்ணன்- வர்ஷுகவலாஹகம்போன்ற வடிவையுடையனாய், பற்றி- பிடித்தபிடியே பிணமாம்படிபிடித்து, பொருந்தாதான்- தன்னுடன் பொருந்தாத ஹிரண்யனுடைய, மார்வு- மார்வை, இடந்து- இரண்டு கூறாகப் பிளந்துபுகட்டு, பின்னுமாஸ்ரிதவிரோதிகளைப் போக்குகைக்காக, பூ- நிரதிஸயபோக்யமான, பாடகத்துள்- திருப்

மூ—இருந்தானை * ஏத்துமென் னெஞ்சு. (௯௪)

என்னெஞ்சமேயானென் சென்னியான் *
தானவனைவன்னெஞ்சங்கீண்டமணி

பாடகத்திலே, சிறுக்கனுக்கு உதவினபடியை யெல்லாருங்காணவேணுமென்று, இருந்தானை- எழுந்தருளியிருந்த ஸர்வேச்வரனை, என்- என்னுடைய, நெஞ்சு- நெஞ்சானது, ஏத்தும்- இவ்விவஸ்ஸாவங்களைச் சொல்லிப் புகழாநிற்கும், இப்படியே நீங்களுமுங்கள் ஸ்வயோக்யதையை நினைத்து பிற்காலியாதே, உற்று- கிட்டிநின்று, வணங்கி- ஸாஷ்டாங்கநதராய்த் திருவடிகளிலேவிழுந்து, தொழுமின்- அஞ்ஜலிபந்தத்தைப்பண்ணி யாச்ரயியுங்கோள். (௯௪)

❁ தொண்ணூற்றைந்தாம்பாட்டு ❁

அ—ஜகத்காரணபூதனாய் ஸர்வலோகசரண்யனானவன் திருவத்தியூரிலே நின்றருளி என்னுடைய ஸர்வாவயவங்களிலும் வந்துபுகுந்தானென்கிறார்-

முன்னம்- 'ஸதேவஸோம்யேதமக்ர ஆஸீத்' என்கிறபடியே ஸ்ருஷ்டிப்ராக்காலத்திலே அழிந்தஜகத்தை ஸ்ருஷ்டிக்கைக்காக, சேயூழியான்- காலோபலக்ஷிதமான ஸமஸ்தவஸ்துக்களை சரீரமாகக்கொண்டு நின்றவனாய், இப்படி ஸ்ருஷ்டித்தவளவில் தன்னைவழிபடாதே இவை அதிப்ரவ்ருத்தமானவாறே காலசேஷமாம்படி, ஊழிபெயர்த்தான்- இவற்றை ஸம்ஹரித்தவனாய் ஸ்ருஷ்டமானஜகத்தை ரக்ஷிக்கைக்காக, உலகு- லோகத்திலுள்ளவர்கள், ஏத்தும்- இருந்ததேகுடியாக வேத்தி ஆச்ரயிக்கும்படி, ஆழியான்- திருப்பாற்கடலிலே அநிருத்தரூபியாய்க்கொண்டு கண்வளர்ந்தருளினவனாய், அங்குநின்றும் நரஸிம்ஹரூபியாய் வந்தவதரித்து, தானவனை- ஆஸுரப்ரக்ருதியான ஹிரண்யனுடைய, வன்- தன்உக்ரமான வடிவைக்கொண்டு மிளகாதபடி கடினமான, நெஞ்சம்- ஹ்ருதயத்தை, கீண்ட- கிழித்துப்புகட்டவனாய், சிறுக்கன் விரோதி போகப்பெறுகையாலே, மணி- நீலமணிபோலே யிருண்டு

ரு—வண்ணன் *— முன்னம் சேயூழியானூழி பெயர்த்தான் * உலகேத்தும் ஆழியானத்தியூரான். (௯௫)

அத்தியூரான்புள்ளையூர்வான் * அணிமணியின் துத்திசேர்நாகத்தின்மேல் துயில்வான் *— முத்திமறையாவான் மாகடல்நஞ்சுண்டான்றனக்கும் * இறையாவான்

---

குளிர்ந்த, வண்ணன்- வடிவையுடையனுப், அத்தியூரான்- அக்காலத்தின் பிற்பட்டாரைடம் ரக்ஷிக்கைக்காகத் திருவத்தியூரிலேவந்து நின்றருளின நீர்மையிலேற்றத்தை யுடையவன், 'இடவகைகளிகழ்ந்திட்டு' என்கிறபடியே இந்தத்திருப்பாற்கடலில் திருவத்தியூராகிற இடங்களையுபெக்ஷித்து ஸஹஸ்ரிஹோமாஸமாசப் பலவடிவெடுத்தாப்போலே என்னை யநுபவிக்கைக்காகப் பலவடிவெடுத்துக்கொண்டு 'நிலைபேராதென்னெஞ்சத்து' என்னும்படி, என்- என்னுடைய, நெஞ்சம்- ஹ்ருதயத்திலே, மேயான்- பொருந்தி நித்யவாஸம்பண்ணுகின்றான், 'தலைமேல தாளிணைகள்' என்னும்படி, என்- என்னுடைய, சென்னியான்- உத்தமாங்கத்திலும் விரும்பி வர்த்தியாநின்றான், ஒருவனுடைய ஸந்நிவேசமிருக்கும்படியே யென்று விஸ்மிதராகிறார்- (௯௫)

❁ தொண்ணூற்றாறும்பாட்டு. ❁

அ—உபயவிபூதியுக்தனான பெரியமேன்மையை யுடையவன்கிடீர் என்னையிப்படி விரும்புகிறானென்கிறார்-

(புள்ளை) பெரியதிருவடியை, (ஊர்வான்) மேற்கொண்டு நடத்துமவனுப், (அணி) அணியப்பட்ட, (மணி) மாணிக்கங்களும், (இன்) அழகிய, (துத்தி) பொறிகளும், (சேர்) சேர்ந்திருக்கிற (நாகத்தின்மேல்) திருவனந்தாழ்வான்மேலே, (துயில்வான்) பள்ளிகொண்டருளுமவனுய், (முத்தி) மோக்ஷப்ரதிபாதகங்களான, (மறையாவான்) வேதாந்தவாக்யங்களாலே ப்ரதிபாதிக்கப்படுமவனுய், (மா) பெரிய, (கடல்) கடலிற்பிறந்த, (நஞ்சு) விஷத்தை, (உண்டான்றனக்கும்) பானம்பண்ணி அந்தஸாமர்த்யத்தாலே தன்னை ஸர்வஜ்ஞனாக அபிமானித்திருக்கிற ருத்ரனுக்கும், (இறையாவான்) ஸர்வஜ்ஞனனெம்பெருமான்,

மூ—எங்கள் பிரான். (கூகூ)

எங்கள்பெருமானிமையோர்தலைமகன்நீ * செங்கணெடுமால் திருமார்பா *— பொங்குபடமூக்கிலாயிரவாய்ப்பாம்பணைமேல் சேர்ந்தாய் * குடமூக்கில்கோயிலாக் கொண்டு. (கூள)

இப்படி ஸகலவிஸஜாதீயனுக்குனுப் வேதாந்தவேத்யனான தன்பெருமையபாராதே, (எங்கள்) எங்களுக்கு, (பிரான்) உபகாரம் பண்ணுமவனுக்கொண்டு, (அத்தியூரான்) திருவத்தியூரிலே வந்தருளினான் ஸூரிகளிற்றலைவரான திருவடி, திருவனந்தாழ்வானைச் சொல்லுகையாலே நித்யவிஸஜாதீயாமம் சொல்லிற்று, ஸம்ஸாரிகளிற்றலைவரான ராகூஜனைச் சொல்லுகையாலே லீலாவிஸஜாதீயாமம் சொல்லிற்றன்கை, 'முத்தீமறையாவான்' என்று வாமனபோது தேதாஸ்தையை ப்ரதிவாதிக்கிற வேதத்தாலே ஸநாராயணதயா ப்ரதிவாதிக்கப்படுமவனென்று பொருளாகக்கடவது. (கூகூ)

❁ தொண்ணூற்றேழாம்பாட்டு. ❁

அ—என்னைவிஷயீகரிக்கைக்காகத் திருக்குடந்தையிலே ஸாவதானுப்வந்து பள்ளிகொண்டருளினனென்கிறார்—

(திரு) எங்களை அடிமைகொள்ளுகைக்கடியான பெரியபிராட்டியாரை, (மார்பா) திருமார்பிலேயுடையவனே, (இமையோர்தலைமகன்) அயர்வறுமமரர்களதிபதியாய், (செம்) அவர்களுக்கு ஸௌம்யமான சிவந்த (கண்) திருக்கண்களையுடைய, (நெடு) ஸர்வாதிகனான, (மால்) ஸர்வேஸ்வரனுப், (எங்கள்) ஆஸ்ரிதரான வெங்களுக்கு, (பெருமான்) ஸ்வாமியான, (நீ) நீ, எங்களை ஸ்வீகரிக்கைக்காக, (குடமூக்கு) திருக்குடந்தையை, (கோயிலாக்கொண்டு) கோயிலாகக்கொண்டு, (பொங்கு) திருமேனிஸ்பர்ஸத்தாலே விகஸிதமான, (படம்) பணங்களையும், (மூக்கின்) திருமூக்கையுமுடையனுப், ஸநாதனஜநிதஹர்ஷத்துக்குப்போக்குவிட்டிடத்துகைக்கு, (ஆயிரவாய்) ஆயிரம்வாயையுடையனுமான, (பாம்பு) திருவனந்தாழ்வானுகிற, (அணைமேல்) படுக்கையின்மேலே, (சேர்ந்தாய்) பள்ளிகொண்டருளினுப். (கூள)

மூ—கொண்டுவளர்க்கக்குழவியாய்த்தான்வளர்ந்தது * உண்டது
லகேழுமுள்ளொடுங்க *— கொண்டுகுடமாடிக்கோவலனாய்மேவி *
என்னெஞ்சம் இடமாகக்கொண்டவிறை. (௯௮)

இறையெம்பெருமானருளென்று *

---

## ❁ தொண்ணூற்றெட்டாம்பாட்டு. ❁

அ—தம்மை விஷயீகரித்த ஸர்வேச்வரனுடைய அகடிதகடநாஸாமர்த்யமும் குடக்கூத்தாடுகைமுதலான திவ்யசேஷ்டிதங்களையநுஸந்திக்கிறார்-

(கோவலனாய்) இடையனாய் வந்துபிறந்தருளி, (குடங்கொண்டாடி) ஜாத்யுசிதமாக ஐச்வர்யச்செருக்காலே குடமெடுத்துக்கூத்தாடி, (மேவி) அந்தக்குடக்கூத்தாடின சுவட்டோடே இடைவெளியிற் பொருந்திக்கொண்டு, (என்) என், (நெஞ்சம்) ஹ்ருதயத்தை, (இடமாகக்கொண்ட) தனக்கிருப்பிடமாகக்கொண்ட, (இறை) ஸர்வஸ்வாமியான ஸர்வேச்வரன், (கொண்டு) சிலரெடுத்துக்கொண்டு, (வளர்க்க) சீராட்டிவளர்க்கவேண்டியிருக்கிற, (குழவியாய்) சிசுரூபமான வடிவையுடையனாய்க்கொண்டு, (தான்) தான், (வளர்ந்து) வளர்ந்து, (அது) அத்தசையிலே, (உள்ளொடுங்க) திருவயிற்றுக்குள்ளே ஒருபுடையிலே அடங்கும்படி, (உண்டது) அமுதுசெய்தது, (உலகேழும்) ஸகலலோகங்களையும், கொண்டவடிவின் சிறுமையையுமுண்டலோகத்தின் பெருமையையுமதுதான் திருவயிற்றிலொருபுடையிலே யடங்கினபடியையு மிதோராச்சர்யமிருக்கும்படியேயென்று விஸ்மிதராயநுஸந்திக்கிறார். (௯௮)

## ❁ தொண்ணூற்றொன்பதாம்பாட்டு. ❁

அ—ப்ரயோஜநாந்தரபரரான தேவர்களுக்கு கார்யஞ்செய்யும்படி சொல்லுகிறார்-

(இமையோர்) 'ஸர்வோஹம்' என்று காளமூதித்திரிகிற ஈச்வராபிமாநிகளான ப்ரஹ்மாதிதேவர்கள், தங்கள் ஈச்வராபிமாநத்தையுமூதின காளத்தையும்புகட்டு, (எம்பெருமான்) எங்களுக்குவகுத்தஸ்வாமியான, (இறை) ஸர்வேச்வரனை, (அருளென்று)

மூ—இமையோர் முறைநின்று மொய்மலர்கள் தூவ *—
அறைகழல்சேவடியான் செங்கணெடியான் *
குறளுருவாய்மாவடிவில்மண் கொண்டான் மால். (௯௯)

மாலேநெடியோனேகண்ணனே * விண்ணவர்க்குமேலாவியன்

---

எங்கள்பக்கலிலே க்ருபைபண்ணியருளவேணுமென்று ப்ரார்த்தித்துக்கொண்டு, (முறைநின்று) அவன்சேஷியும் தாங்கள்சேஷபூதருமாகிற முறையிலேநின்று, (மொய்) அழகிய, (மலர்கள்) புஷ்பங்களை, (தூவ) ஸமர்ப்பணமாகப் பணிமாறிக்கொண்டாச்ரயிக்க, (அறை) த்வனியாநின்றுள்ள, (கழல்) வீரக்கழலையுடைத்தான, (சே) சிவந்த, (அடியான்) திருவடிகளை யுடையனாய், (செம்) வாத்ஸல்யப்ரகாசகமான சிவந்த, (கண்) திருக்கண்களையுடைய, (நெடியான்) ஸர்வாதிகனான ஸர்வேச்வரன், (மால்) அந்த தேவர்கள்விஷயத்திலே மதகுதிறந்து பாய்கிற வ்யாமோஹத்தை யுடையனாய்க்கொண்டு, (குறளுருவாய்) ஸ்ரீவாமநாவதாரமாய்வந்து திருவவதரித்தருளி லோகமடங்கவிழுங்கும்படி, (மா) மிகவுறவளர்ந்த, (வடிவின்) வடிவையுடையனாய்க்கொண்டு, (மண்) பூமியை, (கொண்டான்) அளந்துகொண்டான், (முறைநின்று) ந்யாயமாக நின்றென்னவுமாம்.

❀ நூறாம்பாட்டு. ❀

அ—ப்ரயோஜநாந்தரபரர் நம்மை யாச்ரயிக்கும்படி சொன்னீர் உமக்குச்செய்யவேண்டுவது சொல்லீரென்ன, கொள்கொம்பூடப்படர்ந்த வன்பை யாச்ரயித்தளவாக்கித் தரவேணுமென்கிறார்—

(மாலே) ஸௌசீல்யவாத்ஸல்யகுணங்களால்வந்த பெருமையையுடையனாய், (நெடியானே) விபூதியோகத்தால் வந்த வைபவத்தை யுடையனாய், (கண்ணனே) ஸர்வசேதநாசேதநவஸ்துக்களுக்கும் நிர்வாஹகனாய், (விண்ணவர்க்கு) பரமபதவாஸிகளான நித்யஸூரிகளுக்கு, (மேலா) அவ்வருகு பட்டிருக்குமவனாய், அவர்களுக்கும்படி, (வியன்) ஆச்சர்ய

ரூ — துழாய்க்கண்ணியனே * — மேலாய்விளவின்காய் கன்றினால் வீழ்த்தவனே * என்றன் அளவன்றால்யானுடையவன்பு. (௧00)

பொய்கையாழ்வார்திருவடிகளேசரணம்.

---

யமான, (துழாய்க்கண்ணியனே) திருத்துழாய்மாலையாலே யழகுபெற வொப்பித்துக்கொண்டிருக்குமவனாய், இப்படியிருந்தவைத்து, (மேலாய்) க்ருஷ்ணனாய்வந்தவதரித்து, (விளவின்) ஸுராவிஷ்டமாய் நின்ற விளாவின், (காய்) காயை, (கன்றினால்) ஸுரமயமான கன்றாலே, (வீழ்த்தனே) விழவிட்டவனே, (யானுடைய) உன்பக்கல் நானுடையேனான, (அன்பு) ப்ரேமம், (என்றனளவு) ஆஶ்ரயஸ்தனான வென்னளவிலே, (அன்று) அடங்கிநிற்பதொன்றன்று, மதியழியாதபடி யத்தை யகஞ்சுரிப்படுத்தித் தந்தருளவேணும், ஸர்வா ஆஶ்ரிதவ்யாமோஹனாய் அந்த வ்யாமோஹத்துக் கெல்லையில்லாதபடி யிருக்குமவனாய் அந்த வ்யாமோஹம் ப்ரேரிக்க க்ருஷ்ணனாய்வந்தவதரித்து ஆஶ்ரிதருக்கு ஸுலபனாயிருக்குமவனாய், இன்னிலையிலே நிருபாதிகளுக்கு மவ்வருகான பெருமையை யுடையனாய், ஸௌஸ்யஸூசகமான திருத்துழாய்மாலையாலே ஸுலங்க்ருதனாய், விளாவாய்நின்ற ஸுரனைக்கன்றாய் நின்ற ஸுரனாலே எறிந்துவிழவிட்டு இரண்டையும் முறித்துப் புகட்டாற்போலே என்விரோதியிடைப் போக்கினவனே, எனக்குன்பக்கல் ப்ரேமமென்னளவன்று இத்தை யமைத்தருளவேணு மென்கிறாராகவுமாம். (௧00)

பூதத்தாழ்வார்திருவடிகளே சரணம்.

ஜீயர்திருவடிகளேசரணம்.

இரண்டாந்திருவந்தாதி மூலமும் உரையும் ஸம்பூர்ணம்.

---

